*so light*
*so refreshing...*
*so utterly lovely*

# FACE POWDER

# MAX FACTOR
HOLLYWOOD

It puffs on so easily, blends so perfectly... adheres so well, you'll really be amazed. Yes, the exquisite matching shades of Max Factor Hollywood Face Powder... its silky-soft texture and its airy lightness ...offer you a truly new complexion sensation that will make you look lovelier...feel better, too.





Available at all Leading
Cosmetic and General Stores

**GLYNIS JOHNS**
**in RKO'S**
**"ALL MINE TO GIVE"**

SOLE AGENTS IN INDIA: ORIENT COSMETICS PRIVATE LTD; MADRAS, BOMBAY CALCUTTA

Aiyars ; FP 8






"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

# இந்தக் கவசம் உங்களைப் பாதுகாக்கிறது!







ஜாக்கிரதையாயிருங்கள்!

இனிமேல் நஷ்ட வியாபாரத்துடன் வீடு திரும்புவீர்கள். கவலை வேண்டாம் இந்தக் கவசம் உங்களைப் பாதுகாக்கும

எப்படியென்று நீங்கள் கேட்கலாம்? இதற்குப்பதில் மிகச்சுலபம். இந்தக் கவசம் உங்களுக்குப் பெரகான் புடவைகளைப் பரிச்சியம் செய்விக்கும். பெரகான் கிரயச் சீட்டுடன் பெரகான் பெட்டியிலிருந்தே எடுத்தாலும், அது அசல் பெரகான் புடவையாய் இருக்கும் என்பது நிச்சயமில்லை. அது அசல் பெரகான் புடவை என்பதற்கு அடையாளம் தங்க நிறத்தில் PTM டிரேட் மார்க், புடவையின் இருதலைப்பிலும் இடப்பட்டிருக்கும். அந்தத் தங்க முத்திரை இருக்கிறதா என்று பார்த்து வாங்குங்கள்

புதியதில் எல்லா நைலான்களும் ஒன்றுபோல்தான் இருக்கும். ஆனால் சிறந்த நைலான் என்பது பலமுறை சுத்தம்செய்து அணிவதில் தெரிய வேண்டும். சிறந்த முறையில் சுத்தம் செய்யப்படுவதும், இஸ்திரியே தேவையில்லாததுமான மேன்மையான அசல் நைலான் புடவைகளை பெரகான் தயாரிக்கிறார்கள்

உங்கள் சிநேகிதர்களையும், உறவினர்களையும், ஜாக்கிரதையாயிருக்கச் சொல்லுங்கள். அசல் பெரகானை யல்லாமல் இதர போலிகளை வாங்கி ஏமாறாமல் பார்த்துக்கொள்ளுங்கள்.

## பெரகான்

**நைலான் புடவைகள்**

பெரகான் டெக்ஸ்டைல் மில்ஸ்,
வொர்லி—பம்பாய், 13.



மலர் 17
இதழ் 22

தமிழ்த்திரு நாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா—பாரதியார்

ஹேவிளம்பி
மார்கழி 14

# வேண்டாம் என்கிறது தென்னகம்!

சென்னை சீனிவாச சாஸ்திரி ஹாலிலும் கோகலே மண்டபத்திலும் 22-ம் தேதி ஞாயிற்றுக் கிழமை இரண்டு முக்கியமான கூட்டங்கள் நடைபெற்றன. தென்னாட்டில் அனுபவமும் புகழும் பெற்றவர்களின் தலைமையில் நடைபெற்றன!

நமது அரசியல் நிர்ணயச் சட்டத்தில் 1965-லிருந்து இந்தியே ஆட்சி மொழியாக இருக்க வேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டிருப்பதை நேயர்கள் அறிவார்கள். இதைப் பற்றிப் பரிசிலனை செய்யக் காலஞ்சென்ற பி. ஜி. கெர் அவர்கள் தலைமையில் நியமிக்கப் பட்ட மொழிக் கமிஷனில், டாக்டர் சுப்பராயனும் வங்கப் பிரதிநிதியும் தவிர மற்ற யாவரும் 1965-லிருந்து இந்தி ஆட்சி மொழியாகலாம் என்று தீர்ப்புக் கூறி விட்டார்கள்! இந்தக் கமிஷன் யோசனையை ஆலோசிக்க இப்பொழுது மக்கள் சபை அங்கத்தினர்கள் கொண்ட கமிட்டி ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

பார்லிமெண்டரி கமிட்டி, தனது யோசனையை இந்திக்குச் சாதகமாகக் கூறி விட்டால், அது பெயரளவுக்கு மக்கள் சபையில் வந்து, ஜனாதிபதியின் அங்கீகாரத்துக் குப் போய்விடும். ஜனாதிபதி அங்கீகரித்து விட்டால் 1965 - ல் வரவேண்டிய இந்தி மாற்றம் 1958 லேயே பலப் பல வேஷங்களில் மூடி மறைந்து ஆதிக்கம் செய்யத் தொடங்கி விடும்! ஆகவே, தென்னாட்டு அறிஞர்கள் ராஜாஜி, ஸி. பீ. ராமஸ்வாமி அய்யர், மிர்ஸா இஸ்மெயில், எம். ரத்னசுவாமி, பி. டி. ராஜன், பி. கோதண்ட ராவ் இன்னும் நூற்றுக் கணக்கான அறிஞர்களும் பல கட்சியினர்களும் சேர்ந்து இதுவரையி லிருந்தபடி ஆங்கிலமே ஆட்சி மொழியாக இருக்க வேண்டும் என்று மிக முக்கியமான தீர்மானம் நிறைவேற்றி யிருக்கிறார்கள்.

ஹிந்தி ஆட்சி மொழியாக்கப் பட்டால் ஒற்றுமை குலைந்து நாடு பிளவுபட்டுப் போகும் என்று எச்சரிக்கை விடுத்திருக்கிறார்கள்!

திங்கட்கிழமை காலை வெளிவந்த பத்திரிகையில் பஞ்சாப் சர்வகலாசாலையின் பட்ட மளிப்பு விழாவில் மத்திய உள்நாட்டிலாகா மந்திரி ஸ்ரீ பந்த் பின்வருமாறு பேசி யிருப்பதாகச் செய்தி வெளியாகி யிருக்கிறது.

"மிகவும் செல்வாக்குப் பெற்றவர்கள் சேர்ந்த ஒரு கமிட்டியினர், ஹிந்தியும் பஞ்சாபியும் மிக நெருங்கிய உறவு கொண்ட மொழிகள் என்று கூறியிருக்கிறார்கள். இரண்டு மொழிகளையும் பஞ்சாபிலுள்ள எல்லா மக்களுமே புரிந்து கொள்ளுகின்றனர். தொண்ணூறு சத விகித வார்த்தைகள் இரு மொழிகளுக்குமே பொது. பஞ்சாபிக்கும் ஹிந்திக்கும் வித்தியாசம் ஒன்றுமே இடையாது எனலாம். பஞ்சாபி மொழியினால் ஹிந்தி மொழி வளம் பெற்றிருக்கிறது. ஆகவே இவ்விரண்டும் இரட்டைச் சகோதரிகள். ஒரு நதியின் இரண்டு கிளைகள்."

ஆனாலும் பஞ்சாபில் எவ்வளவு ஆர்ப்பாட்டங்கள் நடந்து வருகின்றன. எத்தனை பேர்கள் சிறை சென்றிருக்கின்றனர். பிரதமர் ஜவாஹர்லால் நேரு, இது மடமை என்று எவ்வளவோ எடுத்துச் சொன்னார். பிடிவாதக்காரர்கள் கேட்கவில்லை. அவர்கள் வெறிபிடித்துத்தான் இன்னும் அலைகின்றனர்.

இவ்வளவு சண்டையும் வித்தியாசமே யில்லாத இந்தி பஞ்சாபி மொழிகளுக்கு இடையில்தான்! ஆனால் இந்திக்கும் தென்மொழிகளுக்கும் உள்ள வித்தியாசம் இவ்வளவு அவ்வளவு அல்ல, முற்றும் மாறுபட்டவை! வார்த்தைகள், உச்சரிப்பு, இலக்கணம் முற்றும் மாறுபட்டவை.

# திண்டாட்டம்!




*சென்னை சர்க்கார் ஹிந்தியும் ஆங்கிலமும் மத்திய சர்க்காரின் ஆட்சிமொழியாக இருக்கலாம் என்று தங்கள் யோசனையைத் தெரிவித்திருக்கிறார்கள். இது இரண்டு பெண்டாட்டிக்காரன் படும் திண்டாட்டமாகத்தான் முடியும்!*

---

இந்த நிலையில் ஹிந்தி மத்திய சர்க்காரின் ஆட்சி மொழியானால், ஹிந்தியைத் தாய் மொழியாகப் பெற்றவர்கள், தென்னாட்டு மக்களின் இந்தி உச்சரிப்பைச் சகிப்பார்களா? இந்திப் புலவர்கள் தென்னாட்டு மக்களின் ஹிந்தி எழுத்து நடையைச் சகிப்பார்களா? 'இந்தியைப் படித்து விடுவோம்! முன்னேறி விடுவோம்; நாம் ஒன்றும் கஷ்டப்பட மாட்டோம்; என்று சில தென்னாட்டு மக்கள் எண்ணிக் கொண்டு சும்மாவிருப்பது மடமை.

ஒரு மொழியைப் புகுத்துவதின் நோக்கம் மக்களின் மனங்களை ஒன்றுபடுத்துவதற்காக அல்லவா?

ஹிந்தி ஆட்சி மொழியாக்கப் பட்டால், தேசத்தில் ஒற்றுமையை வளர்ப்பதற்குப் பதில் பிளவுகள் தான் ஏற்படும். ஒன்றுபட்ட உள்ளங்களை வளர்ப்பதற்குப் பதில் பிளவு பட்ட மனங்களை வளர்க்கும். இதற்குப்பஞ்சாபில் நடைபெற்று வரும் மொழிக் கலவரங்களே போதிய சான்றாகும்.

இதுவரையில் வழக்கத்தில் இருந்து வந்த ஆங்கிலம் வேற்று மொழியாயினும் ஒற்றுமைக்குப் பெரும் சாதனமாக விளங்குகிறது. காஷ்மீரிலிருந்து கன்யாகுமரிவரை, படிக்கத் தெரிந்த மக்கள் அனைவரும் ஆங்கிலத்தில் பேசி எழுதி வருகிறார்கள்.

ஆங்கிலம் கற்பதில் ஹிந்தியைத் தாய்மொழியாகப் பெற்றவர்களுக்கும் மற்ற மொழிகளைத் தாய்மொழியாகப் பெற்றவர்களுக்கும் வித்தியாசமின்றிச் சமமாக இருக்கும். இந்தியை அகில இந்திய அரசியல் மொழியாக்கினால் இந்தியைத் தாய் மொழியாகப் பெற்றவர்களுக்குப் பெரும் சலுகை காட்டியதாகும். 58 சத விகித ஜனத்தொகை குறை கூறக் காரணமாகும்.

அரசாங்க அலுவல்கள் இதுகாறும் வெகு வெற்றிகரமாக ஆங்கிலத்தில் நடைபெற்று வந்திருக்கின்றன. இனியும் ஆங்கிலத்தில் நடப்பதனால் தவறில்லை என்பதே பெரியோர்களின் ஏகோபித்த முடிவு.

'பாரதம் போன்ற ஒரு தேசத்துக்கு அன்னிய மொழி ஆட்சிமொழியாக இருக்கலாமா? இது நமது கௌரவத்துக்குப் பழுதில்லையா?' என்று கேட்கப்படுகிறது.

'காயக்வெக்கத்தில் இருப்பதில் கௌரவக் குறைவு ஒன்றுமில்லை என்று நாம் சொல்லும் போது, ஆங்கிலம் ஆட்சி மொழியாக இருப்பதில் என்ன கௌரவக் குறைவு வந்து விட்டது?' என்று ராஜாஜி பலமுறை கேட்டிருக்கிறார். இதற்கு யாரும் பதில் சொல்லவில்லை; சொல்லவும் முடியாது.

பேராசிரியர் எம். ரத்னசுவாமி அவர்கள், 'எந்த மொழியை வைத்துக் கொண்டால் அரசாங்க அலுவல்கள் சரியாக நடைபெறும் என்று யோசிக்கும் போது, ஆங்கிலத்தில் தான் நன்றாக நடைபெறும் என்று மிகத் தெளிவாகத் தெரிகிறது. அப்போது அதை விடுவானேன்?' என்று கேட்டார்.

அதோடு, உலகில் எந்தநாடும் செய்தறியாத அதிசயத்தை நாம் செய்து காண்பித்திருக் கிறோம். 90 சதவிகித மக்கள் படிப்பு வாசனை அற்றிருக்கும் போது, நாம் அவர்களுக்கு வோட்டுரிமை வழங்கி மேற்கத்திய நாடுகள் அதிசயிக்கும் வண்ணம் அமைதியான முறை யில் தேர்தல்கள் நடத்தி வெற்றி பெற்றிருக் கிறோம். அப்படிப்பட்ட நாம் ஆட்சி மொழி விஷயத்திலும் உலகில் எந்த நாடும் செய்தறி யாத வகையில் ஒரு உலக மொழியை ஆட்சி மொழியாகக் கொண்டால் என்ன என்று கேட்டார்.

சென்னை அரசாங்கத்தார் ஹிந்தியும் ஆங் கிலமும் இரண்டும் கூடவே ஆட்சி மொழியாக இருக்கலாம் என்று யோசனை கூறியிருப்பது இன்னும் பல சிக்கல்களுக்குத்தான் வழி செய் யும் என்று ராஜாஜி கூறினார்.

சென்னை அரசாங்கத்தாரும் சட்ட சபை யினரும் யாருமே இந்தக் கூட்டங்களில் பங் கெடுத்துக் கொள்ளவில்லை. அபிப்பிராய பேதமில்லாமல் இருக்கும்போது ஏன் தயங்கு கிறார்கள் என்று ராஜாஜி கேட்டார்.

பாரத அரசாங்கம் என்பது பல ராஜ்யங் களின் கூட்டரசாங்கமாகும். ஒவ்வொரு ராஜ் யத்துக்கும் தனக்கு என்ன வேண்டும் என்று வற்புறுத்த உரிமை யிருக்கிறது. நமது சென்னை ராஜ்ய சர்க்கார் ஆங்கிலமே ஆட்சி மொழியாக இருக்க வேண்டும் என்று விரும்பி னாலும் வெளிப்படையாகச் சொல்ல என்ன பயத்தின் காரணமாகக் கூசுகிறார்கள்? கூசா மல் மக்களுடைய விருப்பத்தை வெளியிடுவது அவர்களுடைய கடமை. மொழிப் பிரச்னை யில் மக்களின் அபிப்பிராயத்தை அவர்கள் வெளியிட்டால் பதவியில் இருந்து நீங்க வேண்டும் என்று உத்தரவு வந்து விடாது. நீக்கி விட்டு யாரைப் பதவியில் வைக்கப் போகிறார்கள்? ஜனாதிபதி ஆட்சியை ஏற் படுத்தப் போகிறார்களா?—இல்லை.

ஆகவே, பொதுமக்களாவது ஆங்கிலமே வேண்டும் என்று உறுதியாகச் சொல்ல வேண்டியது அவசியமாகிறது. அப்படிச் சொல்லி விட்டால் சென்னை சர்க்காருக்குக் கூச்சம் நீங்கி வேலை செய்யச் சௌகர்யம் ஏற்படும். சட்ட சபையிலும் சரியான தீர்மானம் கொண்டு வந்து நிறைவேற்ற சென்னை மந்திரி சபைக்கு வழிகாட்டியதாகும்.

இந்தியை அரசியல் மொழியாக்குவது நம் முடைய மாணவர்களின் எதிர்கால வாழ் வைப் பாதிக்கும் காரியம். தென்னாட்டு மக்கள் தூங்கிக் கொண்டிருப்பதில் பய னில்லை. காரியம் முடிந்த பிறகு விழித்துக் கொள்வது அறிவீனமாகும்.

# சமுதாய உடைமை ஊழல்

இன்ஷூரன்ஸைச் சமுதாய உடைமை யாகச் செய்தபோது, "நாம் சோஷலிச பாணி சமுதாயத்தை அமைக்க முற்பட்டு விட்டோம். காங்கிரஸ் அதை ஆவடி மகா நாட்டில் தீர்மானித்து விட்டது. அந்த வழி யில்தானே போயாக வேண்டும். இன்ஷூரன் ஸைத் தேசிய மயமாக்குவது அதில் ஒரு படி!" என்று சர்க்காரும் சர்க்கார் தரப்பி னரும் மிகுந்த நம்பிக்கையுடன் கூறினார்கள்!

ஆனால் இப்பொழுது ஷேர் மார்க்கெட் சூதாட்டக்காரர்களைக் கைதூக்கிவிட இந்த இன்ஷூரன்ஸ் பொதுப் பணம் உபயோகப் படுத்தப் பட்டிருக்கிறது.

தேச நலனுக்காக உபயோகமாகும் பெருந் திட்டங்களை அமைக்கவா இந்தப் பணத்தைச் செலவழித்திருக்கிறார்கள்? இல்லை.

தனி முதலாளிகள், நஷ்டப்பட்டு மூழ்கிக் கொண் டிருப்பவர்களைக் கைதூக்கிவிட இன்ஷூரன்ஸ் பணம் ஒன்றரைக் கோடி ரூபாய் விரயமாக்கப்பட்டிருக்கிறது.

பொதுப் பணத்தை இவ்வளவு துணிகர மாகச் செலவழிக்கும் தைரியம் நம் நாட்டில் தவிர வேறு எங்கேயாகிலும் காண முடியுமா?

இந்த விஷயத்தை மக்கள் சபையில் காங் கிரஸ் அங்கத்தினராக வீற்றிருக்கும் பெரோஸ் காந்தி அம்பலப்படுத்தினார். உதவாக்கரை கம் பெனி ஷேர்களுக்காக இன்ஷூரன்ஸ் பணம் கொடுக்கப்பட்டதாக அறிவித்தார்.

அவர் அப்படி அம்பலப்படுத்தி, அங்கத்தி னர்கள் கேள்வி மேல் கேள்வி கேட்ட பிறகு, நிதிமந்திரி டி. டி. கே. விசாரணைக் கமிட்டி ஏற்படுத்துவதாகச் சொன்னார்.

தாமே செய்து விட்ட காரியத்துக்கு விசார ணைக் கமிட்டி ஏற்படுத்துவது வியப்பாகும். தம்முடைய பொறுப்பு அல்ல என்று கூறி, தமக்குக் கீழே வேலை செய்து வரும் பல் லாண்டுகள் அனுபவம் பெற்ற இன்ஷூரன்ஸ் நிர்வாக அதிகாரிகளின் மேல் குற்றம் சாட்ட முடியுமா? இதுவரையில் ஒருநாளும் அவர்கள் இத்தகைய படுமோசமான ஷேர் வியாபாரம் செய்தது கிடையாது.

மக்கள் சபையில் இந்த இன்ஷூரன்ஸ் இலாகா விஷயம் அம்பலமானதிலிருந்து, கல்கத்தா பங்கு மார்க்கெட் அழுது வழிகிற தாம். பங்குகள் வாங்குவோரையே காண வில்லையாம். ஒரு வாரமாக இந்த நிலைமை நீடித்து வருகிறது. வியாபாரிகளெல்லாம் பங்குகளைச் சந்தேகக் கண்கொண்டு பார்த்து வருகிறார்கள். பங்குகள் விலைகள் எல்லாம் 'தப தப' என்று விழுந்து வருகின்றன!

இன்ஷூரன்ஸ் நிதியை ஏதேனும் உற்பத்தி ஆலையில் போட்டு அதனால் நஷ்டமாகியிருந் தாலும் மக்கள் வருத்தப்பட மாட்டார்கள். ஷேர் மார்க்கெட் சூதாட்டத்தில் போட்டது தான் குற்றமாகும். மந்திரியைக் கேட்காமல் அவர்களாகவே இந்த ஷேர் வியாபாரத்தில் இறங்கி யிருப்பார்களா?

சர்க்கார் என்றால் மதிப்பு, மரியாதை கண்யம் எல்லாம் மக்கள் அளித்து வந்தனர். சர்க்கார் வர்த்தகத் துறையில் இறங்கினால் அது மோசடியாகத்தான் முடியும் என்று மக்கள் சந்தேகப்பட்டது இந்த ஒரு சம்ப வத்தினால் நிரூபணமாகிறது.

இந்தப் பெருந் தவறைப் பிரதமர் நேருவின் உதவியினாலும் விசாரணைக் கமிட்டி என்று பெயர் வைத்துத் தள்ளிப் போடுவதனாலும், மக்கள் கவனத்திலிருந்து மறைத்து விட முடியுமா? இல்லை மறந்துதான் போகுமா?

# வன் செவியோ நின்செவிதான்?

"பக்தியினாலே இவ் வையத்தைப் பாலித்திட வேண்டும்!" என்று விரும்பினார் மகாகவி பாரதியார். அந்தக் காலமும் நெருங்கி வருகிறது.

ஆனால் சிலருக்கு பக்தியினால் ஏதாகிலும் காரியம் சாதிக்க முடியுமா? சமுதாயப் புரட்சி உண்டாக்க முடியுமா? என்றெல்லாம் சந்தேகம் எழுந்துள்ளது! பக்தி மக்களை வீறுகொண்டு எழச் செய்வதற்குப் பதில் மந்தமாக உணர்ச்சியின்றிக் கிடக்கவே தூண்டுகிறது என்ற முடிவுக்கு வந்திருக்கிறார்கள். ஆனால் நம்முடைய அனுபவம் வேறு.

வீரசிவாஜி, பக்தியினாலே உந்தப்பட்டு மாபெரும் சாம்ராஜ்யத்தை ஸ்தாபித்தான்: நம் நாளில் காந்திமகான் ராமநாம பஜனை செய்தே, பாரத நாட்டில் மாபெரும் உணர்ச்சியைத் தட்டி எழுப்பினார். பாரத மக்களைச் சுதந்திர போருக்கு வீறுகொண்டு எழச் செய்தார்!

தெய்வபக்தி மாபெரும் கலைகளை வளர்த்திருக்கிறது! வானளாவும் கோபுரங்களையும் சிற்ப சித்திரங்களையும் எழுப்பியவை தெய்வபக்திதான். சுதந்திர பாரதத்திலே கலையும் பண்பாடும் வளர வேண்டுமானால் தெய்வபக்தியும் வளரவேண்டும்!

இந்த பக்தியை வளர்ப்பதற்குப் பலப்பல சம்பிரதாயங்களையும், பண்டிகைகளையும் திருவிழாக்களையும் ஏற்படுத்தி யிருக்கிறார்கள். அப்படிப்பட்ட அருமையான திருவிழாக் காலம் பாவை நோன்பு நோற்கும் இந்த மார்கழி மாதம்!

** ** ** **

இவ்விதழ் அட்டைச்சித்திரத்தைப் பார்ப்பவர்கள், புத்தகத்தை உள்ளே புரட்டிப் பார்ப்பார்களா என்ற சந்தேகம் நமக்கு எழுந்துள்ளது. ஆம், ஓவியர் மணியம் வரைந்துள்ள இந்த அட்டைப் படத்தின் அழகிலேயே கண்களையும் உள்ளத்தையும் பறி கொடுத்து விட்டு நின்று விட்டால் நாம் அதிசயப்பட மாட்டோம்!

இவ்வளவு அற்புதமான ஓவியத்துக்கு ஊற்றுக்கண்ணாய் விளங்குவது மணிவாசகப் பெருமான் அருளிச் செய்த திருவெம்பாவையின் முதற் பாடல்தான்.

மார்கழி மாதம் விடியற்காலை வேளை. பெண்கள் "ஆதியும் அந்தமும் இல்லா அரும் பெரும் சோதி"யாக விளங்கும் சிவபெருமானைப் பாடிக்கொண்டு வருகிறார்கள். அதைக் கேட்டும் தலைவி தூங்கிக் கொண்டிருக்கிறாள். இதைக் கண்டு 'உன் காது என்ன செவிடா?' என்று கேட்கிறார்கள். ஆனால் மற்றொரு தெருவில் ஒரு வீட்டில் நடந்தது என்ன தெரியுமா? வீதியில் பெண்கள் சிவபெருமானைத் துதித்துக்கொண்டு வந்த ஒலியைக் கேட்டதுமே அந்த வீட்டுப் பெண்ணின் உள்ளம் பொருமியது! விம்மி விம்மி நின்றாள். மெய் மறந்து போய், மூர்ச்சித்துப் படுக்கையின்மீது விழுந்தாள். அவள் இப்போது எதற்கும் பயனின்றிக்கிடக்கிறாள்; ஆனால் இந்தப் பெண்ணோ, என்ன அநியாயம், இப்படித் தூங்குகிறாளே! இதுவும் ஒரு பெண்ணுக்குரிய லட்சணமா என்று கேட்கின்றனர்!

ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்
சோதியை யாம்பாடக் கேட்டேயும் வாள்தடங்கண்
மாதே வளருதியோ, வன்செவியோ நின்செவிதான்
மாதேவன் வார்கழல்கள் வாழ்த்திய வாழ்த்தொலிபோய்
வீதிவாய்க் கேட்டலுமே விம்மிவிம்மி மெய்மறந்து
போதார் அமளியின் மேல்நின்றும் புரண்டிங்ஙன்
ஏதேனும் ஆகாள் கிடந்தாள் என்னே! என்னே!
ஈதேஎம் தோழி பரிசுஏலோர் எம்பாவாய்

காதலும் பக்தியும் உருக்கமும் நிறைந்த பாடல்களை மணிவாசகப் பெருமான் அருளி யிருக்கிறார். "திருவாசகத்துக்கு உருகாதார் ஒரு வாசகத்துக்கும் உருகார்" என்பதற்குச் சான்றாக விளங்குகிறது இந்தத் திருவெம்பாவைப் பாடல்!

# அருள் வாக்கு

மொத்தமுள்ள இருபத்தேழு நக்ஷத்திரங்களில் ஆர்த்ரா, சிரவண என்ற இரு நக்ஷத்திரங்களுக்கு மட்டுந்தான் தமிழில் திரு என்பதைச் சேர்த்துத் திருவாதிரை என்றும், திருவோணம் என்றும் சொல்லுகிறார்கள். இது தமிழுக்குள்ள ஒரு தனிச் சிறப்பு. திருவாதிரையைக் குறிக்கும் சிவனும், திருவோணம் குறிக்கும் விஷ்ணுவும் ஒரே பரமாத்மாவின் இரண்டு ரூபங்களே என்று தமிழர் உணர்ந்திருப்பதை இது தெளிவுபடுத்துகிறது. எனவேதான் நமது பிரதேசத்தில் ஒவ்வொரு கிராமத்திலும் சிவன், விஷ்ணு இருவருக்கும் கோவில்கள் கட்டப்பட்டிருப்பதைப் பார்க்கிறோம். அதாவது சிவன் கோவில் வட கிழக்கு திக்கிலும், பெருமாள் கோவில் மேற்கு திக்கிலும் அமைந்திருக்கின்றன. விஜயவாடாவிலிருந்து, காஷ்மீர்வரை உள்ள ஒவ்வொரு சிவன் கோவிலிலும் லிங்கத்துக்கு மேலே ஒரு பெரிய பாத்திரம் அடியில் ஒரு சிறிய ஓட்டையுடன் தொங்கவிடப்பட்டிருக்கும். அந்தப் பாத்திரத்திலிருந்து நாள் முழுவதும் லிங்கத்தின்மீது தண்ணீர் சொட்டிக் கொண்டேயிருக்கும். தரிசனத்துக்கு வரும் ஒவ்வொருவரும் ஒரு குடத்தில் தண்ணீர் கொண்டு வந்து அந்தப் பெரிய பாத்திரத்தில் கொட்டுவார். ராமன், கிருஷ்ணன், அம்பிகை கோவில்களில்கூட ஒரு சிவலிங்கம் இருக்கும். தரிசனத்துக்கு வருவோர் ஒரு குடம் நீரை சிவன் விக்கிரகத்தின்மீது அபிஷேகம் செய்யாமல் போக மாட்டார்கள்.

⁂ ⁂ ⁂ ⁂

எல்லோரா குகையில் மலையைக் குடைந்து பிராகாரங்களுடனும், கோபுரங்களுடனும் அற்புதமான கோவில் நிர்மாணிக்கப்பட்டிருக்கிறது. தமிழ் நாட்டிலிருந்து சென்ற ஒரு சிற்பியின் சாதனை அது. 'இந்தத் திருப்பணியை நான் செய்ததாக எண்ணவில்லை; இந்தத் தெய்விகச் சிலைகளைச் செதுக்குகையில், ஆண்டவனே எனது கரத்தை இயக்கியிருக்க வேண்டும்' என்று அந்தச் சிற்பி அக்கோவிலில் ஒரு சிலாசாஸனம் செய்திருக்கிறார்.

⁂ ⁂ ⁂ ⁂

ஒவ்வொருவரும் மார்கழி மாதத்தில் விடியற்காலை எழுந்து ஆண்டவனிடம் மனத்தைத் திருப்பி, அவருக்குப் பூஜை செய்வதிலோ, பஜனை செய்வதிலோ ஈடுபட்டால், எல்லாவிதமான கவலைகளும், துன்பங்களும் மறைந்துவிடும்.

ஸ்ரீசங்கராச்சாரியார், காஞ்சி காமகோடிபீடம்

# ஈழநாட்டு மக்களுக்கு ராஜாஜியின் ஆசி

—கொழும்பு, டிஸம்பர் 20உ

இவ்வாரம் பாரதத்தின் கலாசார தூதர்களாக ஈழம் வந்து சேர்ந்த ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களையும், கல்கி பத்திரிகையின் அதிபரும் ஆசிரியருமான ஸ்ரீ சதாசிவம் அவர்களையும் உற்சாகமாக வரவேற்று உபசரிக்க நூற்றுக்கணக்கான தமிழன்பர்கள் ரத்மலானை விமான நிலயத்துக்குத் திரளாக வந்திருந்தார்கள். மலர்மாலைகள் சகிதம் ஆண்களும் பெண்களுமாக ஏராளமான மக்கள், விமானம் வந்து சேர்வதற்குப் பல மணி நேரத்துக்கு முன்னதாகவே விமான நிலயத்தில் வந்து காத்திருந்தார்கள். விமானம் வந்ததும் வழக்கத்துக்கு மாறாக ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷனைச் சேர்ந்தவர்கள் 'கஸ்டம்ஸ்' தடையைத் தாண்டி விமானம் வரையில் சென்று ஸ்ரீ சதாசிவம் தம்பதிகளை வரவேற்க அனுமதிக்கப்பட்டனர்.

ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மி வெளியில் வந்ததும் தூக்க முடியாத அளவு ஏராளமான மலர் மாலைகள் அவருக்கும் ஸ்ரீ சதாசிவத்துக்கும் அணிவிக்கப்பட்டன. இலங்கையிலுள்ள அநேக தமிழ்ச் சங்கங்களின் பிரதிநிதிகள் மலர்மாலைகள் அணிவித்து உபசரித்தார்கள்.

இலங்கையில் வந்து இறங்கியதும் ஸ்ரீ சதாசிவம் தமது சார்பாகவும் ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மி சார்பாகவும் பத்திரிகை நிருபர்களுக்கு ஒரு செய்தி விடுவித்தார்.

"நானும் ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மியும் அழகான உங்கள் நாட்டுக்கு வர மகிழ்ச்சியடைகிறோம். இது எங்களுடைய மூன்றாவது விஜயம். ஏற்கனவே இருமுறை உங்கள் நாட்டுக்கு வந்திருக்கிறோம். பௌத்த தர்மத்தில் திளைக்கும் ஈழநாட்டுக்கு லேடி ராமநாதன் அழைப்பின் பேரில் முன்பு ஒரு முறை இங்கு வந்தோம். அகில உலகிலும் அனேக கிளைகளை ஏற்படுத்தி அரும்பெரும் சமூகத் தொண்டாற்றி வரும் ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் அழைப்பின்பேரில் இப்பொழுது உங்கள் நாட்டுக்கு வரும் வாய்ப்பு எங்களுக்குக் கிடைத்திருக்கிறது. இந்நாட்டு மக்களுக்கு நான் ஒரு செய்தியை அளிக்க விரும்புகிறேன்" என்று சொல்லி ஸ்ரீ சதாசிவம் ராஜாஜியிடமிருந்து கொண்டு வந்த கீழ்க்கண்ட செய்தியை அளித்தார்.

"நாம் மிகவும் கஷ்டமான காலத்தில் வாழ்ந்து வருகிறோம். உலகம் ஆபத்தான இடமாகி விட்டது. இத்தகைய நிலயில் பொறாமைகளுக்கும் கட்சிச் சண்டைகளுக்கும் இடமளிக்கக் கூடாது; அதற்கு இது காலம் அல்ல. ஸ்ரீமதி சதாசிவம்சுப்புலக்ஷ்மி அவர்கள் இலங்கை ராமகிருஷ்ண மிஷன் ஸ்தாபனத்துக்குப் பாடி உதவப் போகிறார். அவருடன் செல்லும் ஸ்ரீ சதாசிவம், இலங்கை மக்களுக்கு என்னிடமிருந்து ஏதாகிலும் ஆசி வேண்டும் என்று விரும்புகிறார். இலங்கை மக்களுக்குப் பெருமை வாய்ந்த தலைவர்கள் இருக்கிறார்கள்.

ஆகவே இலங்கை மக்களுக்கு யோசனை கூற நான் நினைக்கக் கூடாது. இலங்கையுடன் நான் கொண்டிருந்த பழைய தொடர்புகளும், நேசமும் சில வார்த்தைகள் சொன்னால் இலங்கை மக்கள் தவறாக நினைக்க மாட்டார்கள் என்ற துணிச்சலை அளிக்கின்றன.

இலங்கை, சிங்களர்—தமிழர் சண்டை போன்ற எல்லாச் சில்லறைச் சச்சரவுகளை மறந்துவிட வேண்டும்என்பதே என் விருப்பம். புத்த மதமும் சைவ மதமும் நன்றாகத் தழைத்தோங்க வேண்டும். இலங்கை வளப்பு மிக்க நாடு. அங்கு மக்களும் மன ஒற்றுமையோடு வாழ்ந்தால் அழகுக்கு அழகு செய்தாற் போலாகும். புனிதமானவற்றுக்கு மதிப்பும் பக்தியும் செலுத்தும் பண்பு ஓங்கட்டும். அந்தப் பண்பு மக்கள் நேர்மையான பாதையில் வாழத் துணை புரியட்டும்!" —ரஜனி

ஸ்ரீமதி எம்.எஸ்.சுப்புலக்ஷ்மி அவர்களையும் ஸ்ரீ சதாசிவம் அவர்களையும் வரவேற்க ரத்மலானை விமான கூடத்துக்கு வந்திருந்த மக்கள் கூட்டம். போட்டோ: கே. வி. எஸ். மோகன்



டிசம்பர் 27ல் முதல்

சென்னை

கெயிட்டி

பிரபாத்

சரஸ்வதி

மற்றும் தென்னுடெங்கும்

ரவி புரொடக்ஷன்ஸ்

# பாக்கியவதி

டைரக்ஷன் : பிரசாத்

தயாரிப்பு..

A.C.பிள்ளை

கதை ,வசனம்

ரா. வே



Elegant

பூரண விநியோக உரிமையாளர்கள் : மதுரை பிலிம்ஸ், மதுரை



# பயிரும் பாசனமும்

## பொருளாதாரமும் பொதுமக்களும் [4]

க. சந்தானம்

விவசாயம் நாட்டின் சீதோஷ்ண நிலைமையையும், நீர்வளத்தையும் பெரிதும் பொறுத்திருக்கிறது. மிதமான சீதோஷ்ண நாடுகளில் அதிக ஜலம் தேவையில்லை. தவிர அவ்வித தேசங்களில் மழை ஒரு காலத்தில் ஓரேயடியாகப் பெய்து விடாமல், எல்லா மாதங்களிலும் நிரந்து பெய்கிறது. பாரதத்தின் விவசாயமோ அந்தந்தப் பிரதேசங்களின் மாரி காலத்தை அனுசரித்து அதன் சீதோஷ்ண நிலைக்கு ஏற்றவாறு செய்யப்பட வேண்டியிருக்கிறது.

இந்தியாவில் எல்லாப் பாகங்களிலும் ஏப்ரல் மே, ஜூன் மாதங்கள் கடுமையான கோடை காலம். பல பாகங்களில் உஷ்ணம் 45° சென்டி கிரேட் (113° பாரன்ஹீட்) வரையில் உயருகின்றது. தென்னிந்தியாவில் சிறிது குறைவாக இருப்பினும் நீராவியின் அளவு அதிகம் இருப்பதால் வியர்வை அதிகமாகி உஷ்ணம் சகிக்க முடியாமல் போய் விடுகிறது.

ஜூலை, ஆகஸ்டு மாதங்கள் பாரதத்தின் பெரும்பாகத்தின் மழை காலம். ராஜ்யவாரியாக மழை காலமும், மழையின் அளவும் பின் வருமாறு:

| ராஜ்யம் | மழை காலம் | (அங்குலம்) அளவு |
| --- | --- | --- |
| ஆந்திரப் பிரதேசம் | ஜூனிலிருந்து அக்டோபர் வரை | 30-40 |
| அஸ்ஸாம் | மே முதல் செப்டம்பர்வரை | 100-105 |
| பீகார் | ஜூன் முதல் செப்டம்பர் வரை | 35-55 |
| பம்பாய் | ஜூன் முதல் செப்டம்பர் வரை | 20-100 |
| கேரளம் | ஏப்ரல் முதல் அக்டோபர் வரை | 80-100 |
| மத்தியப் பிரதேசம் | ஜூலை முதல் செப்டம்பர் வரை | 37-52 |
| மதராஸ் | அக்டோபர் முதல் டிசம்பர் வரை | 25-35 |
| மைசூர் | ஜூன் முதல் அக்டோபர் முடிய | 30-45 |
| ஒரிஸ்ஸா | ஜூன் முதல் செப்டம்பர் முடிய | 50-60 |
| பஞ்சாப் | ஜூலை முதல் ஆகஸ்டு முடிய | 17-25 |
| ராஜஸ்தானம் | ஜூலை முதல் ஆகஸ்டு முடிய | 15-30 |
| உத்தரப் பிரதேசம் | ஜூலை முதல் செப்டம்பர் முடிய | 30-50 |
| மேற்கு வங்காளம் | ஜூன் முதல் செப்டம்பர் முடிய | 60-65 |

மழையையும், சீதோஷ்ணத்தையும் அனுசரித்துத் தானியங்களும் பயிராகின்றன. பஞ்சாப், ராஜஸ்தானம், உத்தரப்பிரதேசம் கோதுமைப்பிரதேசங்கள். பீகார், வங்காளம், ஒரிஸ்ஸா, ஆந்திரப்பிரதேசம், மதராஸ், கேரளம் நெல்பிரதேசங்கள். மீதிப் பிரதேசங்களில் சோளம், கம்பு, கேழ்வரகு முதலிய புஞ்சை தானியங்களே பெரும்பாலும் உற்பத்தியாகின்றன. இந்தியாவின் மத்திய பாகங்களிலும் பஞ்சாபிலும் பருத்தியும் பருப்பு வகைகளும் மிகுதியாக உற்பத்தியாகின்றன. சணல் வங்காளம், அஸ்ஸாம், பீகாரில் பயிராகிறது. தேயிலை அதிகமாக அஸ்ஸாமிலும், டார்ஜிலிங், உதகமண்டலம் முதலிய மலைப் பிரதேசங்களிலும் உற்பத்தியாகிறது. தேங்காய் மிகுதியாகக் கேரளத்திலும், சென்னை, பம்பாய், வங்காளத்தில் மிதமாகவும் கிடைக்கிறது.

இந்தத் தேசத்தில் மழை ஓரேயடியாகக் கொட்டி விடுவதால், பெரும்பாலான ஜலம் சமுத்திரத்தில் வடிந்து விடுகிறது. அதைக் கூடியவரையில் சேமித்து வைத்து விவசாயத்துக்கு உபயோகப்படுத்துவது இந்தியப் பொருளாதாரத்தின் முக்கியமான வேலையாகும். ஆற்றிலிருந்து கால்வாய்கள், ஏரிகள், குளங்கள், கிணறுகள் ஆங்காங்கு அமைக்கப்பட்டு நீர்ப்பாசன முறைகள் பண்டைக் காலத்திலிருந்து கையாளப்பட்டு வருகின்றன. ஆயினும் இன்னும் பெரும்பாலான விவசாய நிலங்கள் மானாவாரியாகவே இருக்கின்றன. தற்சமயம் 100-க்கு 18 வீத நிலங்களுக்கே நீர்ப்பாசன வசதிகள் உண்டு.





முதல் ஐந்தாண்டு திட்டத்தில் புதிதாக 40 லக்ஷம் ஏக்கர்களுக்குப் பாசனவசதிகள் அளிக்கப் பட்டன. நாட்டின் நதிகளில் காவேரியின் ஜலம்தான் பூர்ணமாக உபயோகிக்கப்படுகிறது. ரவி, சட்லெஜ், பியாஸ் நதிகளின் நீரை உபயோகிப்பதற்காகப் பக்ரா நங்கல் அணை தயாராகி வருகிறது.

ஒரிஸ்ஸாவில் மகாநதிக்கு ஹீராகுத்தில் அணைமுடிந்து லக்ஷக்கணக்கான ஏக்கர்கள் அதன் பாசனத்துக்குள் சீக்கிரம் வரும். கிருஷ்ணு, கோதாவரி நதிகளின் ஜலத்தில் சிறு பாகமே தற்சமயம் உபயோகிக்கப்படுகிறது. கிருஷ்ணுவுக்கு நாகார்ஜுனசாகரத்தில் அணை போடப்பட்டு வருகிறது. கங்கை, கோசி, பிரம்மபுத்திரா நதிகளின் மூலம் பெருவாரியான பிரவாகம் கடலில் போய் விழுந்துவிடுகிறது. ஆனல் அதனை உபயோகிப்பதற்கு மிதமிஞ்சிய செலவாகும்.

நதிகள் இல்லாத பிரதேசங்களில், ஏரிகள், குளங்கள், கிணறுகளிலிருந்து நீர்ப்பாசனம் செய்யப்படுகிறது. விந்தியப் பிரதேசத்தில் 10-12 நூற்றாண்டுகளில் அரசாண்ட சந்தேல் வம்சத்தினர் பிரும்மாண்டமான ஏரிகளை அமைத்தனர். இதர சமஸ்தானங்களிலும் அரசர்கள் அவ்வாறே செய்தனர். அவற்றில் பல ஏரிகள் காலக்கிரமத்தால் தூர்ந்து அதிக நீர் தாங்க மாட்டாமல் இருக்கின்றன. இக்காலத்தில் அவைகளைச் சீராக்குவதற்கு மிகுதியான செலவாகும். ஆயினும், அது இன்றியமையாத தேசப்பணியாகும்.

இக்காலத்திய யந்திரங்களைக் கொண்டு பூமியில் வெகு தூரம் தோண்டி ஜலத்தைப் பம்புகளின் மூலமாக எடுத்துப் பாசன வசதிகள் செய்து வருகின்றனர். அவைகளுக்குக் குழாய்க் கிணறுகள் (டியூப் வெல்) என்று பெயர். 1956-ம் வருஷம் ஜூன் மாதம் வரையில் 5015 குழாய்க் கிணறுகளில் வேலை ஆரம்பிக்கப்பட்டு, 4290 கிணறுகள் கட்டப்பட்டும், 3524ல் மின்சாரம் பூட்டப்பட்டும் இருந்தன. ஆனல் பலவித இடைஞ்சல்களால் இக் கிணறுகளிலிருந்து பாசனம் அரிதமாக நடைபெறவில்லை. அவைகளின் செலவுத் தொகைகளுக்கேற்ப நீர்ப்பாசன விகிதம் விதிக்கப்பட்டால் ஏக்கராவுக்கு ரூ. 20லிருந்து ரூ. 30 வரையில் ஆகிறது. அதைக் குடியானவர்கள் கொடுக்க மறுக்கின்றனர். விகிதத்தைக் குறைத்தால், குழாய்க் கிணறுகள் நிர்மாணிப்பதற்கு ஏற்பட்ட கடன் தொகைகளின் வட்டியைப் பொது வரிப் பணத்திலிருந்து கட்ட வேண்டும்.

பிரதேசவாரியாகப் பாசன விஸ்தீர்ணம் பின்வருமாறு:

1953 – 54 புள்ளி விவரங்கள்:

| ராஜ்யம் | சாகுபடி நிலம் லக்ஷ ஏக்கரா | நீர்ப்பாசன நிலம் லக்ஷ ஏக்கரா |
|---|---|---|
| ஆந்திரப் பிரதேசம் | 272.8 | 65.9 |
| அஸ்ஸாம் | 59.9 | 13.7 |
| பீகார் | 192.3 | 42.0 |
| பம்பாய் | 660.3 | 34.3 |
| கேரளம் | 43.3 | 8.1 |
| மத்தியப் பிரதேசம் | 375.4 | 20.6 |
| மதராஸ் | 140.3 | 52.4 |
| மைசூர் | 243.8 | 16.3 |
| ஒரிஸ்ஸா | 141.2 | 17.4 |
| பஞ்சாப் | 168.9 | 74.8 |
| ராஜஸ்தானம் | 266.9 | 28.8 |
| உத்தரப்பிரதேசம் | 409.6 | 125.9 |
| மேற்கு வங்காளம் | 132.5 | 6.5 |

நீர்ப்பாசன வசதிகளை அதிகரிப்பது அத்தியாவசியமாயினும், இக்காலத்தில் அவற்றின் செலவு அதிகமாவதால் சர்க்காரின் நிலைமை தர்மசங்கடமாகி வருகிறது. ஒரு சில நிலங்களை நஞ்சையாக்குவதற்காகப் பொது வரியை உயர்த்துவது நியாயமன்று. நியாய விகிதம் விதித்தால் தானிய விலை அதிகமாக இருந்தாலொழிய குடியானவர்களால் தாங்க முடியாது. நாட்டின் ஜனத்தொகை பெருகி, உணவு நெருக்கடியும் பெருகி வந்தால் தானிய விலைகள் ஏறுவதைத் தடுக்க முடியாதென்று தோன்றுகிறது. விலை அதிகரித்தாலும், தானியம் உற்பத்தியாகுல் போதும் என்ற நிலையை நாடு அடைந்து வருகிறது.



மாதர்குல திலகங்கள்

# வீணை சண்முக வடிவு

கல்கி

நமது நாட்டில் வீணையும் வேணுவும் சிறந்த இசைக் கருவிகளாக ஆதிகாலத்திலிருந்து கருதப்பட்டு வந்திருக்கின்றன. மகானாகிய திருவள்ளுவரும் அவ்வாறே குழலும் யாழும் மிக இனிய இசைக் கருவிகள் என்று கருதினார். ஆனால் அவற்றின் இசையைக் காட்டிலும் செவிக்கு இனியது வேறு ஒன்று உண்டு என்றும் கூறினார். அது 'தம் மக்களின் மழலைச் சொல்!' என்றார்.

சாதாரணமான குரலை உடைய குழந்தையின் மழலையே, அக் குழந்தையின் பெற்றோர்களுக்கு யாழையும் குழலையும் விட இனியதாகத்தான் இருக்கும். வீணையைக் காட்டிலும் இனிய குரலை ஒரு குழந்தை உண்மையிலேயே இறைவன் அருளால் பெற்றிருக்குமானால், அந்தக் குழந்தையின் மழலையும், மழலைச் சொல்லுடன் கலந்து வரும் குரலிசையும் அக் குழந்தையின் அன்னைக்கு எவ்வளவு ஆனந்தத்தை அளிக்கும்? அதிலும், அந்த மாதரசி வீணை வாத்தியத்தை நன்கு பயின்று நாதோபாசனை செய்து வந்தவரானால், அவர் எத்தகைய பாக்கியத்தைச் செய்த புண்ணியவதியாவார்? தாம் அடைந்த பெறற்கரிய பேற்றைக் குறித்து எப்படியெல்லாம் அவர் எண்ணி எண்ணி மகிழ்வார்?

அத்தகைய பாக்கியசாலியான அன்னை, மதுரைமா நகரைச் சேர்ந்த ஸ்ரீமதி வீணை சண்முக வடிவு அம்மாள் அவர்கள்.

இன்று அகில இந்தியாவிலும் புகழ் பெற்று விளங்கும் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களைப் பெற்றெடுத்துச் சங்கீத உலகத்துக்கு வழங்கிய பெருமை வாய்ந்த பெண்மணி ஸ்ரீமதி சண்முக வடிவு அம்மாள்தான்.

* * *

பரம்பரையாகச் சங்கீதக் கலையில் ஆர்வமும் பயிற்சியும் பெற்றிருந்த குடும்பத்தில் வந்தவர் ஸ்ரீமதி சண்முகவடிவு அம்மாள். இவருடைய தந்தையான ஸ்ரீ எம். எஸ். சுவாமிநாதம் அவர்கள் நல்ல சங்கீதஞானமும் சாஸ்திர ஆராய்ச்சியும் சிறந்த பண்பாடும் படைத்தவர்: அன்னை ஸ்ரீமதி அக்கம்மாள் வயலின் வாத்தியத்தைப் பயின்று அதில் நல்ல தேர்ச்சி பெற்று விளங்கினார்.

இத்தகைய சங்கீத பரம்பரையில் வந்த பெற்றோர்களின் செல்வப் புதல்வியாக ஸ்ரீமதி சண்முகவடிவு அம்மாள் 1889-ம் வருடம் பங்குனி மாதம் 17உ பிறந்தார்.

குழந்தைப் பிராயத்திலேயே இவருக்கு இசைக்கலையில் ஆர்வம் உண்டாயிற்று. அந்தக் கலையை நன்கு பயில வேண்டும் என்ற ஊக்கம் கொண்டார். இவருடைய பெற்றோர்களும் இயற்கையிலேயே இசை ஆர்வம் கொண்ட குழந்தைக்கு நல்ல முறையில் சங்கீதக் கலையைப் பயிற்சி செய்விக்கவேண்டுமென்று விரும்பினார்கள். அந்த நாளில் பிரபல வித்வானாக விளங்கிய கரூர் ஸ்ரீ வேங்கடராம பாகவதர் அவர்களிடம் சங்கீத வித்தை பயில ஏற்பாடு செய்தார்கள். கச்சேரிகளில் சோபிக்கக் கூடிய அளவுக்கு இவருடைய குரல் எடுப்பாக இல்லையென்று கருதி, இசைக் கருவிகளில் சிறந்ததான வீணை வாத்தியத்தில் இவர் சங்கீத வித்தையைப் பயிலத் தொடங்கினார். தமது சாரீரத்தைப் பற்றி அவருக்கு அந்நாளில் ஏற்பட்டிருக்கக் கூடிய ஆதங்கம், பிற்காலத்தில் அவருடைய நாதோபாசனையின் பயனாக, அவருடைய புதல்வி ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களின் மூலமாக நீங்கியது.

ஸ்ரீமதி சண்முகவடிவு தாம் பயிலத் தொடங்கிய வீணை வாத்தியத்தில் வெகு விரைவில் நல்ல தேர்ச்சி பெற்று வந்தார்.

இவருடைய அன்னை ஸ்ரீமதி அக்கம்மாளின் வயலின் வாசிப்பை அக்காலத்தில் மிகப் புகழ் வாய்ந்த வித்வான்களான திருக்கோடிகாவல் ஸ்ரீ கிருஷ்ணய்யர், மடவார்விளாகம் ஸ்ரீ முத்தையா பாகவதர் முதலியவர்கள் கேட்டு ரஸித்துப் பாராட்டியிருக்கிறார்கள். ஒரு சமயம் ஸ்ரீமதி அக்கம்மாளின் பிடில் வாத்தியத்தைக் கேட்ட பிறகு அவருடைய குமாரி சண்முக வடிவின் வீணை வாசிப்பையும் அந்தப் பிரபல வித்வான்கள் கேட்டார்கள். "தாயைப் போல் சேய்" என்று மகிழ்ந்து கூறி, "இந்தக் குழந்தை விரைவில் சங்கீத உலகில் முன்னணிக்கு வருவாள்!" என்று ஆசீர்வதித்தார்கள்.

அப்பெரியோர்களின் வாக்கு விரைவிலேயே பலிதமாயிற்று: குருநாதரின் அநுமதியுடன் ஸ்ரீமதி சண்முகவடிவு பதினைந்தாம் பிராயத்திலேயே வீணைக் கச்சேரிகள் செய்யத் தொடங்கினார். பக்கவாத்தியங்களின் உதவியின்றியே மூன்று-நான்கு மணி நேரம் வீணைக் கச்சேரி செய்வார். சங்கீதம் கேட்க வந்த ரஸிகர்கள் நேரம் போவது பற்றிய நினைவே இன்றி மெய்ம்மறந்து கேட்டுக்கொண்டிருப்பார்கள்.

வக்கீல் ஸ்ரீ சோமயாஜுலு அவர்களின் இல்லத்தில் நடந்த கலியாணத்தில் இவருடைய வீணைக் கச்சேரி முதன் முதலாக நடைபெற்றது. அந்தக் கச்சேரியைக் கேட்டவர்கள் பெரிதும் ரஸித்துப் பாராட்டினார்கள். அதிலிருந்து கலியாண வைபவங்களிலும் சங்கீத சபைகளிலும் இவருடைய கச்சேரிகள் அடிக்கடி நடைபெற்றுப் பிரபலம் அடையத் தொடங்கினார்.

வக்கீல் ஸ்ரீ பி. எஸ். சுப்பிரமணியம் அவர்கள் ஸ்ரீமதி சண்முகவடிவு அம்மாளின் வாழ்க்கைத் துணைவர் ஆனார். இவர் சங்கீதக் கலையில் ஆர்வம் உள்ள பரம ரஸிகர். இவர் அளித்த உற்சாகத்தினால் ஸ்ரீமதி சண்முக வடிவின் புகழ் மேலும் பரவியது. தஞ்சை, திருச்சி, திருநெல்வேலி, ராமநாதபுரம், சென்னை முதலிய இடங்களில் இவருடைய கச்சேரிகள் அதிகமாக நடந்தன.

மைசூரில் அச்சமயம் வீணை பக்ஷி சுப்பண்ணா, சேஷண்ணா ஆகியவர்கள் பிரசித்தமான வித்வான்களாக விளங்கினார்கள். அவர்கள் ஸ்ரீமதி சண்முகவடிவு அம்மாளின் வீணை வாசிப்பை அடிக்கடி கேட்டு மகிழ்ந்தார்கள். இவர் வீணை வாத்தியத்தைக் கையாளும் முறையையும், இவருடைய வீணா நாதத்தின் இனிமையையும் அவர்கள் பெரிதும் பாராட்டினார்கள்.

ஸ்ரீமதி சண்முகவடிவின் குழந்தைப் பிராயத்தில் இவருடைய வீணை வாசிப்பைக் கேட்டு ஆசி கூறிய திருக்கோடிகாவல் ஸ்ரீ கிருஷ்ணையர் அவர்கள் இவர் பிரபலமாகக் கச்சேரி செய்யத் தொடங்கிய பிறகும் கேட்கும்படி நேர்ந்தது. அப்போது அவர் ஆசி கூறிப் பாராட்டியதுடன் திருப்தி அடையவில்லை. ஸ்ரீமதி சண்முகவடிவின் வித்தைத்திறமையைச் சோதிப்பதற்காகக் கடுமையான சோதனைகள் நடத்தினார். ஏறக்குறைய ஒன்று போல் தொனிக்கக் கூடிய சம்மேளராகங்களாகிய பைரவி—முகாரி, நாயகி—தர்பார், ஆரபி—தேவகாந்தாரி ராகங்களை அடுத்தடுத்து வாசிக்கச் செய்தார். அவ்வாறே கன ராகதானங்கள், சவுக்க கால, மத்தியம கால பல்லவிகளும் வாசிக்கச் சொல்லிக் கேட்டார். இந்தப் பரீட்சைகளில் ஸ்ரீமதி சண்முகவடிவு சிறந்த முறையில் தேறியதைக் கண்டு பரிபூரண திருப்தி அடைந்தார். இவருடைய சங்கீத வித்தைத் திறமையை அந்த மகா வித்வான் பெரிதும் பாராட்டியதுடன் சோழ நாட்டில் சங்கீத ரஸிகர்கள் மிகுந்த பல ஊர்களிலும் இவருடைய வீணைக் கச்சேரி நடப்பதற்கு ஏற்பாடு செய்தார்.

திருக்கோடிகாவல் கிருஷ்ணையர் தம்முடைய காலத்தில் சங்கீத உலகத்தில் இணையற்ற பெருமையுடன் விளங்கியது அனைவரும் அறிந்ததே. சங்கீதக் கலையின் மேன்மையை நிலைநாட்டுவதில் மிகவும் கண்டிப்பான கொள்கையைக் கடைப்பிடித்தவர். அத்தகையவர் ஸ்ரீமதி சண்முகவடிவின் வீணை வாசிப்பைப் பெரிதும் மதித்துப் பல இடங்களிலும் கச்சேரி வைப்பதற்கும் ஏற்பாடு செய்தார் என்றால், அந்த சங்கீதம் எவ்வளவு உயர்தரமாயிருக்க வேண்டும் என்பதற்கு வேறு அத்தாட்சியே வேண்டியதில்லை.

ஸ்ரீமதி சண்முகவடிவு சென்னைக்குச் சென்றிருந்த ஒரு சந்தர்ப்பத்தில் இவருடைய வீணை வாசிப்பை வீணை தனம்மாள் கேட்டுப் பரவசமடைந்தார். "என்னைப் போல் நீயும் சங்கீதக் கலைக்குத் தொண்டு செய்து சர்வ மங்களங்களையும் அடைவாய்; நல்ல சங்கீத ஞானமுள்ள குழந்தைகளைப் பெறுவாய்!" என்று வாழ்த்தினார். நிறைந்த உள்ளத்துடன் வீணை தனம்மாள் கூறிய வாழ்த்து அற்புதமாகப் பலித்து விட்டது!

மற்றொரு பிரசித்தி பெற்ற வீணை வித்வானாகிய விஜயநகரம் வெங்கடரமணதாஸர் .பல வித்வத் சிரோமணிகள் நிறைந்திருந்த



சபையில் ஸ்ரீமதி சண்முக வடிவின் வீணை வாசிப்பைப் பாராட்டிப் பேசி மகிழ்ந்தார். வீணாகானத்தில் நிகரற்ற பிராபல்யத்துடன் விளங்கிய காரைக்குடி சகோதரர்களும் ஸ்ரீமதி சண்முகவடிவின் வீணை வாசிப்பைப் பாராட்டி ஆசி கூறினார்கள்.

கச்சேரி செய்து புகழ் பெற்றது மட்டுமல்லாமல் சங்கீதக் கலையின் இலக்கண இலக்கியங்களையும் ஸ்ரீமதி சண்முகவடிவு நன்கு அறிந்திருந்தார். ஆகையால், அவ்வப்போது பல சங்கீத வித்வான்கள் இவரிடம் வந்து சங்கீத சாஸ்திர நுட்பங்களைப் பற்றி யெல்லாம் விவாதிப்பார்கள்.

ஸ்ரீமதி சண்முகவடிவு அம்மாள் ஆண்டு தோறும் தம்முடைய இல்லத்தில் ஸ்ரீ தியாகராஜ உத்ஸவம் விமரிசையாக நடத்தி வந்தார். அச்சமயம் தமிழ் நாட்டில் பிரபலம் அடைந்திருந்த சங்கீத வித்வான்கள் அனைவரும் ஸ்ரீமதி சண்முகவடிவின் இல்லத்தில் நடந்த தியாகராஜ உற்சவத்துக்கு வந்து கச்சேரி செய்து சிறப்பித்தார்கள்.

இத்தகைய சங்கீத மயமான சூழ்நிலையில் பிறந்தவர்தான் ஸ்ரீமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மி. பெற்றோர்களும் உற்றார்களும் குழந்தையைக் 'குஞ்ச' என்ற செல்லப் பெயரால் அழைத்தார்கள். ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மி மழலை மாறாத சின்னஞ் சிறு குழந்தையாயிருந்த போதே அவருடைய தந்தை ஸ்ரீ பி. எஸ். சுப்பிரமணியம் இறைவனடி சேர்ந்து விட்டார். இந்தச் சம்பவம் ஸ்ரீமதி சண்முகவடிவு அவர்களைத் துயரத்தில் ஆழ்த்தியது.

**வா**ழ்க்கைத் துணைவரைப் பிரிந்த துயரத்தை ஓரளவு மறப்பதற்குக் குழந்தை சுப்புலக்ஷ்மி இசைக் கலையில் காட்டிய ஆர்வம் உதவியாயிருந்தது. குழந்தையின் குரலினிமை அன்னையை மெய்மறக்கச் செய்தது. நாளுக்கு நாள் அந்தக் குழந்தையிடம் வளர்ந்து வந்த சங்கீத ஞானத்தைக் கண்டு ஸ்ரீமதி சண்முக வடிவு பெருமிதம் அடைந்தார்.

குழந்தைக்குப் பத்து வயது பூர்த்தி ஆவதற்குள்ளேயே தம்முடன் கச்சேரி மேடைகளில் அமர்ந்து தமக்கு உதவியாக அவ்வப்போது பாடும்படி செய்தார்.

அவ்வாறு அன்னையும் புதல்வியும் சேர்ந்து கச்சேரி செய்த நாட்களில் அவர்களுடைய கச்சேரியைக் கேட்ட ரஸிகர்கள் இன்றைக்கும் அதை நினைவு வைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

அன்னை சண்முகவடிவு அம்மாள் வீணை வாத்தியத்தின் கம்பிகளை மீட்டி உண்டாக்கிய இசை அதிக இனிமையானதா, குழந்தை சுப்புலக்ஷ்மியின் குரலிலிருந்து பெருகிய இசை வெள்ளம் அதிகமதுரம் பொருந்தியதா என்று சங்கீத ரஸிகர்கள் சர்ச்சை செய்தார்கள்.

“ தம்மின் தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லாம் இனிது ”

என்றார் வள்ளுவர் பெருமான். தம்மை விடத் தம் குழந்தைகள் கலைத் துறையில் சிறப்படைந்து புகழ் பெறுவதைப் பார்க்கும் பாக்கியம் உலகில் சிலருக்குத்தான் கிடைக்கக் கூடும். அந்த பாக்கியம் தமக்குக் கிடைக்கப் போகிற தென்பதை ஸ்ரீமதி சண்முகவடிவு உணர்ந்து கொண்டார். வாய்ப் பாட்டுக் கச்சேரியில் தாம் அடைய முடியாமற்போன புகழைத் தம் புதல்வி அடைவாள் என்று நிச்சயம் கொண்டார்.

எனவே, கிராமபோன் கம்பெனியார் ஸ்ரீமதி சண்முகவடிவு அவர்களை இசைத்தட்டுப் பதிவு செய்வதற்காக அழைத்தபோது தமது பத்து வயதுக் குமாரியையும் அழைத்துச் சென்றார்.

ஸ்ரீமதி சண்முகவடிவு அம்மாளின் தானம் வாசிப்பை ஓர் இசைத்தட்டிலும், 'சிவதீக்ஷா' என்னும் இனிமையான பதத்தை இன்னொரு இசைத்தட்டிலும் கிராமபோன் கம்பெனியார் பதிவு செய்து கொண்டார்கள்.

அந்த இரண்டு இசைத்தட்டுகளும் ஸ்ரீமதி சண்முகவடிவுக்கு மிக்க புகழை அளித்தன. கிராமபோன் கம்பெனியின் ரிகார்டிங் என்ஜினியரான மிஸ்டர் காரின் என்ற ஆங்கிலேயர், ஸ்ரீமதி சண்முகவடிவு அம்மாளின் 'தானம்' இசைத்தட்டைத் தம்முடன் இங்கிலாந்துக்கு எடுத்துச் சென்றார். அங்கு பலரும் அதைக் கேட்கும்படி செய்ததுடன், தமது பாராட்டுதலை விரிவாக எழுதித்தெரிவித்தார்.

**ஸ்ரீ**மதி சண்முகவடிவு அம்மாள் இசைத் தட்டில் தம் வீணை வாசிப்பைப் பதிவு செய்த அதே சமயத்தில், குழந்தை சுப்புலக்ஷ்மியின் பாட்டு ஒன்றையும் பதிவு செய்வதற்கு ஏற்பாடு செய்தார். அன்னை கற்பித்திருந்த 'மரகதவடிவும்' என்று தொடங்கும் செஞ்சுருட்டி ராகப் பாடலைப் பத்து வயது நிரம்பாத குழந்தை பாடினாள். தாயாரைத் திருப்தி செய்வதற்காகக் கிராமபோன் கம்பெனியாரும் அந்தப்பாட்டைப் பதிவு செய்து கொண்டார்கள். அந்த இசைத்தட்டு அவ்வளவு பிரபலம் அடையப் போகிறது என்று யாரும் எதிர்பார்க்கவில்லை. ஆறு கட்டை சுருதியில் குழந்தை சுப்புலக்ஷ்மி பதிவு செய்திருந்த அந்த 'மரகத வடிவும்' என்ற இசைத்தட்டு வெளியான பிறகு, சிலகாலம் தமிழ் நாடெங்கும் அந்தப் பாட்டு உச்ச ஸ்தாயியில் ஒலித்துக் கொண்டிருந்தது.

இதற்குப் பிறகு ஸ்ரீமதி சண்முகவடிவு அம்மாளுக்குத் தமது குமாரியின் முன்னேற்றமே முக்கியமான மனோரதம் ஆயிற்று. சில வருஷங்களுக்கெல்லாம் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மியைத் தனியாகவே வாய்ப்பாட்டுக் கச்சேரி செய்யப் பண்ணினார். அப்போதெல்லாம் தாம் அருகில் அமர்ந்திருந்து குமாரியின் குரலினிமையில் மெய்மறந்திருந்தார். சபையிலுள்ள ரஸிகர்கள் குழந்தையின் பாட்டை ரஸிப்பதைக் கண்டு அன்னை பெருமிதம் அடைந்தார்.

சங்கீத உலகில் ஸ்ரீமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மியின் புகழ் நன்கு நிலை பெற்று விட்டது என்பதைக் கண்ட பிறகு ஸ்ரீமதி சண்முகவடிவு அம்மாள் தாம் வீணைக் கச்சேரி செய்வதை நிறுத்திக் கொண்டார். தமது குமாரியின் புகழே தமது புகழாகக் கருதி மகிழ்ந்து வருகிறார்.

இந்தத் தாயும் மகளும் போல் கர்நாடக சங்கீதத்துக்குத் தொண்டு செய்வதற்கு இன்னும் பலரை அளித்து அருளும்படி, வெள்ளைத் தாமரைப் பூவிலும் வீணை செய்யும் ஒலியிலும் விளங்கும் கலைமகளைப் பிரார்த்திப்போமாக.

இலக்கியச் செல்வம் 48

# மேல் காற்று

பேராசிரியர் அ. சீநிவாசராகவன்

இலையுதிர் காலம்.

ஷெல்லி என்ற ஆங்கிலக் கவிஞன் வெளியிலே நோக்கினான்.

'ஓ' என்று இரைந்து சுழன்றது மேல் காற்று. வானமெங்கும் நிறைந்து வீசிய போதிலும், அது கண்ணிற் படாமல் கரந்து நின்றது. மரங்களின் பேயாட்டத்தில், பழுத்து உதிர்ந்த சருகுகள் குவியல் குவியலாய்ச் சிதறி ஓடியதில், காற்றின் வேகம் தெரிந்தது. இந்த வேகம் தாங்காமல் உயிரற்று விழுந்த இலைகளில்தான், எத்தனை வண்ணம்! மஞ்சள், கறுப்பு, சோகை வெள்ளை, இரத்தச் சிவப்பு, எத்தனை நிறங்கள்! கட்டுக்கடங்காத பேராற்றலாய், இலையுதிர் காலத்தின் நெடுமூச்சாய் அடித்தது காற்று. சருகுகள், தொழுநோய் பிடித்து அழிந்த இலைக் குவியல்கள், துள்ளித் துள்ளி, காற்றின் பிடியிலே வெறி பிடித்தவைபோலப் பறந்தன.

இவற்றைக் கண்டான் அந்த ஆங்கிலக் கவிஞன் ஷெல்லி. கண்ணிலே தென்படாமல்— ஆனால் எதிர்க்க முடியாத பெரு வலிமையாய்ச் சுழலும் காற்றை அழைத்தான்:

கட்டுக் கடங்காத மேல் காற்றே!
இலையுதிர் காலத்தின் உயிர் மூச்சே!
கண்ணிற் படாமல் கரந்து "வீசும் உன்னைக் கண்டு
உயிரற்ற இலைகள் ஓடுகின்றன.
மந்திர வாதியின் முன், புற முதுகிட்டு ஓடும்
பேய்களைப் போல,
உன்முன், இலைச் சருகுகள் ஓட்டம் பிடிக்கின்றன.

கூட்டம் கூட்டமாய்,
மஞ்சள், கறுப்பு, சோகை, இரத்தச் சிவப்பு,
எத்தனை எத்தனையோ வண்ணப் பழுப்புக்கள்,
தொழுநோய் பிடித்துச் செத்த சருகுகள்
சிதறி ஓடுகின்றன.

இதைப் பார்த்த கவிஞனுக்கு, காற்று ஓர் அழிக்கும் " சக்தியாகத் தோன்றுகிறது. நம் பாரதியார் எழுதவில்லையா?



வாயு கோடியோன், அவன் ருத்ரன்
அவனுடைய
ஓசை அச்சம் தருவது.

என்று 'காட்சி' என்ற உரைநடைக் கவிதையில், பாரதியார் பேசவில்லையா? காற்று ஒரு சங்காரமூர்த்தி, அழிப்பவன் என்று இங்கே பாரதியார் கூறுகிறாரே, அதே கருத்து ஆங்கிலக் கவிஞன் ஷெல்லிக்கும் உதயமாகிறது. அவன் எண்ணுகிறான்: 'ஆமாம், காற்று ஓர் அழிக்கும் சக்தி என்பது உண்மைதான். ஆனால் அது விளைக்கும் அழிவினால் அல்லவா புதிய உலகம் நிர்மாணமாகிறது! செத்த குப்பையை, வலிமையற்ற பொருளை, காற்றுத் தேவன் அகற்றுவதால் அல்லவா, புதிய உயிர் தோன்றுவதற்கு இடம் கிடைக்கிறது? இல்லாவிட்டால் உலகம் பிணக்காடு ஆகிவிடாதா?' இப்படியாக எண்ணும் கவிஞனுடைய காட்சியில், காற்றுத் தேவன் அழிப்பவனாக மட்டுமில்லை, காப்பவனாகவும் தோன்றுகிறான்:

காற்றே, நீ தேராக நிற்கிறாய்.
சிறகு முளைத்த விதைகளை
மாரிக் காலத்தின் இருட் பாயலுக்கு
நீ ஏந்திச் செல்கிறாய்.
அங்கே, ஒவ்வொரு விதையும்,
அதனதன் சவக்குழியில்,
பிணம் போல் அசைவற்றுக் கிடக்கின்றது.
பிறகு,
நீல வசந்தம் என்னும் உன் தங்கை
வருகிறாள்.
கனவில் ஆழ்ந்து உறங்கும் மண்ணெங்கும்,
அவள் ஊதுகின்ற காளத்தின் ஒலி.
விதைகள் கண் விழிக்கின்றன.
முளைகள் அரும்புகின்றன;
மந்தை மந்தையாய், உன்னைப் பருக,
உன் சகோதரி அவற்றை ஓட்டிச் செல்கிறாள்.
உயிர் துடிக்கும் வண்ணத்தால், மணத்தால்,
குன்றும், வெளியும், உலகும் நிரம்புகின்றன.

பாயல் - படுக்கை. காளம்-ஊதுது ஒலிக்கின்ற ஒரு வகை வாத்தியம்.

ஆகவே, காற்றினால் ஏற்படும் அழிவு, ஆக்கத்துக்கு இடம் படைக்கின்ற அழிவு. காற்று அழிப்பவன் மாத்திரம் இல்லை, அவன் காப்பவனும்கூட என்பது கவிஞனுக்குத் தெரிகிறது. அவன் காற்றை அழைக்கிறான்:

எங்கெங்கும் கட்டுக்கடங்காமல் அசை
கின்ற ஆற்றலே!
அழிப்பவனே, காப்பவனே!
காற்றே, கேள், இதைக் கேள்!

எதைக் கேட்பதற்கு, காற்றை அழைக்கிறான் இந்தக் கவிஞன்? அதைச் சொல்வதற்குள், கவிஞனுடைய மனம் காற்றுத் தேவனுடைய பராக்கிரமத்தைத் தொடர்ந்து செல்கிறது:

பாரதியார் இயற்றிய 'காட்சி'யில் வரும் கீழ்க்கண்ட அடிகளோடு ஒப்பிட்டுப் பாருங்கள்:

'காற்றே உயிர். அவன் உயிர்களை அழிப்பவன்.
காற்றே உயிர். எனவே உயிர்கள் அழிவதில்லை.'

வானமும் கடலும் பின்னிய கிளைகளில் இருந்து, மேகத் துணுக்குகள் வாடி வதங்கிய இலைகளைப் போல் பொல பொலவென்று உதிர்கின்றன. இவற்றை உதிர்த்த காற்று வெள்ளமாகப் பொங்குகிறது. இந்த வெள்ளத்தில் அடிபட்டு, மங்கலான தொடு வானத்திலிருந்து, வானத்தின் உச்சி வரையில், மேகங்கள் தாவுகின்றன, புயலின் கூந்தலாய். இரவு வருகிறது. இருண்ட சவக்குழியாக அமைகிறது. இதற்கு மேகக்கூரை வேய்கிறது காற்று. குழிக்குள், சாகும் வருஷம் சாய்ந்து கிடக்கிறது. அதன் மரண கீதம் பாடுகிறது காற்று.

இது ஒரு காட்சி!

இன்னொரு காட்சி:

மத்திய தரைக்கடல் வேனிற் கனவில் அழுந்திக் கிடக்கிறது. என்றோ ஒரு காலத்தில், கரையில் விளங்கிய மாளிகைகளும் கோபுரங்களும், தன் நீல மார்பில் நிழலாடிய விந்தையை, கனவிலே கண்டு நிறைவு பெறுகிறது உறங்கும் கடல். காற்று வந்து, கடலைத் தொட்டு எழுப்புகிறது.

இன்னொரு காட்சி:

காற்றுத் தேவன் வருகிறான். அவன் போவதற்கு வழிவிடுகின்ற முறையில், அத்லாந்திக் மகா சமுத்திரம் தன் அலைகளை உயர்த்தி, நீண்ட நெடும் பள்ளங்களை அமைக்கிறது. காற்றுத் தேவன் குரலைக் கேட்டதும், கடலின் ஆழத்தில் மலர்ந்த கொடிகளும், மலர்களும், சேறு படிந்த வனமும், சரேலெனப் பயந்து, நடுக்கமுற்றுக் கலங்கி, தம்மைத்தாமே மோதி அழித்துக் கொண்டு, முகம் வெளிர்த்துச் சரிகின்றன.

இக்காட்சிகளை, தன் மனத்திலே கண்டான் ஷெல்லி. கண் முன்னே, ஓங்கி அதிரும் காற்றை அழைத்து, 'காற்றே, அழிப்பவனே, காப்பவனே, இதைக் கேள்' என்கிறான். தொடர்ந்து, காற்றின் காதில் பேசுகிறான்:

காற்றே, நானும் உன்போல் இருந்தவனே!
அடங்காத நெஞ்சத்திலும், ஓயாத
வேகத்திலும்,
பெருமிதத்திலும், வன்மையிலும்,
உன்போல் இருந்தவனே.
ஆனால் இன்றோ
காலம் என்னும் பாரவிலங்கு
என்னைத் தளையிட்டு ஒடுக்கிவிட்டது.

இதைப் புரிந்து கொள்வதற்கு, ஷெல்லியைப் பற்றிச் சிறிது தெரிந்து கொள்ள வேண்டும். ஷெல்லி ஒரு தீவிரமான இலட்சியவாதி; புரட்சிகரமான பல கொள்கைகளை அவன் அழுத்தமாக நம்பினான்; இப்போது நம்மிடையே வழங்கி வருகின்ற முறையில் சொல்லப்போனால், அவன் ஒரு 'புரட்சிக் கவிஞன்'. பழங் காலத்துச் சமூகக் கோட்பாடுகள் ஒரு காலத்தில் நன்மை விளைத்திருக்கலாம். ஆனால் அந்த நன்மை ஒய்ந்த பிறகும், அவற்றை விடாமல், அவற்றுக்கு அடிமையாய் நிற்கின்ற கோழைத்தனமே மனித வாழ்க்கையின் முன்னேற்றத்துக்கு முட்டுக்கட்டை என்று ஷெல்லி வற்புறுத்தினான். 'ஏதோ பைத்தியக்காரன்' என்று சொல்லிவிட்டுத் தன் வழியே சென்றது ஆங்கில சமூகம். தன்னுடைய கொள்கைகளை நடைமுறைக்குக் கொண்டு வருவதற்கு, ஷெல்லி முயன்றான். உடனே சமூகம், அவனை விலக்க முற்பட்டது. இதனால் ஷெல்லி வருந்தினான். தன்னைப் பிறர் தூற்றுகிறார்களே என்று அவன் கவலைப்படவில்லை. இவ்வளவு அவநம்பிக்கைக்கு ஆளாகிவிட்ட தன்னுடைய பாடல்களுக்கு இதனால் மதிப்புக் குறைந்து விடுமோ, தான் கண்ட இலட்சியங்களை மக்கள் ஏற்காமல் இருந்து விடுவார்களோ என்பதுதான் அவன் கவலை. எவ்வளவு சுதந்திரத்தோடு இலட்சியங்களை நாடிச் சென்றான், அவற்றைப் பாடினான்!

இப்போது சமுதாயத்தின் சட்டதிட்டங்களும், கட்டுப்பாடுகளும் தன்னையே விலங்கிட்டு விட்டனவே!

இந்த மேல்காற்றைப் போல இருக்கப்படாதா? இருந்தவன்தானே! இப்போது...இப்போதென்ன...

காலம் என்னும் பார விலங்கு
என்னைத் தளையிட்டு ஒடுக்கி விட்டது.

ஆகவே காற்றிடம் முறையிடுகிறான்:

நீ தூக்கி எறிந்து விளையாடும் வதங்கிய
இலையாய் மட்டும் நான் இருந்தால்,
உன்னுடன் பறந்து செல்லும் மேகமாய்
இருந்தால்,
உன் வலிமையைத் தாங்க முடியாமல் திணறி,
அதிலே பங்கு கொண்டு,
சுயேச்சையில் உனக்குமட்டுமே தாழும்
கடல் அலையாய் இருந்தால்...
என் வேதனையைச் சொல்லி உன்னோடு
மன்றுட மாட்டேன்;
அலையைப் போல், இலையைப் போல்,
மேகத்தைப் போல்,
என்னையும் தூக்கி உயர்த்தி நில்,
கைவிடாதே...
வாழ்க்கையின் முட்புதரில் விழுகிறேன்;

இரத்தம் சொட்டி அழிகிறேன்:
ஆயினும், ஒரு காலத்தில் உன்போல்
இருந்தவனே !

சமுதாயச் சிறையில் அகப்பட்டுக் கால விலங்கால் கட்டுண்ட கவிஞனை விட, மேல்காற்றின் வலிமையில் பங்கு கொள்ளும் இலையும், மேகமும், அலையும் ஜீவசக்தி நிரம்பியவை என்று ஷெல்லி எண்ணினானோ, என்னவோ!

சரேலென்று, ஷெல்லியின் சோர்வு கரைகிறது. காற்றினிடம் மன்றாடுவதை விட்டுவிட்டு, அந்தக் காற்றுக்கு ஷெல்லி கட்டளை இடுகிறான்.

காற்றே
உன்னைக் குதிரை கொண்டேறித் திரியும்
உள்ளம் படைத்து விட்டோம்

என்று பாரதியார் பாடவில்லையா, அம்படித்தான் ஆங்கிலக் கவிஞன் ஷெல்லியும், காற்றைத் தன் பாடல்களின் வாகனமாக அமைக்கிறான்:

காற்றே!
இப்போது உயிரற்றவைபோல் கிடக்கும்
என் சிந்தனைகளை
வதங்கிய இலைகளைப் பரப்பிப் புதிய வாழ்வு
வருக்கிறாய் இல்லையா
அதுபோல, எங்கும், அண்டம் முழுவதும்,
பரப்பு.
அணையாத நிவர்த்தியிலிருந்து பொறிகள்
உதிரவில்லையா
அப்படி என் சொற்களை மனிதரிடையே தூவிடு
உறங்கும் உலகத்திற்கு என் சொல்லின்
மூலமாக
வருங்காலச் செய்தியைப் பேசும்
காளமாக நில்.

இலை உதிர்காலம், அதன்பின் மாரிக் காலம்—இவை காண்கின்ற அழிவில், வசந்த ஜனனத்தின் உயிர்த்தத்துவம் மறைந்து கிடக்கவில்லையா? அது போல இன்று கவிஞனுடைய பாடல்கள் கவனிப்பாரற்றுக் கிடக்கலாம், மண்ணில் புதைந்த விதையைப் போல. ஆனால் நாளைக்கு வசந்தம் வரும்போது, விதை முளைத்து மலராமலா இருந்து விடும்?

மாரிக்காலம் வந்தது. வந்தால் என்ன?
வசந்தம் வராமலா போய்விடும்?

வரும் என்பதற்கு அறிகுறிதானே இந்த மேல்காற்று. இது போலவே, இன்று ஒதுக்கப்பெற்ற கவிஞனுடைய பாடல்களின் மூலமாக, நாளைக்கு, புதிய உலகம் நிர்மாண மாகாதா? 'ஆகும்' என்ற ஷெல்லியின் நம்பிக்கையே 'மேல் காற்று'* என்ற அற்புதப் பாடலாக வடிவெடுத்தது.

* Ode to the West Wind.

# வள்ளுவர் வாசகம்

## ராஜாஜி

10

மகனுக்குத் தகப்பன் என்ன செய்ய வேண்டியது? 'சொத்து வைத்திருக்கிறேன், அவனுக்கு ஒன்றும் குறைவில்லை' என்று எண்ணுவது தவறு. சொத்தைவிடக் கல்வியும் பண்பாடும் அதிகமாகப் பயன்படும். கல்வி கேள்வியடைந்த மக்களிடையில் மதிப்புப் பெறும்படியாக மகனை வளர்க்க வேண்டும். பெரியோர்கள் கூடும் சபையில் முன்னணியில் இருக்கத் தகுதியைத் தரக்கூடிய கல்வியையும் பண்பாட்டையும் மகன் அடைவதற்கு வேண்டியதைச் செய்ய வேண்டும். அதுவே பெருஞ் செல்வத்தை வைத்துப் போனதாகும்.

தான் பெற்ற குழந்தைகள் சுகம் அடைய வேண்டும் என்றால் கல்வி கற்பிப்பதே தகப்பனுடைய கடமை. கல்வி கற்ற பெரியோர்களின் நன்மதிப்பை அடையச் செய்வது தகப்பனுடைய தனிப் பொறுப்பு. வள்ளுவர் காலத்தில் கல்விக்கும் கல்வி கற்றவர்களுடைய மதிப்புக்கும் உயர்வு தந்தார்கள்.

> தந்தை மகற்குஆற்றும்
> நன்றி அவையத்து
> முந்தி இருப்பச்
> செயல்.

[மகற்கு ஆற்றும் நன்றி: மகனுக்குச் செய்யும் நன்மை.]

மக்கட் பேற்றில் தாய் அடையும் மகிழ்ச்சி மிகப் பெரிது. இது இயற்கையமைப்பு. அந்த மகிழ்ச்சியையும் விட அதிக மகிழ்ச்சி தாய் அடைவது எப்பொழுது?—தான் பெற்ற மகன் உலகத்தில் நல்ல பெயர் எடுத்தால்.

> ஈன்ற பொழுதின்
> பெரிதுஉவக்கும் தன்மகனைச்
> சான்றோன் எனக்கேட்ட
> தாய்.

'சான்றோன்' என்றால் சால்பு உடையவன். சால்பு என்பதில் கல்வி, ஒழுக்கம், பண்பாடு அனைத்தும் அடங்கும்.

மகனைப் பற்றிய புகழ்ச் சொல் தாயின் காதில் விழும்போது உண்டாகும் இன்பத்தைச் சொல்லுகிறது இந்தக் குறள்.

பிறப்பது மட்டும் போதாது. நற்புகழ் பெற வேண்டும். அதற்கு உரிய கல்வியும் ஒழுக்கமும் அடைந்து வாழ்க்கை நடத்த வேண்டும்.

• • •

புகழைப் பற்றி இன்னும் சொல்லுகிறார் முனிவர். இதையும் தமது தனி நடையில் சொல்லுகிறார்.

> மகன்தந்தைக்கு ஆற்றும்
> உதவி இவன்தந்தை
> என்நோற்றான் கொல்என்னும்
> சொல்.

'தந்தையானவன் என்ன தவம் புரிந்து, என்ன தான தருமம் செய்து, இப்படிப்பட்ட மகனைப் பெற்றான்' என்று உலகம் வியந்து பேசும்படியான பண்பு மகனிடம் இருக்க வேண்டும். அப்போதுதான் பெற்று வளர்த்த தகப்பனுக்கு மகன் தன் கடமையைச் செய்தவன் ஆகிறான். மகனிடம் தகப்பன் வேறேதும் எதிர்பார்ப்பதில்லை. அவன் உலகில் நல்ல பெயர் சம்பாதித்தால் போதும்.






கல்யாண காலங்களில் வாழை மரத்துக்கு ஒரு மதிப்பு ஏற்படும். பொங்கல் நன்னாளில் கரும்புக்கு மதிப்பு. விநாயக சதுர்த்தியன்று களிமண்ணுக்கு ஏக மதிப்பு.

அதுபோல ஒரு 'ரொம்ப சுமார்'ப் படம் வந்தால் ஏற்கெனவே ஓடிக் கொண்டிருக்கும் ஒரு சுமார்ப் படத்துக்குத் திடீர் என்று ஒரு மதிப்பு.

''மகாதேவி'' படம் வெளி வந்ததும், ஏற்கெனவே ஓடிக் கொண்டிருந்த ''முதலாளி'' படத்துக்குத் தனி மவுசு ஏற்பட்டுவிட்டது.

ஆகவே, படம் வெளியிடுவோர் —காலம் பார்த்துப் பயிரிடும் விவசாயியைப் போல்- காலபேதங்களைப் பார்த்துப் படத்தை வெளியிட வேண்டும். ஒரு காலத்துக்கு உகந்ததாயிருந்த படம் இன்னொரு காலத்துக்கு ஏற்றதாயிருக்குமென்று சொல்ல முடியாது.

ஆர். என். ஆர். பிக்சர்ஸாரின் ''அன்பே தெய்வம்'' சமீபத்தில் வந்த படங்களுக்கு இடையில் வைத்துப் பார்த்தால் நல்ல படம் என்றே பெயரெடுத்து விடும்.

இந்தப் படத்தில் சினிமா டைரக்டர் மோகன்ராவாக நடிக்கும் நாகேந்திர ராவ் தான் இந்தப் படத்தின் டைரக்டர். அவர் புகழ் பெற்ற நடிகர். இந்தப் படத்தில் இயல்பாக நடித்து, பேசியிருப்பதுடன் படத்தை நன்றாகவும் டைரக்ட் செய்திருக்கிறார்.

''திருவருள் புரிவாய் ஜகன் மோகினி'' என்ற பாட்டு திரைக்கதை துவங்கியதுமே பி. லீலாவின் குரலில் ஒலிக்கிறது. கர்ணாமிருதமாகக் காதில் விழுந்த பாட்டு உள்ளத்திலும் சுகானுபவமாக நிரம்புகிறது. இந்தப் பாட்டைக் கேட்ட பிறகு மற்றப் பாட்டுக்களைப் பற்றிய நினைவே எனக்கு ஏற்படவில்லை. நல்லபடியாக ஒரு பாட்டு அமைந்தாலும் போதுமே.

''வீட்டுக்கு வீடு வாசற்படி'' என்னும் பழமொழியை, ''படத்துக்குப்படம் நடனம்'' என்று மாற்றியமைக்கலாம் என்று யோசனை கூறினார் ஒரு நண்பர். ஆனால் நவநாகரிகக் கட்டடங்களில் வாசற்படி தற்காலத்தில் எடுபட்டுப் போய்விட்டது என்பதை நண்பர் கவனிக்கவில்லை என்று நினைக்கிறேன்.

வீடுகளில் வாசற்படிதான் எடுபட்டுப் போய்விட்டதே தவிர, நமது படங்களில் நடனம் விடுபட்டுப் போகவில்லை. இதற்காகவே முன்பெல்லாம் ராஜாராணிக் கதைகளாகத் தேடிப் பிடித்துப் படமெடுப்பார்கள். அவைகளில் நடனத்தைப் பிடித்துப் போடுவதில் சிரமம் ஒரு சிறிதும் இல்லையல்லவா?

ஆனால் தமிழ்ப் படாதிபதிகள் இப்பொழுதும் அதுபற்றிக் கவலை கொள்வதில்லை. பாட்டாளி மக்களைப் பற்றிய படம், விவசாயிகளைப் பற்றிய படம் இப்படி எதைப் பற்றிய படமாயிருந்தாலும் அந்தந்தத் தொழிலுக்கு ஏற்ப நடனத்தைப் புகுத்தி வருகிறார்கள். பாலில் நீரைக் கலப்பது எப்படி வழி வழி மரபாக வந்துகொண்டிருக்கிறதோ அதுமாதிரி, சினிமாப் படத்தில் நடனத்தைப் புகுத்துவதும் மரபாகி வருகிறது. பண்ணும் பரதமும்தான் பாரத நாட்டுக்கு விண்ணை முட்டும் புகழை அளித்தன. அந்தப் புகழ் மாசடையா வண்ணம் பாதுகாத்துக் கொள்வது நம் கடமை.

இந்தப் படத்திலும் நடனம் இருக்கிறது. அதில் ஈ. வி. சரோஜா கவர்ச்சியுடன் தோன்றுகிறார். வேகமும் பாவமும் கொண்டு அவர் காட்டும் அபிநயம் மிகவும் சுவாரஸ்யமாயிருக்கிறது. அப்பொழுது பாடப்படும்

''வெண்ணிலவு மௌனச்சடிச்சி'' என்ற நீண்ட பாட்டு நன்றாயிருக்கிறது.

திருடும் கணவன்; அவனைத் திருத்த முயலும் மனைவி; நன்றாய் வாழும் குடும்பம்; அக் குடும்பத்தில் குழந்தையில்லாக் குறை; அக்குறைநீரத் திருடனின் பெண் குழந்தையை எடுத்து வளர்க்கின்றனர். திருடனும் அவன் மனைவியும் நீண்ட காலம் சிறையிலிருந்து விட்டுத் திரும்புகின்றனர்.

அப்புறம்தான் திரைக்கதையில் திருப்பம் ஏற்பட்டுக் கதையில் சூடு பிடிக்கிறது.

திருடன் பெற்ற பெண் நன்றாய் வளர்ந்து, அவளுக்கு ஒரு காதலனும் கிடைத்துக் கல்யாணமும் நிச்சயமாகிறது. அச்சமயத்தில் திருடனால் தடங்கல் ஏற்பட்டு, அதைத் தடுத்த அவன் மனைவிக்கு அடிபட்டு ஆஸ்பத்திரிக்குப் போக நேர்டுகிறது. ஆஸ்பத்திரியில் அவல நிலையில் கிடக்கும் மனைவியைப் பார்த்ததும் திருடன் திருந்திக் கண்ணீர் விடுகிறான். அப்பொழுது திருடன் மகள், அவள் கணவன், வளர்ப்புத் தந்தை, அவர் மனைவி எல்லோரும் ஆஸ்பத்திரிக்கு வந்து கண்ணீர் விட்டு, படத்தை முடித்து வைக்கின்றனர். திருடன் மனைவி பிழைத்து விடுகிறாள்.

திருடனாக நடிக்கும் எம். கே. ராதா பழைய நடிகர். ''சதி லீலாவதி''யிலிருந்து ''சந்திரலேகா;'' ''அபூர்வ சகோதரர்கள்'' வரையில் புகழ் பெற்று விளங்கியவர்.

இந்தப் படத்தில் குடிகாரனாக, சூதாடுபவனாக, திருடனாக, கைதியாக நடிக்கும் சந்தர்ப்பங்களிலெல்லாம் நன்றாக நடித்திருக்கிறார்.

எத்தனையோ முறை மனைவி எடுத்துச் சொல்லியும், இடித்துச் சொல்லியும் கொஞ்சமும் திருந்தாத ஒரு முரட்டுக் கணவன் பாகம் அவர் ஏற்றிருப்பது. அதை மிகவும் திறமையோடு கையாண்டிருக்கிறார். படம் முடியும் தருணத்தில், ஆஸ்பத்திரியில், மனைவி நினைவிழந்து கிடந்தபோது, கடவுளை நோக்கி அவர் பிரார்த்தித்துக் கண்ணீர் விட்டதைப் பார்த்து, படம் பார்ப்பவர்களெல்லாம் கண்களைத் துடைத்துக் கொண்டனர். அந்த நடிப்பு சிகரமாக அமைந்துவிட்டது.

படத்தின் வசனம் படபடப்போ, ஆர்ப்பாட்டமோ அடுக்குத் தொடரோ இல்லாமலே அருமையாக இருக்கிறது.

திருடன் மனைவி பார்வதியாக நடிக்கும் ஸ்ரீரஞ்சனி தம் பாகத்தை மிகவும் பொருத்தமாகவே நடித்திருக்கிறார். கண்ணீர் இவருக்குத் தண்ணீர்பட்ட பாடமாயிருக்கின்றது.

திருடன் மகளை வளர்க்கும் டைரக்டர் மோகன்ராவின் மனைவியாக, சந்தியா நடிக்கிறார். அவருக்கு நல்ல முகவெட்டு இருக்கிறது. அதிகமாக உழைக்காமல் நல்ல பெயர் தட்டிக் கொள்கிறார்.

சின்னப் பெண் சரஸாவாக, பேபி உமா இயல்பாக நடிக்கிறாள்.

போலீஸ் சூப்பரிண்டெண்டாக நடிக்கும் சாரங்கபாணி மிடுக்குக் குரலில் போலீஸ் ஸ்டேஷனில் முழக்கி, பாவத்துடன் தபேலா வாசித்து, குலுங்கக் குலுங்க நகைத்து எல்லோரையும் நகைக்க வைக்கிறார்.

திருடன் மகள் சரஸாவின் பாகத்தை ஏற்ற சூர்யகலா இன்னும் நிறைய நடித்துப் பழக வேண்டும். அவர் பெயர் நன்றாயிருக்கிறது!

அலுப்புத்தட்டும் காட்சிகள்: — சூதாடும் இடம்; ரௌடிகளின் ஆர்ப்பாட்டங்கள்.

கவனம் செலுத்தியிருக்க வேண்டிய இடம்: திருட்டுக் குற்றத்துக்காகச் சிறையில் அடைபட்டு விடுதலையடைந்த திருடனின் உடை அவ்வளவு நல்லதாக இருக்க வேண்டுமா? வில்லன், கொடியவன் என்றால் கழுத்தில் மப்ளரைக் கட்டிக் கொண்டு சிகரெட்டைப் புகைத்துக் கொண்டேதானிருக்க வேண்டுமா?

நம் நாட்டில் நாம் சாதாரணமாக அணியும் ஆடைகளிலும் கதாநாயகர்கள் தோன்றலாம் என்ற நிலையை நம் படங்களில் புகுத்துவதில் தவறு ஒன்றும் இல்லை.

ரசிக்கவேண்டிய காட்சி: 'சத்தியவான் - சாவித்திரி'யில், இறந்த கணவனின் உடலுக்கு அருகிலிருந்து அழுகிறாள், சாவித்திரி. இது படமாக்கப் படுகிறது. டைரக்டரின் சங்கடம் நன்கு தெரிகிறது. இந்தக் காட்சி இயல்பான ஹாஸ்யத்துடன் நிகழ்கிறது.

இந்தப் படம் கத்திச் சண்டைக்கும், ஆவேசச் சொற்பொழிவுகளுக்கும் தப்பிப் பிழைத்திருக்கும் ஒரு நல்ல படம்.

''அன்பே தெய்வம்'' என்று படத்துக்குத் தலைப்புக் கொடுத்து விட்டதற்காகப் பல இடங்களில் அன்புக்கு அதிக முக்கியத்துவம் காட்டுவதற்கு முயன்றிருக்கிறார்கள். அதில் வெற்றி பெற்றிருக்கிறார்களா, இல்லையா என்பதைச் சொல்ல முடியாது. தமிழ்ப் படாதிபதிகள் இன்னும் காலத்தை ஒட்டிப் படம் எடுக்கக் கற்றுக் கொள்ளவில்லை என்றுதான் எண்ணத் தோன்றுகிறது.






நன்றாயிருக்கும் என்று நினைத்து ஒரு ஆரஞ்சுப் பழச் சுளையை எடுத்து வாயில் போட்டுக் கொண்டால் சில சமயம் அது புளிக்கும்; அதேமாதிரி, புளிக்கும் என்று எதிர்பார்த்து வாயில் போட்டுக் கொண்ட பழச் சுளை கொஞ்சமும் எதிர்பாராத விதமாகத் தித்திப்பதும் உண்டு.

''துஷ்மன்'' படம் நான் எதிர்பார்த்ததற்கு மாறாகத் தித்தித்தது.

ஒரு திருடன், முடிச்சுமாறி - கண்யமான மனிதனைப் போல் வேஷம் போட்டு, ஒரு பெண்ணின் காதலையும் பெற்று விடுகிறான். அப்புறம் தான் அவள் ஒரு போலீஸ் அதிகாரியின் தங்கை என்பது தெரிய வருகிறது. திருடன் மிகவும் துணிவுடன் தன் காதலியின் கரம் பற்றுகிறான். பல நாள் திருடன் ஒரு நாள் அகப்பட்டுக் கொள்ளுகிறான். போலீஸ் அதிகாரியே அவனைக் கண்டுபிடித்துவிடுகிறார்.

சின்ன வயதில் தன் மகன் பள்ளிக்கூடத்தில் திருடும் சிறுசிறு திருட்டுக்களுக்கெல்லாம் தாய் தந்த ஆதரவு அவனைப் பெரிய கொள்ளைக்காரனுக்கி விடுகிறது. திருடன் ராம்சிங்காக நடிக்கும் தேவ் ஆனந்த் கடைசிக் காட்சியில் கண்ணீருக்கும் விம்மல்களுக்கும் இடையில், தமது பூர்வாசிரம நினைவுகளை மனத்திரையில் பார்க்கும்போது எல்லோருடைய நெஞ்சமும் குலுங்கி விடுகிறது. அற்புதமாக நடித்திருக்கிறார்.

தன் கணவன் ஒரு பெரிய திருடன் என்று தெரிந்து கொண்டதும் அவனைச் சமூக விரோதியாகப் பாவிக்கிறாள் மனைவி. ஆனால், அவனைத் தன் சகோதரன் கைது செய்ய முற்படும் போது, கள்வனானாலும் கணவன் என்ற கருத்தைக் கொண்டு அவனைக் காட்டிக் கொடுக்க மறுக்கிறாள். ''அம்மா, நீயே பொய் சொல்லலாமா?'' என்று அச்சமயம் அவள் குழந்தை கேட்டதும் எல்லோருடைய உள்ளங்களும் நெகிழ்ந்து விடுகின்றன.

தன் குழந்தை நோயுற்று வருந்தியபோது, கணவன் தன் திருட்டுத் தொழிலின் மூலம் மகனுக்கு மருந்து வாங்கித் தந்ததையும், செய்த பண உதவியையும் பெறக் கண்டிப்பாக மறுத்து விடுகிறாள்.

இந்தக் கட்டங்களில், திருடனின் மனைவியாக நடிக்கும் உஷாகிரண் அபாரமாக நடித்திருக்கிறார். ஆனால், காதல் கட்டங்களிலும், ஆரம்பக் காட்சிகளிலும் உஷாகிரண் நம்மை முற்றிலும் ஏமாற்றி விடுகிறார். பின்னால் வரும் காட்சிகளில் நன்றாய் நடிக்கக் கூடும் என்ற நம்பிக்கைகூடத் தளர்ந்து விடுகிறது.

பின்னைப் பிராயத்து ராம்சிங்காக நடிக்கும் சிறுவன் மிகவும் நன்றாக நடித்திருக்கிறான்.

ஏரிக் கரை மரத்தில் ஊஞ்சல் கட்டி ஆடும் பெண்களில் ஒருத்தி கள்வனின் உள்ளம் கவர்கிறாள். தவறு! அவள் கழுத்தில் மின்னிய பொன் சங்கிலி அவன் உள்ளம் கவர்கிறது! ஒரு சிறு கத்தியை ஊஞ்சல் கயிற்றின் மேல் லாகவமாக வீசி, அதை அறுத்து ஏரித் தண்ணீரில் விழச் செய்கிறான், திருடன். பிறகு அவளைக் காப்பாற்றுகிறான்; அவள் கழுத்துச் சங்கிலியைக் கைப்பற்றுகிறான்! இந்தக் காட்சி நன்றாகப் படமாக்கப் பட்டிருக்கிறது.

ஒருவனை, ''துஷ்ம''னாக(விரோதியாக)க் காட்ட வேண்டுமென்பதற்காக, துப்பாக்கிச் சண்டை ஒன்றைக் காட்டியிருக்க வேண்டியதில்லை. அது ஒரு ஆங்கிலப் படத்திலிருந்து வெட்டிச் சேர்த்த மாதிரியிருக்கிறது. என் நண்பர் 'ட்ரெயில'ரில் அந்த 'டுமீல் டுமீல்' காட்சியைப் பார்த்து விட்டுத்தான் 'இந்தப் படத்தைப் பார்க்க வேண்டியதில்லை' என்று முடிவு கட்டிவிட்டார்.

போலீஸ் அதிகாரியாக நடிப்பவர் உணர்ச்சி பொங்க நடித்து ரஸிகர்களை உலுக்காவிட்டாலும், சில கட்டங்களில் அழுத்தமாக நடித்துப் படத்துக்கு உணர்ச்சி யூட்டுகிறார்.

நினைவில் இருத்திக் கொள்ளும்படியாகப் பாட்டுக்கள் எதுவும் அமையவில்லை.

# ஏழை மக்களும் பி. ஸி. ஜியும்

தலைவர் ராஜாஜி அவர்களுக்கு, நமஸ்காரம்.

பி. ஸி. ஜி காரர்கள் தாராபுரத்திலும், மூக்கனூரிலும் கையாண்ட விஷமப் பிரசாரத்தைக் கவனியுங்கள். "விஷக் காய்ச்சல் வருது. பி. ஸி. ஜி போட்டுத் தடுத்துக் கொள்ளுங்கள். போட்டுக் கொள்ளாதவர்களுக்கு ரூ 25 அபராதம்" என்ற விஷமப் பிரசாரத்தை 'டாம் டாம்' அடித்துத் தெரிவித்தார்கள். அதை நம்பித்தான் காவேரி என்ற ஏழை நெசவாளி 1-12-57ல் பி. ஸி. ஜி ஊசி போட்டுக் கொண்டார். அதனால் வியாதி அதிகரித்து 4-12-57ல் சேலம் ஜெனரல் ஆஸ்பத்திரிக்குச் சென்றார். அங்கு படுக்கை காலியில்லை என்று மருந்து மட்டும் கொடுத்து அனுப்பி விட்டார்கள். காவேரிக்கு சொசைட்டி பொதுநல நிதியிலிருந்து ரூபாய் ஐந்து கொடுத்துப் பெருந்துறை ஆஸ்பத்திரிக்கு 12-12-57ல் அனுப்பியுள்ளோம்.

காவேரியைப் பற்றி 4-12-57 அன்று தங்களுக்கு எழுதியிருந்தேன். அந்தக் கடிதம் 15-12-57 கல்கி வட்டமேஜையில் பிரகரமாகி யிருந்தது. அதைப் படித்துவிட்டு பி. ஸி. ஜி காரர்கள் 14-12-57 மாலை நாலேமுக்கால் மணிக்கு என்னிடம் வந்தார்கள். "கல்கியில் காவேரியைப் பற்றி எழுதி வெளியிட்டிருந்தாயே, நீ ஒரு டாக்டரா? அவனுக்குத் தீங்கு நேரவில்லை என்று ஒரு ஸ்டேட்மெண்ட் கொடு" என்று என்னைக் கேட்டார்கள்.

"காவேரி பி. ஸி. ஜி போட்டுக் கொண்டதிலிருந்து கஷ்டப்படுகிறார். பெருந்துறை ஆஸ்பத்திரிக்குப் போயிருக்கிறார். ஆகையால் பொய் ஸ்டேட்மெண்ட் உமக்குக் கொடுக்க முடியாது" என்று சொல்லி விட்டேன்.

"முட்டாளே, கொடுக்க முடியுமா, முடியாதா?" என்று என்னைப் பயமுறுத்திப் பார்த்தார்கள்.

"பொய் ஸ்டேட்மெண்ட் உமது பயமுறுத்தலுக்கு அஞ்சிக் கொடுக்க முடியாது" என்று தீர்மானமாகச் சொல்லிவிட்டேன். 'முட்டாள்' என்று மழைமாரி பெய்தார்கள்.

எனக்கு முட்டாள் பட்டம் வந்தாலும் சரி; ஏழை ஜனங்களை ஆண்டவன் பி. ஸி. ஜியினின்றும் காப்பாற்றினால் அதுவே போதும்.

*தாராபுரம் புதூர்*
*15—12—57* டி. வி. ராஜகோபாலன்

பி. ஸி. ஜியைச் சர்க்கார் விடவில்லை. எனக்குப் பல கடிதங்கள் அமெரிக்க டாக்டர்களிடமிருந்து வருவதைப் படித்து வருகிறேன். பி. ஸி. ஜியில் எள்ளளவு பயனும் இல்லை என்பதும் அது பலருக்குத் தீங்கு இழைக்கிறது என்பதும் என் உறுதியான எச்சரிக்கை.

பி. ஸி. ஜி பிரசாரத்துக்காக உத்தியோகஸ்தர்களுக்குச் சம்பளம் கொடுத்து வீண் செலவு செய்து வருகிறார்கள் சர்க்கார். எவ்வளவு சொல்லியும் நிறுத்தவில்லை.

பலாத்காரமாக ஊசி குத்த யாருக்கும் அதிகாரம் இல்லை. அதற்கு யாரும் உடன்பட வேண்டியதில்லை.

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரி
*20—12—57*

## பூஜ்யத்தின் பெருமை

*பண்டித மதன மோகன மாளவியா காசி ஹிந்து சர்வகலாசாலைக்கு நிதி திரட்டும் நோக்கத்துடன் ஒரு முறை சென்னைக்கு வந்திருந்தார். ஒரு பெரிய பிரபுவைச் சந்திக்கச் சென்றார். மாளவியா வந்த நோக்கத்தைப் புரிந்து கொண்ட பிரபு உடனே ஒரு செக் எழுதி அவரிடம் சமர்ப்பித்தார்.*

*மாளவியா என்ன தொகை, எது தொகை என்று பாராமலே தாம் தங்கியிருந்த இடத்துக்கு வந்தார். செக் நூற்பதினாயிரம் ரூபாய்க்குத் தரப் பட்டிருந்தது.*

*"சுத்தப் பூஜ்யம் ஐயா நீர். பூஜ்யம் கூடச் சரியாகப் போட உமக்குத் தெரியவில்லையே! உம்மைப் பரம பூஜ்யர் என்று எண்ணி வந்தேனே! இப்படியா எனக்கு ஏமாற்றத்தை அளிப்பது? எனவே தங்கள் செக் தங்களுக்கே வாபஸ்!" என்று எழுதிக் கையோடு கையாகத் திருப்பி அனுப்பி விட்டார்.*

*கடிதத்துடன் சென்ற ஆள் கடிதத்துடன் திரும்பி வந்தான். பிரித்துப் பார்த்தால் ஒரு பூஜ்யம் சேர்க்கப் பட்டுச் செக் நான்கு லக்ஷமாக்கப் பட்டிருந்தது.*

*மாளவியாவுக்கு மட்டற்ற மகிழ்ச்சி உண்டாகி விட்டது. காகிதத்தையும் பேனாவையும் எடுத்துக் கையோடு கையாக அந்தப் பிரபுவுக்கு ஒரு கடிதம் எழுதினார்.*

*பரம பூஜ்யரான.........க்கு,*

*ஒரு சுத்தப் பூஜ்யத்துக்கு இத்தனை பெரும் மதிப்பா? பூஜ்யம் என்பது சொல்லாத பொருள் தான். தனித்திருக்கும் பொழுது மதிப்பே இல்லாத பொருள் இன்னொன்றுடன் சேர்ந்து விட்டால் எத்தனை பெரும் மதிப்பை உண்டு பண்ணி விடுகிறது என்பதை இன்று தான் நான் அறிந்தேன். பூவோடு சேர்ந்து நாரும் மணக்கும் என்று சொல்வது போல் தங்களோடு சேர்ந்துள்ள என்னையும் பெருமைப் படச் செய்யப் போகும் தங்கள் பூஜ்யத்துக்கு என் மனமார்ந்த நன்றி. — மாளவியா.*

(டிசம்பர் 25, மாளவியா நினைவு தினம்)



அவள் அழகி — அவள் அருகாமை

மகிழ்ச்சியூட்டுகிறது

அவள் உபயோகிப்பது



டாடாவின்

# ஜேய்

மனங்கவரும் மணமுள்ள சௌம்யமான டாய்லெட் சோப்பு!

டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி லிமிடெட்

TJ. 5635




மாயனை மன்னு வடமதுரை மைந்தனை
தூய பெருநீர் யமுனைத் துறைவனை
ஆயர் குலத்தினில் தோன்றும்அணி விளக்கை
தாயைக் குடல்விளக்கம் செய்த தாமோதரனை
தூயோமாய்வந்துநாம் தூமலர்தூவித்தொழுது
வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்கப்
போய பிழையும் புகுதருவான் நின்றனவும்
தீயினில் தூ(க) ஆகும் செப்பு ஏலோர்
எம்பாவாய்


திருவெம்பாவை
முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருளே
பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும்அப் பெற்றியனே
உன்னைப் பிரானாகப் பெற்றஉன் சீரடியோம்
உன்அடியார் தாள்பணிவோம்ஆங்(கு)அவர்க்கேபாங்காவோம்
அன்னவரே எங்கணவர் ஆவார் அவர்உகந்து
சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணிசெய்வோம்
இன்ன வகையே எமக்(கு)எங்கோன் நல்குதியேல்
என்ன குறையும் இலோம்ஏலோர் எம்பாவாய்.

# பாவை விளக்கு

அத்தியாயம் 2

## பட்டிக்காடும், பட்டணக்கரையும்

மூன்றாம் வகுப்புப் பிரயாணிகளில் பலர் அந்த வகுப்பில் போவதற்குக் காரணம் நான்காம் வகுப்பு என்ற ஒன்று நம்முடைய ரயில்களில் இல்லாமலிருப்பதே. தணிகாசலமும் சென்னைக்கு ஒரு 'எக்ஸ்பிரஸ்' வண்டியில் மூன்றாம் வகுப்பில் பிரயாணம் செய்தான். முதல் வகுப்பில் போகக்கூடிய வசதி உள்ள சிலரும் அதில் வந்தார்கள்; மேல் வகுப்பில் ஏறினால் பாங்கிக் கணக்கு கீழே இறங்கி விடும் என்ற பயம் காரணமாக இருக்கலாம்.

இடநெருக்கடிக்கென்று ஒரு பரிசுத் திட்டம் வைத்தால் தூத்துக்குடி எக்ஸ்பிரஸ் போன்ற துரித வண்டிகளுக்குத் தாராளமாக அதன் முதல் பரிசை வழங்க வேண்டும். சிவராத்திரி - வைகுண்ட ஏகாதசி முதலிய இரவுகளில் கண் விழிக்கத் தவறியவர்களுக்கு அந்த விட்ட குறையைத் தொட்டுக் கொள்வதற்கும் இந்தவண்டிகளில் வாய்ப்புண்டு.

தணிகாசலத்துக்கு இப்படிச் சென்னைக்குப் போய் முன் அனுபவமில்லை. இருந்திருந்தால் அக்கம் பக்கத்துப் பிரயாணிகள் செய்த அதே காரியத்தை அவர்களுக்கு முந்திக் கொண்டு அவனும் செய்திருப்பான். இப்போது வழியில்லை; காலம் கடந்து விட்டது. வலது பக்கத்திலிருந்த பெருந் தொந்தியும் இடது பக்கத்திலிருந்த எலும்புக் கூடும் அவன் மேல் போட்டி போட்டுக் கொண்டு தூங்கி விழுந்தன. அவற்றின் தலைகள் மோதிக் கொண்டு உடையாமல் பார்த்துக் கொள்ள வேண்டிய நடுநிலைப் பொறுப்பைத் தானாக ஏற்றுக் கொண்டான். நித்திரா தேவி அவனிடம் சாகஸம் செய்து பார்த்தாள். ஒரு பக்கம் சதை அழுத்தியது; மறு பக்கம் எலும்பு குத்தியது ஒருவருக்கு அவன் தலையணை; மற்றவருக்குத் திண்டு. அவனுக்கும் அவனைத் தேடி வந்த நித்திரா தேவிக்கும் மட்டும் ஒன்றும் கிடைக்கவில்லை

தலை நகரத்தின் தலைவாசலான எழும்பூர் ரயிலடி அமளி துமளிப் பட்டது. கீழே இறங்கிய தணிகாசலத்துக்கு ஒருகணம் ஒன்றும் விளங்கவில்லை. பெட்டி படுக்கையைத் தரையில் போட்டுக்கொண்டு அயர்ந்து உட்கார்ந்தான். அவசரம்தாங்காத கூட்டம் அவன் மேல் இடித்துப் புடைத்துக் கொண்டு, முட்டி மோதிக் கொண்டு வெளியே போகப் பார்த்தது. ஐந்து நிமிஷத்தில் மனிதச் சூறாவளி மறைந்த இடம் தெரியவில்லை. இப்போது அவன் பெட்டியை ஒரு கூலியும் படுக்கையை மற்றொரு கூலியும் பிடித்து இழுத்துக் கொண்டிருந்தார்கள். படுக்கையை இழுத்த கூலி அவனையும் சேர்த்துத் தூக்கிக் கொண்டு போய் விடுவான் போலிருந்தது. 'பட்டணத்தில் போட்டி அதிகம். ஒரு வேலைக்கு இரண்டு பேர்கள்.'

தணிகாசலத்துக்கு இப்போது சிந்தாதிரிப் பேட்டைக்குப் போக வேண்டும். அடுத்தாற் போல் அரை மைல் தூரத்தில் இருப்பது அவனுக்குத் தெரியாது. தான் அந்த வண்டியில் வருவதாகப் பசுபதிக்கு எழுதியிருந்தான். அவர் வரமாட்டார் என்பதும் அவனுக்குத் தெரியும். உமாவுக்காவது ஒரு வரி எழுதிப் போட்டிருக்கலாம். வீட்டிலிருந்து படை திரட்



டிக்கொண்டு வந்தாலும் வந்திருப்பாள். செய்யாததை நினைத்துப் பலன் என்ன?

படுக்கையைப் பிடித்து இழுத்தவனுக்குப் பொறுக்க வில்லை.

''ஏம்பா, இடிச்ச புளி மாதிரி குந்திக்கினு இருக்கியே! 'கேர்-ஆப்' பிளாட்பாரமா?'' என்று கேட்டான்.

ஏறிட்டுப் பார்த்துவிட்டு, 'ஆம்' என்று தலையாட்டினான் தணிகாசலம். படுக்கைக்காரன் ஒதுங்கிப் போகவே பெட்டிக்காரன் தலையில் சுமையை ஏற்றி விட்டு வெளியில் வந்தான். ரிக்ஷாக்காரர்களிடம் பேரம் நடந்தது. அப்போது சைக்கிள் ரிக்ஷா, ஆட்டோ ரிக்ஷாவெல்லாம் கிடையாது. மனித வாகனம், அல்லது 'டாக்ஸி' கார்தான்.

வெளியூர் ஆசாமி என்று தணிகாசலத்தின் நெற்றியில் எழுதி ஒட்டியிருந்ததால், கூவம் நதி தீரத்தை இரண்டு முறை வலம் வந்து, தனக்குக் களைப்பு வந்தவுடன் பத்திரிகாலயத்தின் முன்பு கொண்டு வந்து நிறுத்தினான் ரிக்ஷாக்காரன். அவன் பேசிய அழகு தமிழைக் கேட்கச் சகியாமல் தணிகாசலம் அவன் கேட்ட கூலியை விரைவில் கொடுத்து அனுப்பினான்.

மரியாதையிலும் சரி, பேச்சுத் தமிழிலும் சரி சென்னை நகரத்தை மற்ற நகரங்கள் மிஞ்ச முடியாது. 'ஸாமி' அல்லது 'ஏம்பா' சர்வ சாதாரணம். படித்தவர்களில் சிலர் 'நீர் உமது' என்ற ஐம்பது சத விகித மரியாதையை மட்டும் செலுத்துவார்கள்.

பத்திரிகாலயத்தின் முன் 'தமிழரசி' என்ற பெயர்ப் பலகை பளிச்சென்று வெளியில் தொங்கியது. மாடியில்லாத சிறிய ஓட்டுவில்லை வீடு. முன்புறத்தில் குறுகலான தாழ்வாரம், உள்ளே கூடம், பின்புறம் கொல்லை வழிக்கு இரு புறங்களிலும் இரண்டு அறைகள். கூடத்தில் இரண்டு மேசைகளும் நாலைந்து நாற்காலிகளும் கிடந்தன. பசுபதியின் அகன்ற முகம் புன்சிரிப்பால் அவனை வரவேற்றது. ''பிரயாணம் வசதியாக இருந்ததா?'' என்ற கேள்விக்கு முதுகு வலியைப் பொருட்படுத்தாமல் ''இருந்தது'' என்று சொல்லிவைத்தான். வேலைக்காரப் பையன் அவனுடைய பெட்டி - படுக்கையை இடது பக்கத்து அறைக்குக் கொண்டு போனான். வலது பக்கத்து அறை பசுபதியினுடையது.

'' சிங்காரம்! துணை ஆசிரியர் வந்து விட்டார். இனி நீங்கள் இரண்டு பேருந்தான் ஆபீசுக்குப் பொறுப்பு.''

தணிகாசலத்தின் உச்சி குளிர்ந்தது; முதுகு வலி போன இடம் தெரியவில்லை.

''தணிகாசலம்! உங்களுக்கு வேண்டியதெல்லாம் இங்கே இருக்கிறது; நீங்கள் இதை விட்டு எங்கும் போக வேண்டாம்!' என்றார் பசுபதி. ''கூப்பிட்ட குரலுக்குச் சிங்காரம் வந்து நிற்பான்; பட்டணத்தில் வெளியே தலை காட்டினால்





தணிகாசலத்துக்குக் காரணம் புரியவில்லை.

"ஐம்பது ரூபாய் கொண்டு வந்திருக்கிறேன்" என்றான்.

"டேய், சிங்காரம்! இவரை அழைத்துக் கொண்டுபோய்ப் பீம விலாசில் இருபது ரூபாய்க்குச் சாப்பாடு டிக்கட்டும், பத்து ரூபாய்க்குப் பலகார டிக்கட்டும் வாங்கிக் கொடு" என்று பையனுக்கு உத்தரவு போட்டார். பிறகு தணிகாசலத்திடம் திரும்பி, "கணக்காய்த்தான் கொண்டு வந்திருக்கிறீர்கள்; முப்பது ரூபாய் சாப்பாட்டுக்குப் போனால், கைச் செலவுக்கு இருபது போதும். பணத்தை வீணாக்காதீர்கள். அடுத்த மாதம் பார்த்துக் கொள்ளலாம்" என்று நிதானமாகக் கூறினார்.

பசுபதி அவனிடம் பரிவு காட்டிய முறை நூதனமாக இருந்தது. 'விஷயதானம்' கேட்டு அவர் கடிதம் எழுதியபோதெல்லாம் அவன் கதை-கட்டுரை அனுப்பி வைத்திருக்கிறான். மனிதனுடைய சிந்தனையும் உழைப்பும் அவ்வளவு மலிந்த சரக்கல்ல' என்று அவனுக்குத் தெரியும். என்றாலும் அவரிடம் பழகிய தோஷத்துக்கு அவன் கட்டுப்பட்டான். இப்போது அவர் ஆளையே தானம் கேட்டு விடுவார் போலிருக்கிறதே!

"பயப்படாதீர்கள்!" என்று சிரித்தார் பசுபதி. "மாதம் ஐம்பது ரூபாய் சம்பளம் தருகிறேன்! இறுக்கிப் பிடித்துக் கொண்டு செலவு செய்யுங்கள்."

தாயாரும் மனைவியும் வயிற்றை இறுக்கிப் பிடித்துக் கொள்ள வேண்டியதுதான் என்ற முடிவோடு அவன் ஓட்டலுக்குச் சென்று சாப்பிட்டுத் திரும்பினான். தான் வாங்கியுள்ள பெயருக்கு அவரிடம் நூறு ரூபாயாவது மதிப்பிருக்கும் என்று கற்பனை. கற்பனை கரைந்தது.

பசுபதி அவனுடைய அலுவல்களைப் பற்றிச் சொன்னார். வரும் கதைகளைப் பொறுக்கி எடுப்பது, புதுக் கதை-கட்டுரை எழுதுவது, அச்சுத்தாள் திருத்துவது, வருவோர் போவோருக்குப் பதில் சொல்லுவது, தபால் பார்ப்பது முதலிய வேலைகள். "நான் வேறு பல பணம் செலவாகும்; நண்பர்கள் என்று நாலுபேர்கள் கூடினால் உங்களை ஒழுங்காய் வேலை செய்ய விடமாட்டார்கள்."

தணிகாசலம் குளித்து முழுகி விட்டு மாற்றுடை உடுத்திக் கொண்டான். அவனுக்குப் பசி எடுத்தது. காப்பி சாப்பிட்டு வருவதாகப் பசுபதியிடம் கூறினான்.

"கையில் எவ்வளவு பணம் வைத்திருக்கிறீர்கள்?" என்று கேட்டான் பசுபதி.

தொல்லைகளை இழுத்துப் போட்டுக் கொண்டிருக்கிறேன்; எல்லாவற்றையும் நீங்களே தனியாய்ப் பார்த்துக் கொள்ள வேண்டும்; அவ்வப்போது என்னைக் கேட்டுக் கொண்டு செய்யுங்கள்.''

குறைந்த அளவு பக்கங்களுள்ள மாதப் பத்திரிகை அது. கதைகளைத் தவிர சென்னை நகரத்துப் பணக்காரர்களின் வாழ்க்கைச் சுருக்கங்கள் அதில் வெளி வந்தன. பசுபதி பெரும்பொழுது அலுவலகத்தில் தங்காமல் பிரமுகர்களைப் பேட்டி காண்பதற்காக வெளியில் சென்று கொண்டிருந்தார்.

வேறு எந்த நினைவுக்கும் இடம் கொடாமல் தன் வேலைகளைக் கற்றுக் கொண்டான் தணிகாசலம். ஐந்தாறு நாட்களில் ஒருவகையாக அலுவல் பிடிபட்டது. தினந்தோறும் மூன்று நான்கு மணி நேரம் கவனித்தால் போதும்; காலையில் பத்து மணியிலிருந்து மாலை ஐந்துவரை அலுவலகத்தைத் திறந்து வைத்திருக்க வேண்டும்; அவ்வளவுதான்.

வேலை பழகிய பிறகு வெளி நினைவுகள் வந்தன தணிகாசலத்துக்கு. பட்டணத்தின் பரபரப்பில் கலந்து கொண்டு அவன் வேடிக்கை பார்க்க விரும்பினான். மாலை நேரங்களில் அக்கம் பக்கத்துத் தெருக்கள் அவனைக் கூவி அழைத்தன. அவனுடைய அலுவலகத்துக்குக் கிழக்கே ஒரு பர்லாங் தூரத்தில் கூவம் நதி என்ற வாய்க்காலும், மேற்கே அதே தொலைவில் சிறிய பூங்காவும் இருந்தன. வாய்க்காலைச் சுற்றிக் குப்பங்கள். பூங்காவுக்கு அடுத்தாற்போல் சுறுசுறுப்பு நிறைந்த



'மௌண்ட் ரோடு'. மௌண்ட் ரோட்டின் நடை பாதையில் அவன் உலாவச் சென்றபோது, அதன் மிகப் பெரிய தொழில் நிலையங்களைக் கண்டு வியந்தான். ''கெட்டும் பட்டணம் சேர்'' என்று சொன்னவன் வாயில் சர்க்கரை போட வேண்டும் போல் தோன்றியது. அடுத்தாற்போல் கூவம் நதிக் குப்பங்களைக் கண்டபோது அவன் உள்ளம் பற்றிக் கொண்டு வந்தது. 'அப்படிச் சொன்னவனை இழுத்து வந்து இந்தச் சாக்கடைத் தண்ணீரில் அமிழ்த்தி எடுக்க வேண்டும்; குப்பங்களில் வாழ்பவர்கள் கெட்டுப்போவதற்காகப் பட்டணம் வந்தவர்கள்.'

பசுபதி தனக்குச் சாப்பாட்டுச் சீட்டை வாங்கிக் கொடுத்ததற்காகவும் அவர் மீது தணிகாசலத்துக்குக் கோபம் வந்தது. இந்த உதவியை அவர் செய்திருக்கவே வேண்டாம். பசியை அறவே மறக்க அடித்து விடும் போலிருந்தது அந்த பீம விலாஸ் சாப்பாடு.

சுத்தம், சுகாதாரம், சத்துள்ள சாப்பாடு என்றெல்லாம் வெளியில் பிரமாதமாகத் தம்பட்டம் அடித்துக் கொண்டார்கள். மனிதனுடைய நாக்கைத் தீட்டி விட்டனவே தவிர, மனிதனுடைய உடம்பை வளர்க்கவில்லை பல ஓட்டல்கள். அதிலும் தணிகாசலம் முன் பணம் கொடுத்து அகப்பட்டுக் கொண்ட இடம் பயங்கரமானது. காய்கறிக் கடைகளில் அழுகிக் குப்பைக்குப் போகும் சரக்கைப் பிடித்து வந்து அரைகுறையாக வேக வைத்து இலையில் கொட்டினார்கள். பலகாரங்களைப் பொரித்தெடுத்து வடிகட்டிய கடலை எண்ணெய் நெய் என்ற பெயரில் வெளிச்சம் போட்டது.

உடம்பை வளர்க்கும் பொறுப்பைப் படைத்தவனிடம் விட்டு விட்டு, உள்ளத்தை வளர்ப்பதற்காக உழைப்பில் ஒன்றிப் போனான்.

ஒருநாள் பசுபதி அவனிடம் புகைப் படம் ஒன்றைக் கொடுத்து, அதிலிருந்த மனிதரைப் பற்றி விரிவான கட்டுரை எழுதச் சொன்னார். சிறிய குறிப்பும் கொடுத்தார். தணிகாசலத்தின் கண்கள் ஆச்சரியத்தால் விரிந்தன. அந்தப் படத்தில் இருந்தவர் செங்கமலத்தின் கணவர் திருவாளர் குமாரசாமி!

''விஞ்ஞான விவசாயி, கொடை வள்ளல், தமிழன்பர், தொழிலதிபர் என்றெல்லாம் போட்டு வெளுத்து வாங்குங்கள்'' என்று உற்சாகமாய்க் கூறினார். ''என்ன, கேள்விப்படாத பேர் வழியாக இருக்கிறாரே என்று பார்க்கிறீர்களா? இப்படிப்பட்டவர்களிடம் தான் பணம் அகப்பட்டுக் கொண்டு

திண்டாடுகிறது. எப்படிச் செலவு செய்வதென்று அவர்களுக்குத் தெரியவில்லை. மனிதன் என்ன நோட்டையும் பணத்தையுமா சாப்பிடப் போகிறான்? எழுதுங்கள்! தணிகாசலம், எழுதுங்கள்! இலக்கிய சேவை என்று வெளியில் சொல்லிக் கொள்வோம்; அந்தச் சேவை சோறு போடாது; கிடைத்தவரையில் இப்படிப் பணம் புரட்டுவோம்.''

தணிகாசலம் பசுபதியிடம் வைத்திருந்த மதிப்பில் பாதி குறைந்தது இந்தப் பேச்சால். புகழ் பாடிப் பிழைத்த புலவர்கள் பரம்பரையில் வந்தவர் போலும் இவர்! புகழப்படுகிறவர் தன்னுடைய செங்கமலத்தின் கணவர் என்பதால் தாராளமாக எழுதினான்.

'' இந்தக் குமாரசாமி சென்னைக்கே வந்து விட்டாரா? அவர் எங்கே இருக்கிறார்?'' என்று கேட்டான்.

தணிகாசலத்துக்குச் செங்கமலம் சென்னைக்கு வந்துவிட்டாளா என்று தெரிந்து கொள்ள ஆவல். பசுபதி கேள்விக்குப் பதில் சொல்லாமல் மழுப்பி விட்டார்.



பத்து நாட்கள் சென்றன. சென்னை நகரத்தின் முக்கியமான இடங்களைச் சிங்காரத்துடன் சென்று பார்த்து வந்தான் தணிகாசலம். ஒருநாள் 'மலர்க் கொத்து' ஆசிரியர் கந்தசாமியைக் கண்டு தன்னுடைய புதிய வேலையைப் பற்றித் தெரிவித்தான். தம்மை அடிக்கடி வந்து பார்க்கச் சொல்லி ஆசி கூறி அனுப்பி வைத்தார் அவர்.

உமாவை இன்னும் அவன் பார்க்கவில்லை. மாம்பலத்தில் ஏதோ ஒரு தெருவில் அவள் வீடு. நாட்களைத் தள்ளிப் போடத் தள்ளிப்போட ஆவலும் அதிகமாகவே வளர்ந்தது. தன்னிடம் அக்கறை இல்லாத மனிதர்களைப் பார்த்துப் பார்த்து அவனுக்குச் சலித்து விட்டது. தனக்குப் பிடித்த வேலைகளையும் பிடிக்காத வேலைகளையும் செய்து அவனுக்குச் சோர்வு தட்டியது. அவனுடைய ரசிகர்கள் சிலர் அங்கே இருந்தார்கள்; அவர்களிடம் தன்னைச் சொல்லிக் கொள்ள அவனுக்கு வெட்கம். 'உமாவின் கலகலப்பான பேச்சை ஒரு நாள் கேட்டால் கூட இந்தச் சலிப்பும் களைப்பும் பறந்து விடுமே! பக்கத்திலேயே அவளை வைத்துக் கொண்டு பார்க்காமல் இருக்கலாமா?' என்று நினைத்தான்.

அவளைப் போய்ப் பார்ப்பதில் சிறிய சங்கடம் இருந்தது. அதையும் மீறிக் கொண்டு ஒருநாள் மாம்பலத்துக்கு பஸ் ஏறினான். பல இடங்களில் அலைந்து திரிந்த பிறகு வீடு தெரிந்தது. சிறிய சுற்றுச் சுவருள்ள இரட்டை மாடிக் கட்டடம். காம்பவுண்டுக் கதவு திறந்திருந்தது. வெளித் திண்ணையை ஒட்டினாற் போல் மாடிப்படிகள் தென்பட்டன. வீட்டு மனிதர்கள் யாரையுமே வெளியில் காண முடியவில்லை.

வீட்டைக் கண்டவுடன் திரும்பவும் அந்தச் சங்கடம் தலை நீட்டியது தணிகாசலத்திடம்: உமாவோ வயது வந்த பெண்; சென்ற முறை அவள் குற்றாலம் வந்தபோது அவளைச் சிறுமியாக மதிக்க முடியவில்லை. பேராசிரியர் சந்திரசேகரன் தில்லியில் இருப்பார்; அவளைத் தவிர மற்றவர்களை அவனுக்கு அந்த வீட்டில் தெரியாது. தன் வயதையும் அவள் வளர்ச்சியையும் ஒப்பிட்டுப் பார்த்தான் தணிகாசலம். ஏழெட்டு வருடங்கள் வித்தியாசம் இருக்கலாம். ஆனால் தோற்றம் அப்படிச் சொல்லாது. வீட்டில் அவள் இல்லாமல், அவள் அத்தை மட்டும், இருந்து ஏதாவது தவறாகக் கேட்டு வைத்து விட்டால்?

நகர வாழ்க்கையில் சரியாக அடிபடாதவன்; பட்டணத்துப் பழக்கம் இன்னும் அவனுக்குப் பிடிபடவில்லை. ஆகவே சிறிது நேரம் தயங்கி நின்றுவிட்டு, வந்த வழியைப் பார்த்துக் கொண்டு கடற்கரைக்குத் திரும்பினான். நாளைக்கு அவளுக்கொரு கடிதம் எழுதிப் போடலாம்.

மறுநாளும் அவன் கடிதம் எழுதவில்லை. கௌரிதான் பொன்வயலிலிருந்து கடிதம் எழுதி உமாவை விசாரித்திருந்தாள். மேலும் இரண்டு நாட்கள் சென்றன. ஆவலை வெட்கம் தடுத்து நிறுத்திக் கொண்டிருந்தது.

கடற்கரைக்கு அடுத்தாற் போலிருந்த பல்கலைக் கழகத்தின் நூல் நிலையத்துக்குள் நுழைந்தான் தணிகாசலம். திரும்பிய பக்கமெல்லாம் புத்தகங்கள். புடவைக் கடைக்குள் நுழைந்து விட்ட பெண்களின் மனநிலை அவனுக்கு. அடடா, எத்தனை நூல்கள்! எப்போதும் இங்கே வந்து உட்கார்ந்து படித்துக் கொண்டிருக்கலாம் போலிருக்கிறதே! சோறு-தண்ணீர் கூடத் தேவையில்லை.

பலர் அங்கே அமைதியாக உட்கார்ந்து கொண்டு படிப்பில் மூழ்கி இருந்தார்கள். தணிகாசலமும் ஒரு புத்தகத்தை எடுத்துக் கொண்டு ஒதுக்குப்புறமாக உட்கார்ந்தான். நேரம் போனதே தெரியவில்லை. மாலை வேளைக் கடற்கரைக் காற்று திறந்த சன்னல் வழியே சுகமாக வீசியது.

பெண்கள் சிலர் அருகில் வந்து பேசிக் கொண்டே புத்தகங்களை எடுத்தார்கள். 'தயவு செய்து பேச வேண்டாம்' என்ற அட்டைகள் திரும்பிய பக்கமெல்லாம் தொங்கத்தான் செய்தன. அந்த வேண்டுகோள் பெண்களுக்கு இல்லையா? தணிகாசலம் சற்று எரிச்சலோடு தலையைத் தூக்கிப் பார்த்தான். அவ்வளவுதான்; பார்த்த கண்கள் இமையவில்லை.

"அட! மாமாவா?"

இரண்டு பக்கத்திலும் இரண்டு தோழிகளோடு அஜந்தாச் சித்திரம் போல் நின்றாள் உமா. அவளுடைய விழிகளில் ஒளி பொங்கியது.

"மாமா! இது நீங்களா? அல்லது உங்கள் ஆவியா?"

மூச்சு விடாமல் அவள் கேள்விகளைத் தொடுத்தாள். தணிகாசலம் மூச்சு விடாமல் புத்தகத்தை மூடிவைத்தான். அத்தனை பேருக்கும் மத்தியில் அவனுடைய அருமை பெருமைகளையெல்லாம் வெளியிடத் தொடங்கி விட்டாள் உமா. தணிகாசலத்துக்கு அங்கே இருந்த மற்றவர்கள் தன்னை வேடிக்கை பார்ப்பது பிடிக்கவில்லை.

"வா, நாம் வெளியிலே போய்ப் பேசிக்கொள்வோம்."

தணிகாசலத்தின் பின்னால் உமாவும், அவளுக்குப் பின்னால் அவள் தோழிகளும் வந்து கொண்டிருந்தார்கள். பரந்து கிடக்கும் கடல் தண்ணீரின் நீல வர்ணக் கோலம் கண் எதிரில் தெரிந்தது.

## அத்தியாயம் 3
# விசித்திரப் பெண்மணி

சென்னையின் மரீனா கடற்கரைக்கும் பம்பாய் நகரத்தின் மாரின் டிரைவ் கடற்கரைக்கும் முக்கியமானதொரு வேற்றுமை உண்டு. சென்னையின் படர்ந்த கடற்கரையும் அதற்கெதிரில் உள்ள பல்கலைக் கழகம், கல்லூரிகள், அலுவலகங்கள் முதலிய பெரிய பெரிய கட்டடங்களும் பொதுமக்களுக்குப் பயன்படக் கூடியவை. மாரின்டிரைவில் உள்ள பிரும்மாண்டமான ஏழடுக்கு மாளிகைகளோ ஒருசில பணக்காரர்களின் தனி உடைமைகள். செல்வச் செருக்கின் உல்லாச மிடுக்கைப் பம்பாய்க்கடற்கரையும் ஏழைமையின் எளிமையும் மத்தியதர வாழ்க்கையின் மேல்பூச்சும் சேர்ந்த ஒரு கதம்பத்தைச் சென்னைக் கடற்கரையும் பறைசாற்றிக் கொண்டிருக்கின்றன.

தணிகாசலம் உமாவுடன் நூல் நிலையத்தை விட்டு வெளியில் வந்து சாலையோரமாக ஒரு மரத்தடியில் நின்றான். உமாவின் தோழிகள் இருவரும் தணிகாசலத்தைப் பார்த்துத் தங்களுக்குள் ஏதோ ரகசியம் பேசிச் சிரித்துக் கொண்டனர்; சென்னைக்கு அவன் வந்து இரண்டு வாரங்களாயிற்று என்ற செய்தியைக் கேட்டவுடன் உமாவின் முகத்தில் கோபம் பொங்கிக் கொந்தளித்தது.

தோழிகளிடம் திரும்பி, "நான் மாமாவை அழைத்துக்கொண்டு வீட்டுக்குப் போக வேண்டும். போய் வரட்டுமா?" என்று கேட்டாள்.

தோழிகளை அவள் தனக்காகப் பாதியில் கைவிடுவது தணிகாசலத்துக்குச் சிறிதும் பிடிக்க வில்லை.

"நீங்கள் சும்மா இருக்க மாட்டீர்கள்" என்று அதட்டினாள் உமா.

அவனிடம் தனக்குள்ள உரிமையை அவள் தன் சிநேகிதிகளுக்கு முன் நிலை நாட்டிக் கொள்ள விரும்புவது போல் இருந்தது அந்த அதட்டல். தோழிகள் விடைபெற்றுக் கொண்டார்கள்.

கடற்கரையின் மாலை நேரக் காட்சியைத் திரும்பிப் பார்த்தான் தணிகாசலம். பரந்த மணல் வெளியில் சோம்பல் நடை போடுவோரும், உட்கார்ந்து அரட்டை அடிப்போரும், படுத்து உடல் நெளிப்போருமாக மனிதர்கள் வந்து குவிந்து கொண்டிருந்தார்கள். வலது புறம் நீண்டு கிடந்த தார் ரோட்டில் சாரை சாரையாகக் கார்கள் இரைந்தன. நடைபாதையின் ஓரமாக இருவரும் மெதுவாக நடந்தார்கள்.

"காற்று சுகமாக வீசுகிறது; மணலுக்குப் போய்ச் சற்று நேரம் உட்கார்ந்து

# "உங்கள் பற்களை பாதுகாருங்கள்!"

## விஸ்டம் பல் வைத்தியர் எப்படி என்று கூறுகிறார்



'விஸ்டம்' ப்ரஷால் துலக்குவது பற்களை எவ்விதம் பாதுகாக்கிறது என்பதை அறிய உங்களுக்கு பற்களின் அமைப்புப் பற்றி தெரிய வேண்டும். ஒரு பல்லின் உட்புறத்தை கவனிப்போம்....




பல்லின்மீது எனமல் மூடியிருக்கிறது. இதனடியில் இருக்கும் குழம்பில் (தந்தம்) பல சிறு குழல்கள் உண்டு. இவை பல்லின் உணர்ச்சி மையத்துடன் சேருகின்றன.




பற்களின் இடுக்குகளில் தேங்கும் சர்க்கரை மற்றும் உணவுத் துண்டுகளால் எனமல் தாக்கப்பட்டு சொத்தை ஏற்படுகிறது. விஸ்டம் ப்ரஷால் நன்கு துலக்குவதுதான் சிறந்த பாதுகாப்பு.



சொத்தை ஏற்படுவதைத் தடுக்காவிட்டால் அது சிறு குழல்களுக்குள் பாய்ந்து உணர்ச்சி மையத்தை அழித்து பல்லை பாழாக்குகிறது. இதற்காகவே பற்களைக் காலாகாலத்தில் பல் வைத்தியரிடம் காட்டுவது உசிதம்.

உங்கள் பற்களை ஆரோக்கியமாய் வையுங்கள். இரவிலும் காலையிலும் விஸ்டம் ப்ரஷால் துலக்குங்கள்! துலக்க சுலபமாயிருக்க அதன் சிறிய தலை மற்றும் வளைந்த கைப்பிடியமைப்பால் வாயில் மூலை முடுக்குகளிலும் புகுத்தலாம்; அதன் விறுப்பான நைலான் குச்சங்கள் பல் இடுக்குகளில் நுழையும். பொருத்தமான வடிவம் கொண்ட விஸ்டம் டூத் ப்ரஷை உபயோகியுங்கள்!

**காலாகாலத்தில் உங்கள் பல் வைத்தியரை காணுங்கள்.**




நீடித்து
உழைக்கும்
டூத் ப்ரஷ்

744

பச்சிளங் குழந்தை நடக்கத் தட்டு தடுமாறுகிறான். மேல்மூச்சு கீழ் மூச்சு வாங்க, தன் குஞ்சுக் கால்களை தள்ளாடி வைத்து தரையில் நடப்பது பார்ப்பதற்கு ஆனந்த மாயிருக்கும். இன்று அவனுக்கு நடக்க தெரிந்துவிட்டது.

வாழ்க்கையின் முதல் படியைத் தாண்டிய அவனுக்கு, கண்ணுக்கு எட்டாத நீண்ட ரஸ்தாவில் தன் பிரயாணத்தைத் தொடங்க வேண்டும். நீங்கள் ஆயுள் இன்ஷ்யூர் செய்து கொள்ளுவதன் மூலம், அவன் வாழ்க்கைப் பிரயாணத்திற்குப் பாதுகாப்பு அளியுங்கள்.

இன்றே உங்களால் முடிந்தமட்டும் — மாதந்தோறும் ரூ. 10/- ஆனாலும்கூட சரி, மீதம் வையுங்கள். உங்கள் குடும்பத்தினரின் வருங்கால பாதுகாப்பிற்கு, உங்கள் சேமிப்புத் தொகையை எவ்வாறு சிறப்பாக பயன்படுத்திக்கொள்ள முடியும் என்பதைப் பற்றிய ஆலோசனையை ஒரு ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் ஏஜெண்ட் எடுத்துரைப்பார்.

ஞாபகத்திலிருக்கட்டும்:- ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் மூலம் ஒழுங்காக சேமிக்கும் சிறு தொகைகூட உங்கள் அன்பிற் குரியவர்களுக்கு மிகுந்த பயனளிக்கும்.



# வாழ்க்கையின் முதல் படி



## லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா

ASP/LIC 23 சென்ட்ரல் ஆபீஸ் "ஜீவன் கேந்திரா", ஜம்ஷெட்ஜி டாடா ரோட், பம்பாய்-1.

பேசிக் கொண்டிருந்து விட்டுப் போகலாமா?" என்று கேட்டாள் உமா.

"வீட்டுக்குப் போக வேண்டுமென்றீர்களே? நாழியாகவில்லையா?"

தணிகாசலத்துக்கு உண்மையில் கடற்கரை பிடிக்காமல் இல்லை. அவள் அவனைச் சந்திக்காமல் இருந்திருந்தால் நேரே கடற்கரைக்குத்தான் போயிருப்பான். கதைகளில் வந்த கடற்கரையைப் படித்துப் படித்து, அவனுக்கு ஏனோ கடற்கரை என்பது காதலை வளர்க்கக்கூடிய இடம் என்ற பயம் வந்து விட்டது! இரண்டு பேர்களாக அங்கு வந்த எல்லோருமே அவன் கண்களுக்குக் காதலர்களாக அல்லது கணவன் மனைவியாகத் தோன்றினார்கள்.

"கடற்கரை உங்களுக்கும் பிடிக்காதா?" என்று கேட்டாள் உமா.

"பிடிக்கும்! இன்னொரு நாள் போவோம்" என்றான் தணிகாசலம்.

திருவல்லிக்கேணித் திருப்பத்துக்கு வந்த உமா, மாம்பலத்துக்குக் கார் ஏறாமல் காப்பிக் கடையை நோக்கிச் சென்றாள். "இந்த நேரத்தில் வீட்டில் ஒன்றும் கிடைக்காது. காப்பி சாப்பிட்டு விட்டுப் போவோம். வாருங்கள்."

காப்பிக் கடையில் தெரிந்த நெருக்கடியில் என் போட்டால் எண்ணெய் வழியும். உட்காருவதற்கு நாற்காலிகள் அகப்படாமல் நின்று தவித்துக் கொண்டிருந்தார்கள் பலர். தம்ளர் கிண்ணங்களின் தாளம், வானொலிப் பெட்டி வாசித்த மேளம், சுழல் விசிறியின் சுருதி இவற்றோடு பரிமாறுகிறவர்களின் பலகாரப் பட்டியல் பாட்டாக இழைந்தது. 'குடும்பத்தாருக்கு மட்டும்' என்று போட்டிருந்த பலகையைத் தள்ளிக் கொண்டு உள்ளே சென்று உட்கார்ந்தாள் உமா. தணிகாசலத்துக்கு அந்த எழுத்துக்களைப் படித்தவுடன் கடற்கரையே தேவலாம் போல் இருந்தது. கணவன்-மனைவி ஒன்றாக வந்து சாப்பிடும் இடம் போலும்!

"வெட்கப்படாதீர்கள், மாமா! சமைப்பதற்குச் சோம்பல் பட்ட பெண்களெல்லாம் இங்கே குழந்தை குட்டிகளையே அழைத்துக் கொண்டு வந்து விடுவார்கள்" என்றாள் உமா.

விருந்தோம்பல் அவனுக்குக் கடையில் நடந்தது. அவளுடைய வற்புறுத்தலுக்காகப் புதிய புதிய பெயர்களுள்ள பழைய-பழைய பலகாரங்களைச் சாப்பிட்டு வைத்தான். காசைக் கொடுத்து விட்டு அவனை வெளியே அழைத்துக் கொண்டு வந்தாள் உமா. இருவரும் மாம்பலத்துக்குப் பஸ் ஏறினார்கள்.

வீடு அவன் முன்பு பார்த்த அதே வீடுதான். தாழ்வாரத்தில் ஒரு பையனும் பெண்ணும் இரண்டு பேர் உட்கார்ந்து கேரம் விளையாடிக் கொண்டிருந்தார்கள். உமா தன் அத்தை மகன் பாலுவையும், பெண் ருக்மிணியையும் அவனுக்கு அறிமுகப்படுத்தி வைத்தாள். பாலுவுக்குப் பதினைந்து வயதுக்கு மேல் இருக்கும். அவனைவிட ருக்மிணிக்குச் சற்று அதிகமாக இருக்கும். அத்தையும் மாமாவும் வீட்டில் இல்லை.

"அத்தை வந்தால் நாங்கள் மாடியில் இருப்பதாகச் சொல். என்னை வந்து கூப்பிடு" என்றாள் பாலுவிடம் உமா.

மாடியில் தனியாக வீடு ஒன்றிருந்தது. ஒரே ஒரு அறையை மட்டிலும் தனக்கு வைத்துக் கொண்டு மற்ற அறைகளையெல்லாம் பூட்டி வைத்திருந்தாள் உமா. தணிகாசலம் அந்த மாடி வீட்டை ஒருமுறை சுற்றிப் பார்த்தான்.



"இங்கு யாரும் குடி இல்லையா?"

"இருந்தார்கள்; இப்போது தான் காலி செய்து கொண்டு போய் ஒரு மாதமாகிறது. அவர்கள் போனவுடன் கீழேயிருந்த நான் மாடிக்கு மாற்றிக் கொண்டு விட்டேன்."

"வேறு யாரையும் குடி வைக்கவில்லையா?"—தணிகாசலத்துக்கு அந்த வீட்டைக் கண்டவுடன் தன்னையறியாத சபலம் உண்டாயிற்று. குடும்பத்தை அழைத்துக் கொள்ளும் காலத்தில் இப்படி ஒரு வசதியான வீடு கிடைத்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்?

அதை அவள் புரிந்து கொள்ளாதது போல், "இனிமேல் வேறு யாரையும் குடி வைக்கப் போவதில்லை" என்றாள்.

உமாவின் அறை விசாலமானது. நீண்ட மரக்கட்டில் ஒன்றும் மேசை-

நாற்காலியும் கிடந்தன. மேற்குப்புற ஜன்னல்களை உமா திறந்து விட்டவுடன் காற்றுக்கும் கதிரொளிக்கும் தடையில்லை. மேசைக்கு அருகில் சுவர் ஓரமாக நின்ற புத்தக அலமாரியைக் கண்ணோட்டம் விட்டான் தணிகாசலம். கவிஞர்கள் பாரதி, பாரதிதாசன், நாமக்கல்லார், தேவி முதலியவர்கள் ஒரு அடுக்கிலும், ஷேக்ஷ்பியர், ஷெல்லி, கீட்ஸ் முதலியவர்கள் மறு அடுக்கிலும் உட்கார்ந்து கொண்டிருந்தார்கள். உமாவின் கவிதைப் பைத்தியம் அவன் நினைவுக்கு வந்தது; தனக்குள் சிரித்துக் கொண்டான்.

அலமாரிக்கு மேல் சுவரில் பெரியதொரு புகைப்படம் கீழ்நோக்கியபடி மாட்டப்பட்டிருந்தது. அதில் பேராசிரியர் சந்திரசேகரனும், அவர் மனைவியும்



கைக்குழந்தையோடு இருந்தார்கள். அந்தச் சின்னஞ் சிறு கைக் குழந்தை இப்போது பெரியதொரு பூங்கொடியாக மலர்ந்து நிற்பதைக் கண்டு வியந்தான் தணிகாசலம், அவனுடைய இறந்துபோன தாயாரின் உருவம் அவனிடம் துன்ப நினைவுகளை எழுப்பியது.

தகப்பனாரின் சாயலே உருவாகத் தோன்றினாள் உமா. அவள் கண்கள் மட்டிலும் தாயாரின் கண்களைப் போலிருந்தன, படத்தையும் அவளையும் மாறி மாறிப் பார்த்தான் தணிகாசலம். உமாவின் நீண்ட கண்களில் திடீரென்று நீர் நிறைந்திருந்தது.

''என்ன உமா, இது!'' என்றான்.

''அ...ம்...மா!'' அவள் உதடுகள் துடித்தன. சிறு குழந்தைபோல அவள் தேம்பினாள். ''அம்மாவின் முகங்கூட எனக்குத் தெரியாது; படத்திலுள்ள அம்மாவின் முகம்தான் அடிக்கடி கனவில் வந்து சிரிக்கும்...''

தணிகாசலத்தின் உடம்பு சிலிர்த்தது; தாய்ப் பாசத்தின் ஆழம் அவனை உலுக்கி எடுத்தது. அவனுக்கு மட்டும் வலிமை இருந்திருந்தால் அந்த வேளையில், ''உலகத்திலுள்ள தாய்க் குலத்தையே அழிக்கக் கூடாது!'' என்று காலனுக்குக் கட்டளை பிறப்பித்திருப்பான்.

அவளை அமைதியாக இருக்கும்படி கூறினான் தணிகாசலம். ''இல்லாத அம்மாவை நினைத்து ஏங்காமல், இருக்கும் அப்பாவை நினைத்துச் சந்தோஷப்படு. அவர் உனக்கு அம்மாவாகவும் விளங்குகிறாரே!'' என்றான்.

''ஆறு மாதத்துக்கொரு முறை, அல்லது வருஷத்துக் கொரு முறை இங்கே வந்து போவார். மற்றச் சமயங்களில் எனக்கு நான்தான் துணை. அதைக்கு என்னிடம் பிரியமும் கிடையாது; வெறுப்பும் கிடையாது.''

உமா அவனை உற்றுப் பார்த்தாள்.

''மாமா! நான் ஒன்று உங்களிடம் கேட்பேன். நீங்கள் அதைக் கேட்டுச் சிரிக்கக் கூடாது'' என்று தொடங்கினாள். ''சிரிக்கவில்லை என்று சொன்னால்தான் கேட்பேன்!''

''சொல்!''

''உங்களை இங்கே கண்டபிறகு என் அம்மாவையே உயிரோடு பார்ப்பது போல் எனக்குத் தோன்றுகிறது. காரணமே தெரியவில்லை. நீங்கள்தான் என் அம்மா!... என்ன? சம்மதந்தானே? சிரிக்கக்கூடாது; நீங்கள் சிரித்தால் நான் அழுவேன். கட்டாயம் அழுது விடுவேன்!'' என்றாள் உமா.

தணிகாசலத்துக்குப் பைத்தியங்களுடன் பழகி அநுபவமில்லை. இருபது வயதுக்கு மேலான ஒரு கல்லூரிப் பட்டதாரியா இப்படித் தன்னிடம் உளறுகிறாள்? அவன் படித்த உள நூலாராய்ச்சி அவன் நினைவுக்கு வந்தது. இதுபோன்ற பல விசித்திர மனிதர்கள் உலகத்தில் இருக்கிறார்கள் என்று அதில் எழுதியிருந்தது. அவன் பார்த்ததில்லை.

''சொல்லுங்கள், மாமா! நீங்கள் என் அம்மா!'' என்றாள் உமா.

ஒப்புக் கொள்வதில் நஷ்டமில்லை; 'ஒரு வகையில் இருவருக்குமே அது நற்காப்புக்கூட. ''சரி, உமா!'' என்றான்.

உமாவுக்கு ஆனந்தம் தாங்கவில்லை. தணிகாசலமோ, 'இப்படி ஆண்பிள்ளைக்குப் பெண் வேஷம் போட்டுத்

தொலைக்கிறாளே!' என்று தனக்குள் அவளைத் திட்டிக் கொண்டு, வெளியில் அவளோடு சேர்ந்து சிரித்தான். உள்ளதில் உள்ளதைக் காண முடியாமல் உள்ளதில் இல்லாததை உமா தேடுவானேன்?

தணிகாசலம் தான் அதை ஒப்புக் கொள்ளத் தயங்குவதை மெதுவாக வெளியிட்டான். ''எனக்குத்தான் மனிதர்கள் எல்லோருமே கதாபாத்திரங்களாகத் தோன்றுகிறார்கள் என்றால், உன் கண்ணிலும் இப்படிக் கோளாறு ஏற்பட்டிருக்கிறதே?'' என்றான்.

''இனி அதைப் பற்றிப் பேசினால் எனக்குக் கோபம் வரும்; சண்டைபோடுவேன்!'' என்றாள் உமா.

வீண் சண்டை அவனுக்கு அப்போது தேவையில்லை. என்றாலும் அவள் சண்டையைத் தொடங்கி விட்டாள்.

''என்னுடைய சிநேகிதிகளின் எதிரில் என் மூக்கை அறுத்து விட்டீர்கள். நீங்கள் என் அப்பாவுக்குச் சொந்தம். வந்தால் நேரே மாம்பலத்தில்தான் இறங்குவீர்கள் என்று அவர்களிடம் சொல்லியிருந்தேன். நாளைக்குக் கல்லூரியில் நாலு பேர்கள் சேர்ந்து கொண்டு என்உயிரை வாங்கப் போகிறார்கள். என் பேச்சைப் பொய்யாக்கி விட்டீர்களே!''

''நீயாகக் கற்பனை செய்து கொண்டு பேசினால் அது பொய்யாகத்தான் போகும்!'' என்றான் தணிகாசலம். இப்படிப் பேசியதால் அவளுடைய 'அம்மா' என்ற வாய் வாதத்தை முறியடித்து விட்டதாக அவனுக்கு எண்ணம். கல்லூரியைப் பற்றி அவள் இப்போது பேசியது அவனுக்குப் புரியவில்லை. ''உன் படிப்புத்தான் முடிந்து விட்டதே? ஆங்கிலத்தில் முதன்மையாகத் தேறியதாக எழுதியிருந்தாயே?''

''முதன்மையாகத் தேறியதற்குப் பலன் என்ன தெரியுமா? அதே கல்லூரியில் எனக்கு இப்போது ஆசிரியை உத்தியோகம் கிடைத்திருக்கிறது. ஆங்கிலம் சொல்லிக் கொடுக்கிறேன்.''

பெருமையோடு தன் வேலையைப் பற்றிச் சொல்லிக் கொண்டாள் உமா. 'தங்கமான கல்லூரித் தலைவி, மணி மணியான மாணவிகள், சகோதரிகளைப் போன்ற சக ஆசிரியைகள்...'

அவளுக்குப் பிடித்தமான வேலை என்பதும் தகுதியான சூழ்நிலை என்பதும் அவள் முகத்தில் தெரிந்தன. பகல் முழுதும் வேலை செய்த களைப்பு மறைந்து அதில் இப்போது புதுமலர்ச்சி தென்பட்டது. தணிகாசலம் அவள் எழுதப் போவதாகச் சொன்ன கவிதையை நினைத்துக் கொண்டான்.



''அப்படியானால் இனிமேல் உனக்குத் தமிழ்க் கவிதை எழுதுவதற்கு நேரம் இருக்காது. உன் கையிலிருந்து தமிழ் பிழைத்து விடும்!''

''விடுவேனா தமிழை?'' என்று மேஜையைத் திறந்தாள் உமா.

''ஏன், ஆங்கிலத்தில் கவிதைகள் எழுதி சரோஜினி தேவிக்கு வாரிசாக வரப் பாரேன்!''

பெரியதொரு நோட்டைத் தூக்கி அலட்சியமாய் அவனுக்கு முன்னால் வீசினாள் உமா. எடுத்துப் பிரித்தான் தணிகாசலம். ஒவ்வொரு பக்கத்துக்கு ஒரு கவிதைத் துணுக்காகப் பத்துப் பன்னிரண்டு பாடல்கள் இருந்தன. ஓரிரண்டு பாடல்களைப் படித்தவுடன் அவன் உதட்டில் புன்முறுவல் நெளிந்தது. விண்மீன், கடல், கதிரவன், தண்மதி, சிட்டுக் குருவி, சுரா மீன் முதலிய பொருள்களைப் பற்றி அவள் அழகாக எழுதியிருந்தாள். காதற் கவிதை ஒன்று கூட அந்த நோட்டில் இல்லை. எழுத்தின் வழியாகத் தெரிந்த உமாவின் வெள்ளை உள்ளம் கண்டு அவன் பெருமிதம் கொண்டான்.

''எப்படி இருக்கிறது?''

தணிகாசலத்துக்கு என்ன பதில் சொல்வதென்று தெரியவில்லை. பாரதியைப் பின்பற்றி, தமிழ் நாட்டின் அரும்புக் கவிஞர்கள் எழுதுகிற பாணியில் சுமாராக எழுதியிருந்தாள். கவிதை

களில் அழுத்தமில்லை. ஓசை நயமும் அழகுணர்ச்சியும் இருந்தன; இலக்கண வரம்பை ஓரளவு தெரிந்து கொண்டு எழுதியிருந்தாள்.

''நன்றாக எழுதி யிருக்கிறாய்!''

''உண்மையைச் சொல்லுங்கள்; உங்கள் பத்திரிகையில் போடச் சொல்ல மாட்டேன்!''

[redacted]

சொல்லும் ஏதோ ஒரு மாப சக்தி மறைந்து கிடப்பதுபோல் தோன்றியது. அறை முழுவதும் சுத்தம், சுறுசுறுப்பு, மென்மை, பரபரப்பு, அழகுணர்ச்சி இவற்றின் சின்னங்கள் காணப்பட்டன.

''எனக்கும் குடியிருப்பதற்கு ஒரு சிறிய வீடாகப் பார்த்து வை. கௌரியையும் அம்மாவையும் [redacted]

# அமெரிக்காவின் கிலி



இரண்டு ரஷ்யச் சந்திரன்களும் வெற்றிகரமாகப் பூமியைச் சுற்றிக் கொண்டே வந்தன. 'பீப், பீப்' என்று சப்தம் போட்டுக் கொண்டே சுற்றி வந்தன. ஒரு சந்திரனில் சென்ற நாய் ஒவ்வொரு முறை சுற்றும் போதும் அமெரிக்காவைப் பார்த்துக் கேலியாகக் குரைத்தது. மற்றொரு சந்திரனின் ராக்கெட்டும் அமெரிக்காவிலேயே விழுந்தது. இவற்றினால் கோபம் கொண்ட அமெரிக்கா தானும் ஒரு சந்திரனை விட, அதுவும் உடனே அமெரிக்காவிலேயே வெற்றிகரமாக விழுந்து விட்டது!


















'ரஷ்ய செயற்கைச் சந்திரனால் உலகுக்கே அபாயம்!' என்று அமெரிக்கா அலறுகிறது. ஒரு வேளை இன்னொரு ரஷ்யச் சந்திரனில் ரஷ்ய சர்க்காரே ஏறிக் கொண்டு சென்று அணு குண்டுகளையும் ஜலஜ குண்டுகளையும் உலகத்தின் மீது போட்டு உலகத்தை அழித்து விட்டு......












அப்படியே ஒரு ஸ்பெஷல் ராக்கெட்டில் சந்திரமண்டலத்துக்குப் போய் அங்கு தன் ராஜ்யத்தை ஸ்தாபனம் செய்து விடுமோ என்று அமெரிக்கா பயங்கரக் கனவுகளைக் காணலாம்.







சாமா

*நவம்பர் மாதப் போட்டியில் நூறு ரூபாய் பரிசு பெற்ற கதை*

# நட்சத்திரம்

**மா**மாவின் அறைக்குள் நுழைந்தான் பாலசந்திரன்.

உள்ளே யாரும் இல்லை. மாமா ஏதோ வேலையாக இருக்க வேண்டும். தன்னை வீட்டில் வந்து பார்க்கும்படி சொல்லியிருந்தாரே.

''ஏனப்பா, ஐயா இல்லே?''

''இருக்கிறாங்களே. நீங்க உட்காருங்க. நான் போய்ச் சொல்லறேன்; இல்லே, நீங்களே உள்ளே வருகிறீங்களா?'' என்றான் வேலையாள் முத்து.

''இல்லே, இங்கேயே இருக்கிறேன்.'' பாலசந்திரன் ஒரு நாற்காலியில் அமர்ந்து பெருமூச்சு விட்டான். வாலிபத்திலும் கிழத்தன்மையாய் முகத்தில் கவலை படர்ந்திருந்தது. மாமா என்ன காரியமாய்த் தன்னைக் கூப்பிட்டு அனுப்பியிருப்பார்? அவனுக்கு ஏற்கனவே எத்தனையோ கவலைகள், மனக் கிலேசங்கள் இருந்தன.

எழுந்து அறைக்குள் இங்குமங்கும் உலாவ ஆரம்பித்தான் பாலசந்திரன். அறை பெரியது. பெரிய பட்டுத்துணி வியாபார முதலாளியின் அறையல்லவா? அவன் ஒரு நிமிஷம் கசப்புடன் சிரித்தான். உடனேயே முகம் மாறியது. அதனால் என்ன? உலகில் அந்தஸ்து இல்லாவிட்டால் என்ன உபயோகம்? அந்தஸ்து, வீடு, வாசல்...

''டேய்! குருசாமி வந்தானா?'' என்று உள்ளேயிருந்து மாமாவின் குரல் ஒலித்தது. குருசாமி இப்போது எதற்கு? இன்று என்னமோ மாமா கடைக்குப் போகப் போவதில்லை. வீட்டிலேயே தம் காரியதரிசியை அழைத்து எதிர்பார்க்கும்படி அவருக்கு ஏற்பட்ட அவசியம் என்ன?

''என்னப்பா பாலு, வந்தாயா?'' மாமா கேதாரி புன்னகையுடன் அறைக்குள் வந்தார். பாலசந்திரனும் சிரிக்க முயன்றவாறு, ''என்ன சமாசாரம் மாமா? என்னைக் கூப்பிட்டு அனுப்பியிருக்கிறீர்களே?'' என்று கேட்டுக் கொண்டே முன்னே வந்தான்.

''எல்லாம் சாவதானமாய்ச் சொல்கிறேன், அப்பா. நீ உட்கார்; முதலில் டிபன் கொண்டுவரச் சொல்கிறேன், சாப்பிடு.''

''அதெல்லாம் ஆய்விட்டது. நீங்கள் விஷயத்தைச் சொல்லுங்கள்.''

''அதென்னப்பா அவசரம்? டாக்டர் ஞானசிராமனைப் பார்க்கப் போக வேண்டுமா என்ன?'' என்று கேட்டார், கேதாரி சிரித்துக் கொண்டே. பிறகு தம் மேஜையருகில் நாற்காலியில் உட்கார்ந்தார்.

பாலசந்திரனின் முகம் சட்டென்று மாறியது; மாமா வேடிக்கையாய்க் கேட்பதுபோல் கேட்டாலும் ஆழமான இடத்தைத் தொட்டுக்காட்டிவிட்டார். அவன் மனம் பலவிதமாய் வேதனைப்பட்டது; தலையைத் திருப்பிக்கொண்டான்.

''பாலு! அந்த விசிறியைத் திருப்பி விட்டு இப்படி என் எதிரில் வந்து உட்காரு, அப்பா!''

அவன் எங்கோ நினைவாக அவ்வாறே செய்து விட்டு மௌனத்தில்

ஆழ்ந்திருந்தான்: கேதாரி அவனை இரண்டு நிமிஷம் உற்றுப் பார்த்தார். "பாலு!"

"உம்!"

"நீ டாக்டர் ஜானகிராமனை மறுபடியும் போய்ப் பார்த்தாயா?"

"ஆமாம்."

"அவர் இப்போது கூட உன் வீட்டை வாங்கிக் கொள்ள வேண்டும் என்கிறாரா?"

"உங்களுக்குத் தெரிந்ததுதானே. இன்னும் ஏன் கிளப்புகிறீர்கள்?"

"அது உனக்கு இருக்கும் ஒரே உடைமை: மேலும் மேலும் நீ முன்னுக்கு வந்து நிலைக்க வேண்டியதற்கான முதற்படி. கண்டவருக்குக் கொடுத்து விடாதே."

"கண்டவருக்கு என்ன? அவர் நல்லதற்குத் தானே கேட்கிறார்! அந்த வட்டாரத்திலேயே ஒரு நர்ஸிங் ஹோமோ ஆஸ்பத்திரியோ கிடையாது. என் வீட்டை வாங்கி 'நர்ஸிங் ஹோம்' ஆகச் செய்ய விரும்புகிறார். அதில் தவறென்ன? ஜனங்களுக்குப் பயன்படும்."

"உனக்கு, நஷ்டம்தான்."

"நான் ஒன்றும் தானம் செய்யவில்லையே?"

"அவர் கொடுக்கும் இருபதினாயிரம் ரூபாய் உன்னை ஒரு பெரிய மனிதனாக்கி விடுமா? நீ இன்னும் வேலையில் உயரவேண்டும். இன்னும் அந்தஸ்துள்ளவனாய் ஆகவேண்டும். இன்னும் வீடுகளும் நிலங்களுமாய் வாங்கிப் போட வேண்டுமப்பா. இருப்பதையும் விற்றுவிடக் கூடாது" என்றார் கேதாரி.

பாலசந்திரன் எழுந்து ஜன்னலருகில் போய் நின்றான். பதறும் கைகளால் ஜேபியிலிருந்து ஒரு சிகரெட்டை எடுத்துப் பற்றவைத்துக் கொண்டான்:

அந்தச் செயலிலிருந்த தடுமாற்றத்தை - அதில் அர்த்தமான தளர்வை — கேதாரி புரிந்து



கொண்டு தமக்குள் தைரியமடைந்தார்: பெரிய பெரிய தந்திரசாலிகளையெல்லாம் தம்மிடமே மொத்தமாய்ச் சரக்கு வாங்கச் செய்து கொள்ளை லாபம் அடைந்து பழக்கப்பட்டவருக்கு இந்த ஒருவனுடைய எதிர்ப்பைத் தகர்த்தெறிவது கஷ்டமாயில்லை. மேலும் அவன்தான் ஏற்கனவே தளர ஆரம்பித்திருந்தானே; சாரதாதான் அதற்குக் காரணம்......

"டேய் முத்து, குருசாமி வந்தானா பார்" என்று குரல் கொடுத்தார் கேதாரி.

"குருசாமி எதற்கு மாமா?"

"பெரிய விஷயமொன்று இருக்கிறது. அது சம்பந்தமான காகிதங்களை யெல்லாம் பரிட்சித்துத் தகுந்த பதில் தயாரிக்க வேண்டும். அதற்குத்தான் எனது அந்தரங்கக் காரிய தரிசியை வரச் சொல்லியிருந்தேன்."

பாலசந்திரன் வறட்டுச் சிரிப்பு சிரித்தான்.

"உங்களுக்கென்ன மாமா, நீங்கள் பெரிய மனிதர். அந்தஸ்துள்ளவர்."

"நீயும்தான்." கேதாரி குரலில் கனிவை மிகைப்படுத்திக் கூறினார். "உனக்கென்ன குறை?" என்றார்.

"உண்மைதான். எனக்கும் அந்தஸ்து இருக்கிறது. வேலை இருக்கிறது. வீடு இருக்கிறது." அவன் ஒருகணம் தயங்கினான். "மனைவியும் இருக்கிறாள்."

"உனக்கு அந்தஸ்து இருக்கிறது. வேலை இருக்கிறது. வீடு இருக்கிறது. அதனால் மனைவியும் இருக்கிறாள்." கேதாரியின் கண்கள் கூர்மையாய் ஒளிர்ந்தன.

அடிபட்டவன் போல் பாலசந்திரன் நடுங்கினான். அவன் முகத்தில் கருமை பாய்ந்தது.



"அதை நீங்களும் சொல்லிக் காட்டுகிறீர்களா?" அமைதியற்று அவன் சிகரெட் துண்டை ஜன்னல் வழியாய் வெளியே விட்டெறிந்து விட்டான்.

"நெருப்பென்றால் வாய் வெந்து விடுமா? அசட்டுப் பிள்ளையே! உன் நன்மைக்குத்தானடா சொல்கிறேன். அவளுக்கு உன் மேல் அன்பு இல்லையென்று நினைக்கிறாயா?"

அவன் ஆத்திரத்துடன் திரும்பி அவரை நேருக்கு நேர் பார்த்தான். "அன்பிருந்ததால் தான் என்னை விட்டுவிட்டுப் பிறந்தகம் போய் விட்டாளா?" என்று கேட்டான்.

"அவள் இஷ்டத்துக்கு விரோதமாய் நீ வீட்டை விற்க வேண்டுமென்றாய். அவள் கோபித்துக் கொண்டு போய்விட்டாள்: மனைவியைவிட உனக்கு யாரோ முன்பின் தெரியாத ஒரு டாக்டரிடமல்லவா கரிசனம் பொங்கி வழிந்து ஓடுகிறது?"

பாலசந்திரன் பல்லைக் கடித்துக் கொண்டான். ஜுரமுற்றிருப்பவன் போல் அவன் முகத்தில் ரத்தம் கரந்திருந்தது. நாற்காலியில் வந்து அமர்ந்து தலையைக் கைகளி.; பற்றிக் கொண்டான்.

கேதாரி மெள்ள அவன் தோள்மேல் கைவைத்தார். "பாலு!/ போனவாரம் புதுக்கோட்டைப் பக்கம் போயிருந்தபோது ஒரு நைலான் துணிக்கடை சொந்தக்காரரைப் பார்த்தேன். அவர் வியாபாரத்தை விற்று விடுகிறாராம். நான் அதை வாங்கி இங்கே சென்னையிலேயே கடை திறந்து விடலாமென்று தீர்மானித்திருக்கிறேன்."

அவர் வார்த்தைகளின் அர்த்தம் அவன் மேல் பதியவில்லை. ஒரு விநாடி கவனித்து விட்டு அவர் தொடர்ந்தார்:

"இது சம்பந்தமாய் என் முடிவான பதிலை அவருக்கு எழுதியனுப்பத்தான் குருசாமியை வரச் சொல்லியிருக்கிறேன். அந்தக் கடையை இந்த ஊரில் வைக்க உன் வீட்டைத்தான் கேட்கலாமென்று இருக்கிறேன்."

இப்போது பாலசந்திரன் நிமிர்ந்து பார்த்தான். அவன் அதிர்ச்சி எழும்புமுன் தம் மிருதுவான குரலால் அதை அமுக்கிப் படுக்க வைத்தார் கேதாரி. "இதில், நமக்குள்ள தன லாபத்தை நினைத்துப்பார், பாலு...தாய் தந்தையில்லாத உன்னை என் நண்பரின் பையன் என்பதற்காக வளர்த்தேன்; படிக்க வைத்தேன். வெளி நாடுகளுக்கும் அனுப்பினேன். என் வியாபாரத்திலேயே வேலையும் கொடுத்தேன். கல்யாணமும் செய்து வைத்தேன். இப்போது இந்தப் புதுக் கடை முன்னுக்கு வந்தால் காலக்கிரமத்தில் அதை உனக்கே சொந்தமாக்கி விடுகிறேன். உனக்கு இதில் எத்தனை லாபம், யோசித்துப் பார்."

பேச்சில் விளக்கிய விஷயத்தை மௌனம் இன்னும் ஆழ விவரிப்பதற்காக அவர் தம் பேச்சை நிறுத்திக் கொண்டார்.

பாலசந்திரனின் கண்கள் படபடத்தன. கேதாரி தம்முடைய லாபத்தை உத்தேசித்துத்தான் இக் காரியத்தில் இறங்கியிருக்கிறார். ஆனால் தாம் ஒரு பிடி அள்ளிக்கொண்ட பிறகு சிந்தியிருக்கும் பருக்கைகளை அலட்சியமாய் அவனிடம் விட்டெறியாமல் இருக்க மாட்டார். அந்தப் பருக்கைகள் போதுமே, அவனுக்குச் செல்வாக்கைத் தர! முக்கியமாய்......சாரதா!

அவள் நினைவு வந்ததும் அவன் உடல் ஒரு தரம் ஆடியது. நற்காரியத்துக்கு வீட்டைக் கொடுக்க வேண்டுமென்ற நல்ல எண்ணம் கூடவல்லவா அவள் பிரிவினால் ஆட்டம் கண்டு விட்டது! இப்போது வீட்டை விற்காதது மன்றி அதை லாபமுள்ள கடையாகவும் ஆக்கச் சம்மதித்துவிட்டால் அவள் அவனிடம் திரும்பி வருவாள்!

போராட்டத்தால் இடுங்கிய அவன் கண்கள் திடீரென்று விரிந்தன. இது என்ன? அவன் மாமனார் ஜனார்த்தனனும் மாமியார் செல்லமும் உள்ளே நுழைந்து வந்தார்கள். ஓஹோ! எல்லோரும் முன் ஏற்பாட்டின்படி இங்கு ஒன்றுகூடி அவனைத் தாக்கப் போகிறார்களா? அவன் முகம் கோபத்தில் துடித்தது.

"மாப்பிள்ளை என்ன சொல்கிறார்?" என்று சிரித்தபடியே கேட்டார் ஜனார்த்தனன்.

"உட்காருங்கள். வேறென்ன சொல்வார்? நல்லது கெட்டது என் பாலுவுக்குத் தெரியாதா என்ன?" என்றார் கேதாரி.

# உங்களுக்கு முற்றிலும் புது மாதிரியான இரு பவுடர்கள்









## ஸாண்டால்

சந்தனத்துடன் கூடிய
டால்கம் பவுடர்...

## ஸாண்டல் வுட் டாய்லட் பவுடர்

சுத்தமான தனி சந்தனத்தை
மென்மையாக்கப்பட்டது...

# டி.எஸ்.ஆர். & கோ

கும்பகோணம்

A K GOPAL & CO

சென்னை நகருக்கு டிஸ்ட்ரிபூட்டர்கள்: சுராஜ் ஏஜன்ஸீஸ், 18, ராயப்பேட்டை ஹைரோடு கோயமுத்தூர் பாலக்காடு, நீலகிரிக்கு சோல் ஏஜண்டு: B. பாலபட்டாபி (ஸ்தாபிதம் 1932) வைசியாள் தெரு, கோயமுத்தூர் மதுரை ஏஜண்டு: மெஸர்ஸ் மீனாக்ஷி எண்டர்பிரைஸஸ், 4. கூட்ஸ் ஷெட் தெரு, மதுரை

# HEWLETT'S
## MIXTURE

IN 4 OZS. & 10 OZS. BOTTLES

WITH OR WITHOUT OPIUM




**Popular for over 80 Years**



## ஹியூலெட்ஸ்
### மிக்ஸர்

80 ஆண்டுகளுக்கு மேலாக இந்த ஔஷதம் அஜீர்ணம், வயிற்றுக் கோளாறுகள், நெஞ் செரிச்சல், வாயு பொருமல் புளிப்பு, குடல் வியாதிகள் இவற்றிற்கு முக்கிய பரிகார மாக உலக முற்றிலும் பெயர் பெற்று விளங்கி வருகிறது. அபினி சேர்த்தும், அல்லாம லும் 4 அவுன்ஸ், 10 அவுன்ஸ் அளவுகளில் எல்லா மருந்துக் கடைகளிலும் கிடைக்கும்.

ஸி. ஜே. ஹியூலெட் & சன் (இந்தியா) பிரைவேட் லிட், சென்னை - 3

---

## புளோரோஸோன்
### கருமையான சரீரத்தை வெண்மையாக்குகிறது



ப்ளோரோஸோன் உங்கள் சருமத்தை இதேபோல் வெண்மையாக்கி, முகப் பருக்கள் முதலிய சருமக் கோளாறு களை அறவே, போக்கி, மேனிக்கு மலர் போன்ற மென்மையையும். நீடித்த அழகையும் அளிக்கும்.

**புளோரோஸோன் லோஷன் ஒரு பாட்டில் விலை ரூ. 4.25. சக்தி மிகுந்த புளோரோ ஸோன் கிரீம் ஒரு ஜாடி விலை ரூ. 5.50.**

வி. பி. சார்ஜ் தனி

கெமிஸ்டுகளிடமும் ஹைஜீனிக் ரிசர்ச் இன்ஸ்டிடியூட், த. பெ. 1192 பம்பாய் 1 விலாசத்திலும் பெறலாம்

*Florozone*

MIRACLE BEAUTY BLEACH

*Distributors for Madras:*

**R. L. GOWDER & Co., 59, Bunder St., Madras**

---




# EPHRILIME
## எப்ரிலைம்




அவசர ஆஸ்துமா உபாதை களைக் குணப்படுத்த எப்ரிலைம் மிகச் சிறந்தது. ஒரு பாட்டில் மருந்தை உபயோகித்தால் அதன் பூரண பலன்களைக் காண்பார்.

*நீண்ட காலப்பட்டதும், மிக்க உபாதை தரக் கூடியதுமான ப்ராங்கைடிஸ், ஆஸ்த்மா முதலிய ரோகங்களுக்கு ஓர் சிறந்த நிவாரண மருந்து*

**யூனியன் டிரக் கம்பெனி, லிட்.**

மதராஸ்டிப்போ: 2, ஜோன்ஸ்லேன், மதராஸ்-1

எல்லோரும் உட்கார்ந்து அவனையே உற்றுப் பார்த்தார்கள். அவன் மௌனமாயிருந்தான்.

‘‘இதை ஒப்புக்கொண்டு நல்ல அந்தஸ்தோடு முன்னுக்கு வருவதானால் சரி; இல்லை, நல்ல காரியம். அது இது என்று இருக்கிற சொத்தையும் தோற்றுவிட்டுக் கையை விரிப்பதானால் சாரதா என்னுடனேயே இருக்க வேண்டியதுதான். எங்களுக்கு எங்கள் குழந்தை பாரமாகி விட மாட்டாள்'' என்றார் ஜனார்த்தனன் உறுதியாக.

‘‘அதற்குக் கல்யாணம் ஏன் செய்து கொடுத்தீர்கள்?'' பாலசந்திரன் சுவரைத் திரும்பிப் பார்க்காமலேயே கேட்டான்.

‘‘பெண் சுகமாயிருப்பாள் என்றுதான் கொடுத்தேன்.''

செல்லம் இதற்குள், ‘‘ஊரைக் கொள்ளையடித்துப் பணம் சேர்க்க வேண்டுமென்று யாரும் சொல்லவில்லை. ஏதோ இருப்பதைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள் என்றுதான் சொல்கிறது. என்னதான் நூறு இருந்தாலும் உலக விவகாரங்களையும் பார்த்துக் கொண்டால்தானே பிழைக்க முடியும்? குழந்தையும் உங்களை விட்டு வந்ததிலிருந்து நிம்மதியாய் இல்லை. அவள் மறுபடியும் குடியும் குடித்தனமுமாய்ப் புருஷனோடு வாழ வேண்டுமென்பதுதான் என் ஆசை!'' என்றாள்.

அது ஒரு தாய்க்குரிய ஆசைதான். அதை பாலசந்திரன் சந்தேகிக்கவில்லை. ஏன், அவள் மகளுடையதும், அதுதான் ஆசையென்று அவனுக்குத் தெரியும். சாரதாவைவிட அன்பான மனைவி ஒருத்தி இருக்க முடியுமா? ஆனால் அவள் என்ன சொன்னாள்? ‘மனிதனுக்குத் தூக்கம் எப்படியும் வருகிறதென்றாலும் பாயைவிடப் பஞ்சு மெத்தையில் இன்னும் இதமாக வராதா?' என்றாள். அதே போல் சொத்து, சுகம் என்று செல்வாக்கு பொழியும் இடத்தில்தான் அன்பு நன்றாய்த் தழைக்க முடியுமென்பது அவள் கருத்து. கோபித்துக் கொண்டு பிறந்தகம் சென்றாள். பின்னாலேயே அவன் வந்து ‘விற்கவில்லை, என்னுடன் வந்துவிடு' என்று சொல்ல வேண்டுமென்றுதான் விரும்பினாள்; எதிர் பார்த்தாள். அவளுக்கு வீடும் வேண்டும், கணவனும் வேண்டும். நாளடைவில் அவன் இரண்டையுமே அவளுக்குத் தன் அன்பின் காரணமாய்த் தந்து விடுவான் என்ற தைரியம் அவளுக்கு இருந்தது.

வீட்டு மோகத்துக்காகத் தன்னை விட்டுச் சென்றவளிடம் கெஞ்சிக்கொண்டு போக அவனது சுய கௌரவம் இடம் தரவில்லை. ஆயினும் அவள் இல்லாத வாழ்வு கருகிக் கொண்டுதானிருந்தது.

‘‘எல்லாவற்றையும் யோசித்துப் பதில் சொல்லுங்கள்'' என்றாள் செல்லம். அவளுடைய கெஞ்சும் குரல் ‘என்னுடைய வயிற்றில் நீதான் பாலை வார்க்க வேண்டும்' என்று முறையிட்டது.

பாலை வார்ப்பதென்ன, அவனுக்கும் அது பால்தான். அவன் மௌனமே உணர்ச்சியில் துடித்துக் கொண்டிருந்தது.

‘‘சொல், பானு!''

‘‘எனக்கென்னமோ வீட்டை டாக்டருக்குக் கொடுப்பதுதான் இஷ்டம்'' என்றான் பானு இடமில்லாத குரலில்.

‘‘முட்டாள்தனமாய்ப் பேசாதே. உனக்கு இருக்கும் சொத்தெல்லாம் அந்த ஒரு வீடு தான். நீ சரி என்றால் நாளைக்கே அது உனக்கு ஆயிரம் ஆயிரமாய்ச் சம்பாதிப்பதற்கு வழி செய்யும்.''

‘‘ஆமாம். அந்த ஆயிரங்களுக்கு நான் என்னுடைய ஒரு நல்ல எண்ணத்தைப் பலி கொடுத்தால்...?''

‘‘உலகில் சிறப்பாய் வாழ வேண்டுமானால் எத்தனையோ பலிகள் கொடுக்கத்தான் வேண்டியிருக்கும்'' என்றார் ஜனார்த்தனன்.

‘‘அதன் பலன்? போகும்போது எதைக் கொண்டு போகப் போகிறோம்?''

‘‘போவதைப் பற்றிப் பேச்சு ஏன்? இருக்கும் போது அனுபவிக்கக் கூடிய இன்பங்களையெல்லாம் எண்ணிப் பார்'' என்று சவால் விடுத்தார் கேதாரி.

பாலசந்திரன் பதற்றமாய்த் தலைநிமிர்ந்தான்; நிமிர்ந்த பார்வை அறைக்கு வெளியிலிருந்த வடிவத்தின் மேல் நிலைத்தது. உலக இன்பங்களுக்கெல்லாம் மணி மகுடமாய் அங்கே நின்று கொண்டிருந்தாள் சாரதா.

பாலசந்திரனின் இதயத்துடிப்பு ஒரு நிமிஷம் நின்றுவிடும்போல் இருந்தது. சாரதாவை நேருக்கு நேர் கண்டதும் அவளிடம் கொண்டிருந்த அன்பு, அந்த அன்பினால் வந்த தளர்வு, அவள் பிரிவினால் அனுபவித்த துன்பம் — எல்லாம் ஒருங்கே வந்து மூடி அவன் உள்ளத்தை அமுக்கின. வேகமாய் வந்த மூச்சோடு அவளைப் பார்த்தபடியே நின்றுவிட்டான். உணர்ச்சி பொங்கி வந்தது. வாயில் வெளிப்படாத பிரேமை கண்களில் நின்று தவித்தது.

சாரதாவின் உதடுகளில் சிறு நகை ஒன்று அரும்பியது. தன் வெற்றியைக் குறித்துச் சந்தேகம் இல்லாதவள் போல் அவள் வாய் பேசாது அவனையே இமை கொட்டாமல் பார்த்தவாறு இருந்தாள். அவள் கண்களிலும் அன்பு இருந்தது. கூடவே உறுதியும் கர்வமும் இருந்தன. ‘என் இஷ்டப்படி நீ வந்தால்தான் உண்டு. நான் உனக்காக ஒரு அடி கூட முன்னால் எடுத்து வைக்க மாட்டேன்' என்று அறிவிப்பதுபோல் இருந்தது அவளது அசையாத நிலை.

‘‘பானு, என்ன சொல்கிறாய்?''

‘‘விவேகமான காரியம் செய்யுங்கள், ஸார்; வீண் கொள்கைகளை வைத்துக் கொண்டு திண்டாடுவானேன்? இது திரேதா யுகமல்ல'' என்றார் ஜனார்த்தனன்.

‘‘நிதானித்துப் பாருங்கள். வலிய வரும் ஸ்ரீதேவியை வேண்டாமென்கிறீர்கள்'' என்று அழுமுடியாமல் சொன்னாள் செல்லம்.

மனச்சலனத்தைப் பிளந்துகொண்டு மனம் வலிக்கச் சாரதாவைப் பார்த்தான் பாலசந்திரன். மாமா பணலாபம் என்றார். மாமனார் அந்தஸ்து என்றார். மாமியார் பெண்ணின் சௌபாக்கியம் என்றாள். சாரதா மௌனமாய்த்தானிருந்தாள். ஆனால் உடலெல்லாம் அழகைச் சுமந்து கொண்டு முத்துக் கொடி போல் அவள் எதிரே வந்து நின்றாளே. அந்த நிலைதான் அவளது சக்திவாய்ந்த விவாதம். அவள் வாய் திறக்க வேண்டிய அவசியமே இருக்கவில்லை. அங்கத்திலிருந்து தெறித்த ஒவ்வொரு அழகுச் சுடரும் ‘இதுதான் நான்

கூறும் வாதம், நான் காட்டுப்பயல், என்இஷ்டப்படி செய்தால்...' என்று கூறியது. ஒளியை அணுகும் ஒரு சிறு ஆத்மாவை எல்லோரும் சேர்ந்து பின்னுக்கு இருளில் இழுப்பது போன்ற பிரமை அவன் உள்ளத்தில் கவிந்தது. ஆனால் அவன் திடீரென்று அலட்சியமாகி விட்டான். அவனுக்கு உலகவாழ்க்கை வேண்டும். அவன் மனைவிக்குப் பணமும் சொத்தும் வேண்டுமென்றால் சரி, அவை அவனுக்கும் வேண்டியவைதான். அவன் நெஞ்சிலிருந்து, தோல்விக்கு அவன் அளித்த காணிக்கையால் ஒரு ஆழ்ந்த பெருமூச்சு வெளிப்பட்டது.



"உங்கள் இஷ்டம் போல் செய்கிறேன், மாமா!" என்றான்.

"சபாஷ்!" கேதாரி எழுந்து வந்து அவன் கையைப் பிடித்துக் குலுக்கினார். "நீ கெட்டிக்காரனென்று எனக்கு எப்போதும் தெரியும். இனிமேல் உங்களுக்குக் கவலை இல்லை, மிஸ்டர் ஜனார்த்தனன். அம்மா சாரதா! உனக்கும் புருஷன் கிடைத்து விட்டான்."

பாலசந்திரனின் தேகத்தில் ஒவ்வொரு நரம்பும் பதறிக் கொண்டிருந்தது. தோல்வி, துன்பம், இன்பம் எல்லாம் அவனுள் கொந்தளித்துக் கொண்டிருந்தன. இத்தனைக்கும் தான் விரும்பிய ஒரே பரிசான மனைவியை மெள்ள ஏறிட்டுப் பார்த்தான். சாரதா இப்போதும் பேசவில்லை. ஆனால் அவள் உதடுகளில் முற்றும் மலர்ந்து காணப்பட்ட புன்முறுவலில் பரிபூரண வெற்றியின் இன்பம் விளங்கியது. அவள் வேண்டியபடியே அவனுக்கு அன்பும் கிடைத்து விட்டது; அந்தஸ்தும் கிடைத்து விட்டது.

"ஏண்டா முத்து! குருசாமி இன்னும் வரவில்லை?" என்று கத்தினார் கேதாரி.

அறைக்கு வெளியே ஓடி வந்த முத்து, "இல்லீங்களே, எசமான்!" என்றான்.

"சுத்த சோம்பேறி. வா என்றால் வருவதற்கென்ன இவனுக்கு?" என்ற கேதாரி, முக மலர்ச்சியுடன், "பாலு! உன் மனம் உறுதிப்பட நீயே உன் கையால் அந்த வியாபாரிக்கு நாம் கடையை வாங்கிக் கொள்வதாய் எழுதிவிடு. விவரங்கள் அடங்கிய காகிதமெல்லாம் அங்கேதா னிருக்கிறது. நான் பார்த்துக் கொடுக்கிறேன்" என்றார்.

"கடையைப் பின்னால் நீங்கள் எனக்குக் கொடுக்க வேண்டும். ஞாபகமிருக்கட்டும்" என்றான் பாலசந்திரன்.

"உனக்கேதான். அதற்காகத்தானே உன் வீட்டை இவ் விஷயத்துக்கு உபயோகப்படுத்திக் கொள்கிறேன்?" என்றார் கேதாரி.

மாப்பிள்ளையின் விவகார அறிவைக் கண்டு ஜனார்த்தனன் மனமகிழ்ந்து அவனிடம் ஏதேதோ சொல்லலானார். செல்லம் மகிழ்ச்சியோடு வெளியே ஓடிப் பெண்ணிடம் பேசிக் கொண்டிருந்தாள். பாலசந்திரன் ஒன்றையும் கவனிக்கவில்லை. யந்திரம் போல் மேஜை அருகில் உட்கார்ந்துகொண்டான். வியாபார விஷயமான கடிதத்தை மாமாவின் உத்தரவுகளுக்கு ஒத்தாற் போல் உருவாக்கத் தொடங்கினான். ஞானகிராமனால் காப்பாற்றப் படக் கூடிய ஒவ்வொரு முகம் தெரியாதநோயாளியின் நினைவையும் கடிதத்தில் ஒவ்வொரு எழுத்தால் நிதானமாய்க் கொன்று அந்த நிதானத்தால் தன் மனத்தில் உறுதியைச் சிருஷ்டித்துக் கொண்டிருந்தான்: ஒளியிழந்த அவன் கண்கள் காகிதத்தின் மேலிருந்து நிமிரவில்லை.

"ஆகிவிட்டதா?"

"உம். கையெழுத்து போட்டு விடுங்கள்."

கேதாரி கையொப்பமிட்டார். "அப்பாடா! பாலு! உனக்கு நல்லகாலம் பிறந்துவிட்டது."

பாலசந்திரன் ஒன்றும் சொல்லவில்லை. பிறகு அருகிலிருந்த உறைக்குள் அதை வைத்து மேலே விலாசம் எழுதினான்.

"ஸார்!"

"எவண்டா அது?" கேதாரி கோபமாய்த் திரும்பினார். சுமார் பதினைந்து வயதுள்ள ஒரு பையன் கதவின் அருகில் நின்று கொண்டிருந்தான். அவன் கண்கள் சிவந்து பிதுங்கிப் போயிருந்தன. "யார் நீ?" என்றார்.

"காரியதரிசி குருசாமியின் பிள்ளை."

"என்ன சமாசாரம்? உன் அப்பா வரச் சௌகரியப்பட வில்லையென்று சொல்லியனுப்பியிருக்கிறாரோ? எனக்கும் ஒரு நாள் சம்பளம் கொடுக்கச் சௌகரியப்படாமல் போய்விட்டால் என்ன செய்வாராம்? நான்..."

"எங்கப்பா செத்துப் போய் விட்டார்."

"என்ன! என்ன சொல்கிறாய் நீ?"

"இங்கேதான் வந்து கொண்டிருந்தார். வழியில் ஒரு கார் மோதிவிட்டது. அருகில் வைத்திய வசதி ஒன்றும் இல்லை. தூரத்திலிருந்த ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்வதற்குள் எல்லாம் முடிந்து விட்டது."

துன்பத்தின் அமைதியில் பேசிய பையன் யார் பதிலுக்கும் காத்திருக்காமல் சென்று விட்டான். அந்த அறையில் ஆழ்ந்த மௌனம் சூடி கொண்டிருந்தது.

"ஐயோ பாவம்...உம், அவன் அதிருஷ்டம்" என்று திரும்பிய கேதாரி "பாலு, என்னடா செய்கிறாய்?" என்றார்.

பாலசந்திரன் தான் எழுதி முடித்திருந்த கடிதத்தை உறையிலிருந்து எடுத்து நிதானமாய்க் கிழித்தெறிந்து கொண்டிருந்தான்.

"ஏ பாலு, உன்னைத்தானே, என்ன இது?"

பாலசந்திரனுக்குத் தெரிந்து விட்டது; சொத்தென்றும் சுகமென்றும் பொய்யான சலனங்களில் உழன்றபோது அவையெல்லாம் பிரச்னைகளாய் விசுவரூபம் எடுத்து இதயத்தைப் பிழிந்தன. ஆனால் உண்மை வந்த போது ஒரு விநாடியில், எளிமையாய், வந்தது. எதனோடும் சம்பந்தப்படாத, எல்லாவற்றையும் ஊடுருவிய, எல்லாவற்றையும் மீறிய ஒரு தனி நிரந்தரமாய் அது தன் முழுமையோடு ஆத்மாவினுள் அமைதியாய்ப் பதிந்தது. அக்கணமே பிரச்னைகள் மடிந்தன. "என் வீட்டை நீங்கள் பணம் பண்ணுவதற்காக நான் கொடுக்கப் போவதில்லை. டாக்டர் ஜானகிராமனுக்குத்தான் கொடுப்பேன்."

"அடே முட்டாள்!" என்றார் கேதாரி. ஜனார்த்தனன், செல்லம் எல்லோரும் ஏதோ சொல்லலானார்கள். அவன் ஒன்றும் பேசாமல் நடக்க ஆரம்பித்தான்.

"பாலு! இப்படி நீ செய்தாயானால்...... உன்னை வேலையை விட்டு நீக்கி விடுவேன். ஆமாம், விளையாட்டென்று நினைக்காதே."

"வேலை வேண்டாம், மாமா!"

"அடே உனக்காக எவ்வளவு செலவழித்திருக்கிறேன். உன்னை எத்தனை வருஷங்களாய்ப் படிக்க வைத்தேன். நன்றி கெட்டவனே!"

"அந்த வீட்டை விற்றுப் பணம் முழுவதையும் உங்களிடம் கொடுத்து விடுகிறேன். எனக்கு நீங்கள் செலவு செய்ததற்கெல்லாம் வட்டியும் முதலுமாய் அது ஈடு செய்யும்." அவன் பேசிக் கொண்டே நிற்காமல் அங்கிருந்து போய்விட்டான்.

தெருவில் இறங்கிக் கொஞ்சதூரம் நடந்த பிறகுதான் தன் பின்னாலேயே காலடியோசை கேட்பதைக் கவனித்தான் பாலசந்திரன். சட்டென்று திரும்பினான். அவன் பின்னால் சாரதா வந்து கொண்டிருந்தாள்.

இருவரும் ஒருவரை யொருவர் பார்த்தபடி சற்று நேரம் இருந்தார்கள். அவன் கண்களில் இன்னும் அன்பு இருந்தது. ஆனால் அது இப்போது அறிவை அழிக்கும் அன்பாக இல்லை. அவளது கண்களிலும் அன்பு விளங்கியது. அது இப்போது கர்வம் கலந்த அன்பாக இல்லை. தன் அன்புக்கு ஆணி வேராக இருந்தது அந்தஸ்துதான் என்று அவள் நினைத்திருந்தாள். திடீரென்று அந்தஸ்து, வேலை, வீடு, வீட்டை விற்ற பணம் எல்லாவற்றையும் இழந்து அவன் தன் பரிபூரண வறுமையில் நின்றபோதுதான் அவற்றின் திரையின்றி அவள் தன் அன்பைத் தனியாக அதன் நிஜ வடிவத்தில் கண்டுணர்ந்தாள்; நட்சத்திரத்தின் பூரண ஒளி வெளிப்படுவதற்கு வானில் இருள் கவிய வேண்டியிருந்தது.

ஆயிரம் சலனங்கள் வாட்டிய பின்னும் எஞ்சியது ஒரு உண்மைதான். அவன் கணவன், அவள் மனைவி. பெரிய பிரச்னைகளுக்கெல்லாம் எவ்வளவு எளிய பதில்!

"உன்னை யார் கூப்பிட்டது?" என்றான்.

"என் வீட்டுக்கு நான் வர என்னை யார் கூப்பிட வேண்டும்?"

"எது உன் வீடு?"

"நீங்கள் இருக்கும் இடம்."

## ஜனவரி மாதச் சிறுகதைப் போட்டி

1. மாதந்தோறும் நடக்கும் இந்தச் சிறுகதைப் போட்டியில் எழுத்தாளர்கள் எல்லோரும் கலந்து கொள்ளலாம்.

2. எழுத்தாளர்கள் சொந்தமாகவே கதைகள் புனைந்து அனுப்ப வேண்டும். கதைகள் கல்கியில் ஆறு பக்கத்திலிருந்து பத்து பக்கம் வரையில் வெளியிடக்கூடியதாக இருக்கலாம்.

3. ஒவ்வொரு மாதமும் அந்தந்த மாதப் போட்டிக்கு வந்த கதைகளில் சிறந்ததற்கு நூறு ரூபாய் பரிசு வழங்கப்படும்.

4. ஜனவரி மாதப் போட்டிக்கு ஜனவரி 1-ந் தேதியிலிருந்து 31-ந் தேதி வரை கதைகள் எழுதியனுப்பலாம். ஜனவரி மாதப் போட்டிக்கு வந்த கதைகள் பிப்ரவரி மாதம் முழுதும் பரிசீலனை செய்யப்படும். பரிசு பெற்ற கதை மார்ச் மாதத்தில் பிரசுரமாகும். அதேபோல் அந்தந்த மாதக் கதைகள் அடுத்த மாதத்தில் பரிசீலனை செய்யப்பட்டு, அதற்கடுத்த மாதத்தில் பிரசுரமாகும்.

5. கதைகளை நல்ல காகிதத்தில் இடையிடுகள் விட்டு ஒரே பக்கத்தில் எழுத வேண்டும். காகிதத்தின் மறு பக்கத்தில் எழுதக் கூடாது.

6. தேர்ந்தெடுக்கப்படாத கதைகளைத் திரும்பிப் பெற விரும்புவோர் அவற்றுடனேயே போதிய தபால் பில்லைகள் வைத்து அனுப்ப வேண்டும். தபால் பில்லைகள் வைத்து அனுப்பாதவற்றைத் திருப்பி அனுப்புவதற்கில்லை.

7. போட்டிக் கதை சம்பந்தமாக எந்தவிதக் கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்வதற்கில்லை.

8. தேர்ந்தெடுத்த கதைகளைத் திருத்துவதற்கும் குறைத்து வெளியிடுவதற்கும் ஆசிரியருக்குப் பூரண உரிமை உண்டு.

— ஆசிரியர், கல்கி




ஏ. கே. சண்முகம் - புத்தனேரி சுப்பிரமணியம்

கோயில்களையெல்லாம் கலை வளர்க்கும் கூடங்களாக மலேயாத் தமிழர்கள் பேணி வருவதை ஏற்கெனவே குறிப்பிட்டுள்ளோம்.

''இயல், இசை, நாடகம், சிற்பம் முதலான கலைகள் அனைத்தையும் வளர்க்கும் கலைக்கூடம் எது? மாணவர்களைப் பயிற்றுவிக்கும் பள்ளி எது? மருத்துவம், அன்னதானம் முதலான அறத்துறைகளை வளர்ப்பது எது? மெய்க் கீர்த்திகளைக் கல்வெட்டுகளாகப் பதித்து வரலாற்றை வளர்ப்பது எது? ஊருக்குப் புதியவர் தங்கவும் ஊர்ப் பொதுமக்கள் ஒன்று கூடிப் பேசவும் ஏற்ற இடம், எல்லோருக்கும் பொதுவாக விளங்கக் கூடிய ஒரே பொது இடம் எது?''

ஒரே கேள்வி மயமான இந்த அழகு வசனத்தை எங்கேயோ கேட்ட நினைவு நேயர்களுக்கு வரக்கூடும். ''இராஜ ராஜ சோழன்'' நாடகத்தைப் பார்த்த அன்பர்கள் தஞ்சைப் பெரிய கோயில் காட்சியில் வரும் இந்த வசனத்தை மறந்துவிட முடியாது. இப்படிப் பல கேள்விகளை இராஜ ராஜ சோழனின் தமக்கையாரான குந்தவைப் பிராட்டியின் வாய்மொழியாகப் பொழியச் செய்வதையும், ''அனைத்துக்கும் உரிய பொது இடம் கோயில் என்று குறிப்பிடுகிறீர்களா?'' என்று சோழமன்னன் கேள்வியிலேயே பதில் தருவதையும் எண்ணும்போது கோயில்களின் உண்மைத் தத்துவம் புலனாகாமற் போகாது.

இந்தத் தத்துவத்தை நிலைநிறுத்தும் அறவழியில் கோலாலம்பூரில் பல கோயில்கள் இயங்கி வரும் உண்மையை நேரில் கண்டு மகிழ்ந்தோம்.

மகா மாரியம்மன் கோயில், 'ஸ்காட் ரோடு' கந்தசாமி கோயில், செந்துல் செட்டியார் கோயில் என்னும் தண்டபாணி கோயில் ஆகிய முக்கியமான மூன்று கோயில்களிலும் நமது குழுவினரை வரவேற்றுக் கௌரவித்தார்கள்.

இந்தக் கோயில்கள் ஒவ்வொன்றிலும் பொது விழாக்கள் நடத்துவதற்கு ஏற்ற நல்ல மண்டபங்கள் உள்ளன.

மகா மாரியம்மன் கோயில் நிர்வாகிகள் அப்பர் தமிழ்ப் பள்ளி போன்ற கல்விச்சாலைகளை இயக்குவதோடு அவ்வப்போது தமிழ் இலக்கியச் சொற்பொழிவுகளுக்கும் சமயச் சொற்பொழிவுகளுக்கும் ஏற்பாடுகள் செய்கின்றனர். ஆண்டுதோறும் திருவள்ளுவர் திருநாள் மிகச் சிறப்பாக நடைபெற்று வருகின்றது. இவ்வாண்டு நிகழ்ந்த வள்ளுவர் விழாவில் எங்கள் குழுவினரில் சிலர் முக்கிய பங்கெடுத்துக் கொண்டனர்.

*　　　*　　　*

'ஸ்காட் ரோடு' கந்தசாமி கோயிலை நடத்துபவர்கள் யாழ்ப்பாணத் தமிழர்கள். அழுத்தமான சைவப் பற்று உடையவர்கள். இக் கோயிலை இயக்கும் சிலாங்கூர் இலங்கை சைவர் சபையின் சார்பில் பெரும்பாலும் சமயச் சொற்பொழிவுகளும், நாயன்மார்களின் குருபூஜைத் திருநாட்களும் தவறாமல் நிகழ்ந்து வருகின்றன. இந்தச் சபை நடத்திய திருஞானசம்பந்தர் திருநாளின் போது தான் எங்களுக்கும் வரவேற்பளித்தது. இத் தக் கோயிலின் சார்பில் ஆறுமுக நாவலர் தமிழ்ப் பாடசாலையொன்று சிறப்பாக இயங்கி வருவது குறிப்பிடத் தக்கது.

செந்துல் என்னும் பகுதியில் உள்ள செட்டியார் கோயில் மிகவும் புகழ் வாய்ந்தது. செல்வமும் செல்வாக்கும் நிறைந்த இந்தக் கோயில் மிகப் பெரியது. கோயில் காம்பவுண்டுக்குள்ளாகவே அழகான பெரிய மண்டபம் ஒன்று அமைந்துள்ளது. தமிழ்த் தொடர்பான எந்த விழாவுக்கும் இந்த மண்டபம் இடம் அளிக்கிறது.

திருவள்ளுவர் திருநாள், பாரதி விழா, தமிழர் திருநாள், இசையரங்குகள் முதலிய பல நூறு விழாக்களை இந்த மண்டபம் கண்டிருக்கிறது. செந்தில் ஆண்டவனைச் செந்துல் ஆண்டவனாகக் கோயில் கொள்ளச்செய்த செட்டியார் சமூகத்தார் செந்தமிழ் மண்டபம் ஒன்றையும் அமைத்துள்ள அருமையை எண்ணிப் போற்றாமல் இருக்க முடியுமா? மாபெருங் கோயிலையும் மண்டபத்தையும் நிர்வகிக்கும் பொறுப்பை நண்பர் திரு சோமசுந்தரம் செட்டியார் அவர்கள் ஏற்றுச் சிறந்த பணியாற்றி வருகிறார்.

கோலக் கிள்ளான் சாலையில் பெட்டாலிங் என்ற பேட்டையில் விளங்கும் சுத்த சமாஜம் என்னும் அறநிலையம் சாதிமத வேறுபாடு

கோலாலம்பூர் சுத்த சமாஜத்தின் பொதுத் தோற்றத்தையும், சுத்த சமாஜத்தில் குருகுலவாசம் பெறும் குழந்தைகள் ஆனந்தமாக விளையாடுவதையும் மேலே காணலாம்.

கருதாமல் பொதுநலப் பணி புரிந்து வருகிறது. ஆதரவற்ற அநாதைக் குழந்தைகளுக்கு ஆதரவு தந்து கல்விப் பயிற்சியும் தொழிற் பயிற்சியும் அளிக்கும் சிறந்த குருகுலமாக இந்நிலையம் இயங்கி வருகிறது.

இந்த நிலையத்தைத் தோற்றுவித்துத் திறம்பட இயக்கி வருபவர் 'சமாதான நீதிபதி' என்ற சிறப்புப் பட்டம் பெற்ற சுவாமி சத்தியானந்தா அவர்கள். இவர் தெளிந்த ஆங்கில அறிவும், தமிழ்ப் புலமையும், சீன மொழி, மலாய் மொழி ஆகியவற்றில் ஓரளவு பாண்டித்தியமும் பெற்றவர். இந்தியர், சீனர், மலாய்க்காரர் முதலிய பல்வேறு இனத்தவரின் கலாசாரங்களை எல்லாம் நன்கு உணர்ந்து அவர்களின் நன்மதிப்பைப் பெற்றவர். 'மலேயா சரித்திரம்' என்ற அருமையான தமிழ் நூலை உருவாக்கியவர்.

சுவாமி சத்தியானந்தரின் தளராத முயற்சியால் சுத்த சமாஜம் நாலவரை ஏக்கரா நிலப் பரப்பில் ஒன்பது நிரந்தரக் கட்டடங்கள் அடங்கிய பெருநிலையமாக வளர்ந்துள்ளது. பல சமூகத்தாரிடமிருந்தும் சுமார் ஒன்றரை லட்சம் வெள்ளிகள் நன்கொடை வசூலித்து அறநிலையத்தை விரிவுபடுத்தியுள்ளார் சத்தியானந்தர். ஆங்கில உயர்தரப் பள்ளிக்கூடம் ஒன்றும், சிறந்த மருத்துவ நிலையமும், தமிழ், சீனம், மலாய் ஆகிய மொழிகளைப் பயிற்றுவிக்கும் பள்ளியும் சுத்த சமாஜத்தின் சார்பில் இயங்கி வருகின்றன.

மகாத்மா காந்தியடிகளின் அஸ்தியில் கொஞ்சம் வரவழைத்து அதனை ஒரு மண் கலயத்தில் பயபக்தியோடு பாதுகாத்து வருகிறார் சுவாமி சத்தியானந்தர்.

ஒரு சிறு குன்றின் மீது அமைந்துள்ள பொது வழிபாட்டு மண்டபத்தில் உருவ வழிபாடின்றி 'ஓம்' என்னும் பிரணவ வடிவம் மட்டும் ஓவியமாக எழுதப்பட்டு வழிபடப்பட்டு வருகின்றது.

தியானத்துக்கு ஏற்ற அமைதி வாய்ந்த அந்த மண்டபத்தில் குருவாசம் பெறும் குழந்தைகள் வரிசை வரிசையாக அமர்ந்து

லண்டனிலிருந்து திரும்பிய மலேயா மந்திரிகள் விமானத்திலிருந்து இறங்கும் காட்சி. கதர் உடையில் காட்சி தருபவர் தொழிலாளர் மந்திரி திரு வி. தி. சம்பந்தன்.



பக்திப் பாடல்களை இனிய குரலில் பாடும் சிறப்பைக் கண்டு மகிழ்ந்தோம்.

தமிழில் அமைந்த பக்திப் பாடல்களைத் தமிழ்க் குழந்தைகளுடன் சீனக் குழந்தைகளும் சேர்ந்து பாடிய சிறப்பு வியக்கத் தக்கதாக இருந்தது. "ஒன்றே குலம் ஒருவனே தேவன்" என்ற சமரச சன்மார்க்கமே சுத்த சமாஜத்தின் குறிக்கோள் என்பதை அறிந்தோம்.

## 20. கலை வளர்க்கும் நிலையங்கள்

கோலாலம்பூரில் தமிழர்கள் சிலரின் கூட்டு முயற்சியால் உருவாகி இயங்கி வரும் திரைப்படக் கொட்டகை ஒன்று உள்ளது. அதன் பெயர் 'ஹிந்துஸ்தான் தியேட்டர்.' அதன் நிர்வாக டைரக்டர்களில் ஒருவராகவும் மானேஜராகவும் விளங்குபவர் திரு எஸ். பொன்னுத்துரை. இவர் இலங்கைத் தமிழர்.

"உங்களுக்கு என்னால் ஆகக் கூடிய உதவி ஏதாவது இருக்கிறதா......?" என்று நாள் தோறும் தொலைபேசி மூலம் வினவி அன்பைப் பரிமாறிக் கொண்ட நண்பர் திரு எஸ். பொன்னுத்துரை. குழுவினர் அனைவருக்கும் ஹிந்துஸ்தான் தியேட்டரில் வரவேற்பளிக்க ஏற்பாடு செய்தார். வெறும் பாராட்டுக் கூட்டமாக இல்லாமல், புதிதாக வெளியான "வணங்காமுடி" திரைப்படம் எங்களுக்காகத் தனியே காலை ஒன்பது மணிக்குத் திரையிடப்பட்டது. தமிழகத்திலிருந்து நாங்கள் வெகு தொலைவில் இருந்தபடியால் அந்தப் படத்தைப் பார்த்தபோது அதிலே தோன்றிய நடிக நண்பர்களை நேரிலே பார்த்தது போன்ற பாச உணர்ச்சியே மேலோங்கியது.

* * *

மலேயா அரசாங்கத்தின் தகவல் இலாகாவும், 'மலேயன் பிலிம் யூனிட்' என்னும் செய்திப்படத் துறையும் கலை வளர்ச்சியில் மிகுந்த கவனம் செலுத்தி வருகின்றன.

தகவல் இலாகாவினர் நமது கலைக் குழுவினரை வரவேற்று உபசரித்துச் சில அருமையான செய்திப் படங்களைத் திரையிட்டுக் காண்பித்தனர். தகவல் இலாகாவில் இந்திய நாடகப் பகுதி ஒன்று இயங்கி வருகிறது என்பது குறிப்பிடத்தக்கது. இப் பகுதியில் நடிகர்கள் சிலரும் பாடகர்கள் சிலரும் நியமிக்கப்பட்டுள்ளனர். இவர்கள் சில கலை நிகழ்ச்சிகளை நடத்திக் காண்பித்தனர்.

அரசாங்கத்தின் சாதனைகளை நாடகங்கள் மூலமாகவும், தெருக் கூத்து பாணியிலும், கதாகாலட்சேப முறையிலும் தோட்டத் தொழிலாளர்களிடையே பரப்பும் பணியில் இந்திய நாடகப் பகுதி ஈடுபட்டுள்ளது.

பொதுஜனத் தொடர்பு அதிகாரி திரு சயத் உஸ்மான், தகவல் அதிகாரி திரு ஏ. தர்மதுரை, "ஜனோபகாரி" என்னும் அரசாங்கச் செய்தித் தாளின் ஆசிரியர் திரு சி. வி. குப்புசாமி ஆகியோர் தகவல் இலாகாவின் கலை ஆர்வத்தை விளக்கித் தமிழ் நாடகக் கலையின் சிறப்பைப் பாராட்டினர்.

"கலைத் துறையில் உள்ள எவருக்குமே இதுவரை தகவல் இலாகா வரவேற்பு நல்கியதில்லை. முதன் முதலாகத் தலை சிறந்த தமிழ் நாடகக் குழுவினரை வரவேற்றுப் பாராட்டு

வதில் இந்த இலாகா பெருமைப்படுகின்றது'' என்று தகவல் அதிகாரி திரு தர்மதுரை அவர்கள் கலை உணர்ச்சியோடு குறிப்பிட்டார்.

மலேயாவைப் பற்றிய விவரங்களைச் செய்திப் படங்களின் மூலம் உலகெங்கும் பரப்பும் பணியில் 'மலேயன் பிலிம் யூனிட்' என்ற ஸ்தாபனம் ஈடுபட்டுள்ளது.

1946-ல் தோன்றிய இந்தச் செய்திப்பட இலாகா 1956 முடிய 176 படங்களை உருவாக்கியுள்ளது. இவற்றில் முப்பத்து மூன்று படங்கள் எடின்பர்க், டோக்கியோ, கம்போடியா, பிரிட்டிஷ் கொலம்பியா, ஹாங்காங், மணிலா, மெல்போர்ன், பாடுவா (இத்தாலி) வெனிஸ், வியன்னா முதலான இடங்களில் நடைபெற்ற சர்வதேசத் திரைப்பட விழாக் களில் காண்பிக்கப்பட்டுள்ளன. இவற்றில் பதினொன்கு படங்கள் பாராட்டும் பரிசுகளும் பெற்றுள்ளன. செய்திப் படத் தயாரிப்பில் பிற நாடுகளைக் கவரத்தக்க முறையில் முன்னேறி வருவது 'மலேயன் பிலிம் யூனிட்' என்ற ஸ்தாபனம் என்று சொல்வது மிகையாகாது.

கிராமங்களி லெல்லாம் சுற்றுப் பயணம் செய்து செய்திப் படங்களைத் திரையிட்டுக் காண்பிப்பதற்கு ஏற்றவாறு 92 நடமாடும் சினிமா யூனிட்டுகள் இயங்கி வருகின்றன.

ஆங்கிலம், மலாய், சீனம், தமிழ் ஆகிய நான்கு மொழிகளில் செய்திப் படங்கள் உருவாகின்றன. இப்படங்களை ஏற்றுத் திரையிடும் வாய்ப்பை உலகில் ஐம்பத்து நான்கு நாடுகள் ஏற்றுள்ளன என்று கூறப்படுகிறது.

இந்தியப் பாடல்கள், நடனங்கள் இவற்றைச் சித்திரிக்கும் சில படங்களையும் 'மலேயன் பிலிம் யூனிட்' நல்ல முறையில் தயாரித்துள்ளது.

செய்திப் படத் துறையின் தமிழ்ப் பகுதியில் திரு ஆ. பீட்டர்-அம்மாவாசை என்ற தமிழ் டைரக்டரும், திரு ஜி. மனுவேல் என்ற மொழி பெயர்ப்பாளரும் நற்பணி புரிந்து வருகின்றனர். 'மானுயல்' என்ற ஆங்கிலப் பெயருக்கு 'மனுவேல்' என்ற அழகான தமிழ் வடிவம் தந்து









*கோலாலம்பூர் சீ-டிபியூஷன் நிலைய அதிகாரி திரு. டாம் பீரோஸ்ட் அளித்த வரவேற்பு. அவருக்கு வலது கோடியில் நிற்பவர் தான் சீடிபியூஷன் தமிழ்ப் பகுதித் தலைவர். சீடிபியூஷன் நிலையத்தில் டி. கே. எஸ். குழுவினர். சுல்தான் கலைமான் சார்பில் அளிக்கப்பட்ட வரவேற்பில் மலாய்க்காரர் நடன நிகழ்ச்சி. சீன நாடகச் சங்கத்தில் வரவேற்புக் காட்சி. மத்தியில் சங்கத் தலைவரையும் டி.கே.எஸ். குழுவுக்கு அன்புடன் அளிக்கப்பட்ட கலைக்கொடியையும் காணலாம்.*

ஜனவரி 3உ முதல்



# கலங்கரை விளக்கம்

வெனிஸில் நடைபெற்ற சினிமா படப்போட்டியில் முதற்பரிசு பெற்றது....

டைரக்ஷன் • கிதார்ஷர்மா

# சுட்டியும் சிட்டியும்

(தமிழில் ரஷ்யப்படம்)

சென்னை ராஜ்ய குழந்தைகள் சினிமா படச் சங்கம்

தயாரித்தது

Elegant

---

## ஆரோக்கிய நிலை என்பது யாது?

நல்வாழ்வு வாழ்வதற்கு ஆரோக்கியம் இன்றியமையாதது. ஒவ்வொருவருடைய தேகசக்தியும் மன சக்தியும் ஏககாலத்தில் ஒழுங்காக வளர்ச்சி அடைவதே ஆரோக்கியமாகும். அவ்விதம் வளர்ச்சி யடைந்தால்தான் வாழ்க்கையைப் பூரணமாகவும் விசேஷமாகவும் அனுபவித்து ஆனந்தமாக இருக்க முடியும்.

(இந்திய திட்டக் கமிஷன்)

உங்கள் ஆரோக்கியம் மேன்மையாக இருக்க

ஒன்பது ரத்தினங்களின் சேர்க்கையாலான

# நவரத்ன கல்பம்

உட்கொண்டு உங்களது ஆரோக்கியத்தைப் பாதுகாத்துக் கொள்ளுங்கள்

கவிராஜ்
பண்டிட்
துர்க்காதத்த சர்மா
வைத்திய வாசஸ்பதி
அவர்களால்
கண்டுபிடிக்கப்பட்டது



*

வேண்டுவோர் இலவசப் பிரசுரத்திற்கு எழுதவும்

**NAVRATNA KALPA PHARMACY**

**JULLUNDUR CITY (India)**

பழக்கத்துக்கும் கொண்டு வந்ததிலிருந்தே அவரது தமிழ்ப் பற்றை நன்கு அறியலாம்.

* * *

கோலாலம்பூரில் உள்ள குணதிசைக் கலைக் கழகம் (ஈஸ்டர்ன் ஆர்ட் சொஸைட்டி) மக்களின் கலைப் பசி தீர அடிக்கடி சிறந்த விருந்து வழங்கி வருகிறது. இக் கழகத்தில் கலையுணர்ச்சி மிகுந்த உறுப்பினர்கள் பலர் உள்ளனர். இக் கழகத்தினர் அயர்வின்றிப் பல உயர்வான தமிழ் நாடகங்களை மேடையேற்றிப் பெருமை பெற்று வருகிறவர்கள்.

இக் கழகத்தின் செயலாளராகத் திகழ்பவர் திரு வி. ரோச். இவர் திருச்சி மாவட்டத்தைச் சேர்ந்தவர். ''ரீ-டிபியூஷன்'' என்னும் கலை ஒலிபரப்பு நிலையத்தில் தமிழ்ப் பகுதித் தலைவராகப் பணியாற்றுபவர். இந்தியாவிலிருந்து கலைத் துறையில் உள்ளோர் எவர் சென்றாலும் இவரோடு தொடர்பு கொள்ளாமல் இருக்க முடியாது.

கலைஞர்களின் இசைவைப் பெற்று எந்தக் கலை நிகழ்ச்சியையும் விரைவில் ஏற்பாடு செய்துவிடக் கூடிய 'முகராசி' படைத்தவர் திரு ரோச் என்பதையும் கண்டோம். நமது குழுவின் நடனச் சிறுமி சந்தோஷையும் சிங்கப்பூரில் உள்ள டாக்டர் இ. ஏ. சங்கரின் புதல்வி உமாவையும் இணைத்து ஒரே மேடையில் நடன நிகழ்ச்சி நடத்தும் ஏற்பாட்டைத் திரு ரோச் செய்துவிட்டார் என்றால் இவருடைய திறமையை என்னவென்று சொல்வது!

இவருடைய ஏற்பாட்டின்படி குமாரிகள் உமா-சந்தோஷ் நடனமும் நம் பின்னணிப் பாடகி அபிராமசுந்தரியின் இசையும் குணதிசைக் கழகத்தின் சார்பில் ஜூன்மாதம் பதினாலாம் தேதி, புதிய நாடக அரங்கிலேயே நடைபெற்றன. ஈஸ்டர்ன் ஆர்ட் சொஸைட்டிக்கு நல்ல புகழும் பொருளும் கிடைத்த இந்த நிகழ்ச்சியின் காரணமாகச் சிங்கப்பூர் உமாவின் பரதநாட்டியக் கலைத் திறமை கோலாலம்பூர் மக்களுக்கு அறிமுகமாகியது;

* * *

கோலாலம்பூரில் விருந்துக்கு அழைத்த அன்பர்களின் எண்ணிக்கை கணக்கில் அடங்காது. விருந்தளித்த அன்பர்களின் கலையார்வத்தையும் மொழிப் பற்றையும் கண்டபோது இவர்கள் அனைவருமே ஒன்று சேர்ந்தால் ஒப்புரவு வளர்க்கும் ஓர் அருமையான கலை மன்றம் உருவாக முடியுமே என்றுதான் எண்ணத் தோன்றியது.

மலாய்க்காரர்களின் மதிப்புக்குரிய தலைவர்களில் ஒருவரான திரு இஞ்சே முகமது டின் பார்-அட்-லா ஜூன் மாதம் பதினேழாம் தேதி இரவு, தமது இல்லத்தில் நமது குழுவினருக்குச் சிறந்த சைவ விருந்து அளித்து அன்பு பாராட்டியது குறிப்பிடத்தக்கது.

விருந்து வழங்கியதோடு அமையாமல் கல்தான் 'கலைமான் கிளப்' என்ற மலாய்க்காரர் பொழுது போக்குக் கலை மன்றத்தில் நமது குழுவினர் கண்டு மகிழ்வதற்காக மலாய் மக்களின் கலை நிகழ்ச்சிகள் சிலவற்றையும் நடத்திக் காண்பிக்க ஏற்பாடு செய்தார் திரு முகமது டின். ரோங்கிங் நடனம், தற்காப்பு நடன வகைகள் முதலானவற்றை மலாய்க் கலைஞர் நிகழ்த்தினர். ரோங்கிங் நடன நிகழ்ச்சியின் போது திரு முகமது டின் அவர்களும் ஆட்டத்தில் பங்கு கொண்டது மிக ரசமாகவும் உற்சாகமாகவும் இருந்தது.

நாட்டிய நாடக பாணியில் அமைந்த மலாய்ச் சிறுமிகளின் நகைச்சுவை நிகழ்ச்சி எல்லோராலும் வெகுவாக ரசிக்கப்பட்டது;

நமது குழுவின் சார்பில் குமாரி அபிராம சுந்தரியின் இசையும், சிறுமி சந்தோஷின் நடனமும் திரு ஏ. பி. சண்முகத்தின் தில்ருபா வாத்திய இசையும் நடைபெற்றன;

மறுநாள் அதாவது ஜூன்மாதம்பதினெட்டாம் தேதி இரவு சீன நாடகச் சங்கத்துக்குச் சென்றிருந்தோம். சீனர்கள் நாடகங்களுக்குப் பயன்படுத்தும் ஆடையணி வகைகளும், இசைக் கருவிகளும் மேடைக்குக் கொண்டு வரப்பட்டு, அவற்றைப் பற்றிய விளக்கங்களும் கூறப்பட்டன. கண்ணைப் பறிக்கும் சிவப்பு, பச்சை போன்ற வர்ணங்களையே சீனர்கள் விரும்புகின்றனர் என்பதை நாடக ஆடையணிகள் எடுத்துக் காட்டின.

பின்னர் சீனப் பாடகர்களும் பாடகிகளும் சில பாடல்களைப் பாடிக் காட்டினர்; கூட்டிசை முழக்கும் பாணி பிரமாதம்.

சீன நாடகச் சங்கத் தலைவர் 'இராஜராஜ சோழன்' நாடகத்தை ஒவ்வொரு அம்சமாக வர்ணித்து ஏறக்குறைய கால்மணி நேரம் ஒரே புகழுரையாக நிகழ்த்தினர். ''தமிழர்

## தாயும் சேயும்

''தாயிற் சிறந்ததொரு கோயிலும் இல்லை'' என்று அன்னையின் பெருமையை அழகாக எடுத்துரைக்கிறார் ஔவைப் பிராட்டியார்; இவ்வுலகில் வழிபடும் தெய்வமாக விளங்கும் அன்னைக்குக் கிடைத்துள்ள அரும் பேறு தாய்மை. இந்தத் தாய்மையின் போது கவனிக்க வேண்டிய விதிமுறைகளையும், பிரசவத்துக்குப் பிறகு குழந்தையை வளர்க்கும் விதத்தைப் பற்றியும் இந் நூல் மிகத் தெளிவாக விளக்கியிருக்கிறது. ஆங்கிலம் தெரிந்த அனைவரும், இந்நூலை ஒரு முறை வாசித்துப் பார்த்தால், பிரசவ காலத்திலே தாய்மார்களுக்கு ஏற்படும் எத்தனையோவிதக் கோளாறுகளெல்லாம் வராமல் தடுப்பதற்கு இயலும்; குழந்தை வளர்ப்புக் கலைக்கு இந் நூல் பெரிதும் பயன்படும்.

*வெளியீட்டோர்:* Geoffrey Manners & Co., Magnet House, Ballard Estate, Bombay - 1.

களே! நீங்கள் பொல்லாதவர்கள்! கலா வல்லவர்கள்! கலைத்துறையில் நீங்கள் பெற்றுள்ள சாதனையின் எல்லையை, சிறப்பின் உயர்வை நாங்கள் எட்ட முடியாது!'' என்ற பொருளுரையெல்லாம் சீன நாடகச் சங்கத் தலைவரின் புகழுரையில் பொதிந்திருந்தன.

இவ்வாறு இரண்டு நாட்களும் மலாய்க்காரர்கள் சங்கத்திலும் சீன நாடகச் சங்கத்திலும் கலந்து கொள்ளும் வாய்ப்பைத் தேடித் தந்த சுவாமி சத்தியானந்தா அவர்களை எவ்வளவு போற்றினாலும் தகும்.

*     *     *

கோலாலம்பூரில் 'ரீ-டிபியூஷன்' என்ற ஒரு நிறுவனம் உள்ளது: ரேடியோவைப் போன்ற ஒலிபரப்பு நிலையம் இது. ரேடியோ செய்கின்ற ஒலிபரப்புப் பணியை 'ரீ-டிபியூஷன்' மிக மிகக் குறுகிய எல்லைக்குள் செய்து வருகிறது என்று சொல்லலாம்;

ரேடியோவுக்கும் ரீ-டிபியூஷனுக்கும் ஒரு முக்கிய வேறுபாடு உண்டு. ரேடியோவில் காற்றின் அலைகளின் மூலம் ஒலி பரவுகிறது. ஆனால் ரீ-டிபியூஷனில் கம்பிகளின் மூலம் ஒலிபரப்பப்படுகிறது. ரீ-டிபியூஷன் ஸ்பீக்கர் பெட்டிகளை நிலையத்தினரே தேவையானவர்களுக்கு வழங்கி, மாத வாடகை வசூலித்துக் கொள்ளுகின்றனர். ஆங்கிலம், சீனம், மலாய், தமிழ் ஆகிய நான்கு மொழிகளிலும் நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்து ஒலிபரப்புகின்றனர். முக்கியமான 'ரேடியோ மலேயா' நிகழ்ச்சிகளை அஞ்சல் செய்யும் உரிமையையும் பெற்றுள்ளனர். நகர மக்களிடையே சிறந்த செல்வாக்குப் பெற்றுள்ள கலை நிறுவனம் ரீ-டிபியூஷன் என்று சொல்லலாம். கம்பிகளால் இணைத்துப் பிணைக்க வேண்டிய அவசியம் இருப்பதால் குறிப்பிட்ட ஒரு நகர எல்லைக்குள் மட்டுமே ரீ-டிபியூஷன் இயங்க முடிகிறது. எனவே சிங்கப்பூர், கோலாலம்பூர், பினாங்கு ஆகிய மூன்று நகரங்களில் மட்டுமே ரீ-டிபியூஷன் இயங்கி வருகிறது. சிங்கை நிலையத்தில் தமிழ்ப் பகுதி கிடையாது.

ரீ-டிபியூஷன் நிறுவனத்தின் தலைமை நிலையம் லண்டனில் இருக்கிறதென்றும், உலகில் பல முக்கிய நகரங்களில் ரீ-டிபியூஷன் முறை பரவியுள்ளதென்றும் கேள்விப்பட்டோம்.

ரீ-டிபியூஷன் நிலையத்தின் தமிழ்ப் பகுதித் தலைவர் திரு ரோச் அவர்கள் நல்ல தமிழ்ப் பற்றுள்ளவர்.

நிலையத்தின் தமிழ் அறிவிப்பாளர் திரு வி. ராமச்சந்திரனும் பெண் அறிவிப்பாளர் ஒருவரும் தமிழ்த் தொண்டாற்றுகின்றனர்;

*     *     *

ரேடியோ மலேயாதான் மலை நாடு முழுவதும் ஒலி அலைகளை அடக்கி இயக்கும் அரசாங்கக் கலை நிறுவனம் என்பது அனைவருக்கும் தெரியுமே! எனவே அதனைப் பற்றி அதிகமாக அறிமுகப்படுத்த அவசியமில்லை என்று கருதுகிறோம். ரேடியோ மலேயாவின் கோலாலம்பூர் நிலையம் வனப்பு நிறைந்த 'பெடரல்' மாளிகையில் அமைந்துள்ளது. அதன் தமிழ்ப் பகுதித் தலைவராக விளங்குபவர் திரு ஜோசப் என்னும் தமிழன்பர். அவருக்கு உதவியாளராக விளங்குபவர்களில் திரு சுவாமிநாதன் என்னும் நண்பரை அவசியம் குறிப்பிட வேண்டும். விடாப்பிடியாக வற்புறுத்தி நமது ''இராஜ ராஜ சோழன்'' நாடகத்தையே இரண்டரை மணி நேர நிகழ்ச்சியாக ரேடியோ மலேயாவில் ஒலிப்பதிவு செய்து கொள்ளும்படியான சூழ்நிலையை உண்டாக்கி வெற்றியும் கண்ட அன்பர் திரு சுவாமிநாதன்.

குளிர் சாதன வசதி நிறைந்த ஸ்டுடியோவுக்குள் இந்த நிகழ்ச்சியை ஒலிப்பதிவு செய்து விட்டு வெளியே வருவதற்குள் நடிக நடிகையர் நினைந்துப் போய் விட்டனர்! இரண்டரை மணி நேர நாடக நிகழ்ச்சியை ஒலிப்பதிவு செய்வதற்குச் சுமார் ஏழு மணி நேரம் வேண்டியிருந்தது என்றால் அதற்குள் நடிகர்களுக்கு எவ்வளவு அலுப்பு ஏற்பட்டிருக்கும் என்பதைக் கற்பனை செய்து பாருங்கள்!

*     *     *

மலேயாக் கூட்டரசில் தமிழர் ஒருவர் மதிப்புக்குரிய மந்திரியாக விளங்குகிறார் என்பது பெருமைக்குரிய செய்தி. மலேயாவின் தொழிலாளர் மந்திரியாகப் புகழ் பெறுபவர் திரு வி. தி. சம்பந்தன். இவர் மலேயாவில் பேரா மாகாணத்தில் உள்ள சுங்கை சிப்புட் என்ற சிற்றூரில் பிறந்த தமிழர். நமது அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பட்டம் பெற்றவர். எனவே தமிழ் உணர்ச்சியைப் பற்றிக் கேட்கவா வேண்டும்? 1955 முதல் மலேயா இந்தியர் காங்கிரஸின் தலைவராகப் பணி புரிந்து வருகிறார். மாசற்ற காந்தி பக்தர். எப்போதும் கதராடையே அணிபவர். இவரும் இவருடைய சகோதரிகளும் மதுவிலக்குப் பிரசாரத்தில் தீவிரமாக ஈடுபட்டு வருபவர்கள். சிறிய வெற்றிலை பாக்குக் கடைகளிலேகூட மதுபானம் விற்பனையாகும் மலைநாட்டில் மதுவிலக்குப் பிரசாரம் செய்து வருவது என்றால் எவ்வளவு சிரமம் என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும்!

மலேயாவுக்குச் சுதந்திரம் பெறுவது சம்பந்தமாக லண்டன்மா நகருக்குச் சென்ற மந்திரி சபையின் தூதுக்குழுவில் திரு வி. தி: சம்பந்தன் அவர்களும் ஒருவர். லண்டனுக்குச் சென்றபோதும் சூட்டையும் கோட்டையும் நாடாமல் எளிய கதர் உடையிலேயே சென்று திரும்பி மக்களின் கவனத்தையும் அன்பையும் கவர்ந்தவர்.

திரு சம்பந்தன் அவர்கள் சீர்திருத்த நோக்கமும் உள்ளவர்: அர்த்தமற்ற சமூகக் கட்டுப்பாட்டைக் கடந்து கலப்பு மணம் புரிந்து கொண்டவர்:

மந்திரியவர்கள் தமது இல்லத்துக்கும் ஒரு நாள் விருந்துக்கு அழைத்திருந்தார். அப்போது பல விஷயங்களைப் பற்றி விசாரித்தோம். கலை வளர்ச்சியிலும் மலேயா இந்தியர் காங்கிரஸ் தக்க முயற்சிகளை எடுத்துக் கொள்ள வேண்டும் என்ற நோக்கத்துடன் கலைப்பகுதி என்று தொடங்கப்பட்டுள்ளதாகவும் திரு சம்பந்தன் தெரிவித்தார். அரசியல் செல்வாக்கு நிறைந்த மலேயா இந்தியர் காங்கிரஸ் கலை வளர்க்கும் நிலையமாகவும் விளங்கும் என்று அதன் தலைவரே உறுதியளித்தது பாராட்டுக்குரிய செய்தியல்லவா? (தொடரும்)



# தென்னிந்திய நல்வாழ்வுக் கழகத் திருப்பணி







பம்பாய் மாதுங்காவில் தென்னிந்திய நல்வாழ்வுக் கழகத்தார் நடத்தும் கல்வித் திருப்பணியை எவ்வளவு பாராட்டினாலும் தகும். இவர்கள் பள்ளிக்கூடக் கட்டட நிதிக்காக ஸ்ரீமதி ருக்மிணி தேவியின் குழுவினர் நடத்திய நாட்டிய நாடகங்களின் காட்சிகள் சிலவற்றைக் காணலாம்: 1. முதல் நாடகத்துக்குத் தலைமை வகித்த பம்பாய் கவர்னர் ஸ்ரீ பிரகாசா அவர்களும் பள்ளி நிர்வாகிகளும். 2. சீதா கல்யாணத்தில் ஒரு காட்சி. 3. குற்றாலக் குறவஞ்சியில் நடித்த கலைஞர்கள். 4. கட்டப்படும் பள்ளிக்கூடத்தின் தோற்றம்.

பம்பாய் தமிழ்ச் சங்கக் கட்டட நிதிக்காகத் திரு சிவாஜி கணேசன் பராசக்தி, விதி, கட்டபொம்மன் ஆகிய மூன்று நாடகங்களை நடத்திக் கொடுத்தார். தாதர் பார்ஸி ஜிம்கானா மைதானத்தில் விசேஷமாக அமைக்கப்பட்ட அரங்கில் நடைபெற்ற இந்த நாடகங்களை ஆயிரக்கணக்கானவர்கள் பார்த்து மகிழ்ந்தார்கள். நாடகங்களில் வரும் காட்சிகளை இந்தப் பகுதியில் வெளியிட்டிருக்கிறோம்.

1. நாடக விழாவைத் துவக்கி வைத்துப் பேசுகிறார் பம்பாய் ரெவின்யூ மந்திரி ஸ்ரீ ரஸிக்லால் பரேன் அவர்கள். வலதுபுறம் காணப்படுபவர்கள் சங்கத் தலைவர் திரு வி. ஆர். சுப்பிரமணியம்



# பம்பாயில்







அவர்களும், கட்டட நிதிக் கமிட்டித் தலைவர் டாக்டர் எஸ். எஸ். கிருஷ்ணன் அவர்களும்; 2. பம்பாய்த் தமிழ்ச் சங்கம் சிவாஜி நாடக மன்றத்தாருக்கு வழங்கிய அன்புப் பரிசான வெள்ளி வீணையுடன் கலைஞர் கட்டபொம்மு கணேசன். 3. திரளாக வந்திருந்த ரஸிகர்களின் ஒரு பகுதி. 4. பராசக்தியில் ஒரு காட்சி. 5. புகழ் பெற்ற வீர பாண்டிய கட்டபொம்மன் நாடகத்தில் வரும் ஒரு உணர்ச்சி நிறைந்த கட்டம்.

# நாடக விழா





1. இப்பொழுது இந்தியாவில் சுற்றுப்பிரயாணம் செய்து வரும் ருமேனியக் கலைக் குழுவினருடன் பாரதத்தின் பிரதமர் ஸ்ரீ ஜவாஹர்லால் நேரு அவர்கள்

2. ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மி சுப்பிரமணியம் அவர்கள் புது டில்லியில் தபால்தலைக் கண்காட்சி ஒன்று நடத்திப் பாரதப் பிரதமரே பார்த்து வியக்கும்படி செய்துவிட்டார். அரசாங்கத்தார் இந்தக் காட்சியை ஊர் ஊராகக் காட்ட ஏற்பாடு செய்திருக்கின்றனர். இந்தக் காட்சி சென்னையிலும் நடைபெறப் போகிறது. படத்தில் தபால்தலைக் கண்காட்சியைக் கலைமணம் கமழும்படி நடத்திவரும் ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மி அவர்களையும் அவருடைய கணவர் ஸ்ரீ சுப்பிரமணியம் அவர்களையும் காணலாம்.

3. சென்ற வாரம் இந்தியாவுக்கு வந்து சுற்றுப் பிரயாணம் செய்த அகில உலகப் பத்திரிகையாளர்கள் கழகத்தின் பிரதிநிதிகளில் சிலர்.



# விசித்திரச் சலங்கை

2

கதை: வாண்டு-மாமா

படம்: பாபு













தேச தேசத்து ராஜாக்களுக்கெல்லாம் செய்தி அனுப்புங்கள், என் செல்ல மகளின் சுயம்வரத்தில் வந்து கலந்து கொள்ளும் படி. தலைப்பாகையின் சலவைகள் குலையாமல் எவன் அதை அணிந்து கொள்கிறானோ அவனுக்கே என் மகள்!


இந்த முயற்சியில் தோல்வியடைபவர்கள் பாதாளச் சிறைக் கைதிகளாக்கப் படுவார்கள்.


சிறு காற்றுக்கும் அசைந்தாடும் மெல்லிய பட்டுச் சத்தமில்லாமல் தலையில் அணிவது? நினைத்தால் கடுமையாக இருக்கிறதே!


தகப்பனுக்கு உடல் நலமில்லையாம்! உடனே போக வேண்டும்
நாட்டிலே ஏதோ கலகமாம்! ஆகவே நான்..!
இரண்டு நாளாகப் பல் வலி...ம் அப்பா!


அத்தனை கோழைகள் முயற்சி செய்யாமலே போய் விட்டார்கள். தலைப்பாகையை அணியக் கூடிய வீரன் எங்கிருந்து வரப் போகிறான்?


கவலைப் படாதீர்கள், இளவரசி உங்களுக்கு ஏற்ற வீரனை நீங்களே தேடியடையப் போகிறீர்கள்.
தொடரும்

## 39. அரிய சந்திப்பு




அந்தக் கட்டடம் கௌரவச் சிறைப் பார்வையாளரின் வீடு என்பது அவ்வீட்டு வாசலில் இருந்த 'போர்டு'—பலகையிலிருந்து தெரிய வந்தது. கலா அந்த வீட்டுக்குள்ளே போய் மால்கோஷைப் பற்றி விசாரிக்க நினைத்து உள்ளே சென்றாள். முன் தாழ்வாரத்திலேயே ஒரு பெரியவர் பத்திரிகை வாசித்துக் கொண்டிருந்தார்.

கலா அவரிடம் சென்று மரியாதையாக நின்றாள்.

"நீ யார்? உனக்கு என்ன வேண்டும்?" என்று வியப்புடன் கேட்டார் அவர்.

"தாங்கள்தான் கௌரவச் சிறைப் பார்வையாளர் என்று நினைக்கிறேன். என் அண்ணா சில மாதங்களுக்கு முன் திடீரென்று என்னை விட்டுப் பிரிந்து போய் விட்டான். அவன் பெயர் மால்கோஷ். ஒரு வேளை அவன் சிறைச்சாலையில் ஏதாவது ஒரு காரணம் பற்றி அடைபட்டிருக்கலாமோ என்று எனக்கு ஒரு சந்தேகம். ஏனென்றால் அவனை நான் இதுவரையில் தேடாத இடமில்லை. ஊரூராகத் தேடி அலைகிறேன். அவன் நல்ல உயரம்; நன்றாயிருப்பான். கிராப்புத் தலை. நீண்ட பைஜாமாவும் நீண்ட வெள்ளைச் சட்டையும் அவன் அணிந்திருப்பான்"

"நீ சொன்ன அடையாளமுள்ள பையன் ஒருவன் ஏதோ பவுன்கள் திருடிய குற்றத்துக்காகவும், ஒரு முறை சிறையிலிருந்து தப்பிச்சென்றதற்காகவும் மீண்டும் கைதுசெய்யப்பட்டிருக்கிறான். நான் இரண்டு நாட்களுக்கு முன்பு அவனைப் பார்த்த போது பைத்தியம் பிடித்தவன் மாதிரி, 'என் தங்கை கலா எங்கே?' என்று அலறிக் கொண்டிருந்தான்..." என்று அவர் சொல்லிக் கொண்டிருக்கும் போதே கலா அளவற்ற உற்சாகத்தினால் ஒரு தடவை துள்ளிக் குதித்தாள்.

"ஐயா! நான்தான் கலா. அவன் என் அண்ணா மால்கோஷ்தான். இதில் துளியும் சந்தேகமில்லை. அவனை நான் உடனே பார்க்க வேண்டும். நீங்கள்தான் உதவி செய்ய வேண்டும்!"

"அம்மா! சிறைச்சாலையில் இருக்கும் குற்றவாளிகளைப் பார்க்க உன்னை நான் உடனே அநுமதிக்க முடியாது. சிறையதிகாரியின் உத்தரவை முன்னதாகப் பெற வேண்டும். மிகவும் அவசரமாக அவனைப் பார்க்க வேண்டும் என்றால் நீ உடனே அரண்மனைக்குப் போய் இவ்வூர் அரசனைப் பார்க்க வேண்டும். அவரிடம் நீ உண்மையைச் சொன்னால் அவர் அநுதாபத்துடன் கவனித்து, சிறைச்சாலைக்குச் சென்று உன் அண்ணனைப் பார்க்க அநுமதியளிப்பார்!" என்று கௌரவச் சிறைப் பார்வையாளர் சொன்னார்.

கலா மகிழ்ச்சியுடன் அவருக்கு வந்தனம் தெரிவித்து விட்டு அரண்மனைக்கு வேகமாகச் சென்றாள்.

அரண்மனை மிகவும் அழகாகத் தோற்றம் அளித்தது. கலா அதைக்கண்டு மிகவும் அதிசயம் அடைந்தாள். அவள் இதற்கு முன்னால் இத்தனை பெரிய அரண்மனையைப் பார்த்ததேயில்லை. மாடங்களும் கோபுரங்களும் நந்தவனமும் அவளைப் பிரமிக்க வைத்தன. எங்கு பார்த்தாலும் ஆயுதம் தாங்கிய வீரர்கள் காவல் புரிந்து கொண்டிருந்தனர்.

கலா பிரதான அரண்மனை வாசலுக்கு அருகில் போய் அங்கு காவல் இருந்த வீரர்களை நெருங்கினாள்.

"ஐயா! நான் இப்பொழுது அரண்மனைக்குள்ளே போய் அரசனைப் பாரக்கவேண்டும். எனக்கு உள்ளே போக அநுமதி அளியுங்கள்!" என்று பணிவாகக் கேட்டாள்.

உடனே காவலர்களில் ஒருவன் 'கடகட'வென்று சிரித்தான்.

"ஏன் அம்மா, இந்த இரவு நேரத்தில் அரசனைப் பார்க்கும்படி உனக்கு என்ன அவசரமான காரியம் இருக்கிறது! அரண்மனையின் பாதுகாப்பைக் கவனிக்கும் அதிகாரியின் உத்தரவு இல்லாமல் நீ அரசனைப் பார்க்க முடியாது. நாளைக் காலையில்தான் அந்த அதிகாரியைப் பார்க்க முடியும்!"

மால்கோஷைப் பார்க்கத் துடித்துக் கொண்டிருந்த கலாவுக்குக் காவலன் சொன்னதைக் கேட்கப் பிடிக்க வில்லை. அவனிடம் ஒன்றும் பேசாமல் அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டாள்.

'சிறைச்சாலைக்குள்ளே போய் மால்கோஷ் இருக்கிறானா என்று பார்ப்பதற்கு இத்தனை சிரமமா? பொழுது விடிகிற வரையில் என்னால் காத்துக் கொண்டிருக்க முடியாது. மேலும் கௌரவச் சிறைப்பார்வையாளர் சொன்னதிலிருந்து மால்கோஷ் சிறையில்தான் இருக்கிறான் என்று நிச்சயமாகத் தெரிகிறது. இனி மேல் தாமதிப்பதில் பயன் இல்லை. நான் காலையில் அரசனைச் சந்தித்து அவரிடம் சிறையைச் சுற்றிப் பார்க்க விசேஷ அனுமதி பெற்று, பிறகு சிறைச்சாலைக்குப் போக வேண்டுமாமே? இதெல்லாம் நடக்கிற காரியமா? என்னிடம் உள்ள பறக்கும் ஜமக்காளத்தை இந்தச் சமயத்தில்தான் உபயோகிக்க வேண்டும். அப்பொழுதுதான் அந்தக் காரியம் சுலபமாக முடியும். இதனால் எனக்குச் சிறைத் தண்டனை கிடைக்கலாம். ஆனால் அண்ணனைப் பார்த்து விட்டால் எந்தத் தண்டனையையும் சமாளித்து விடலாம். ஆபத்தில் காப்பது தைரியம்தான்' என்று தீர்மானம் செய்து கொண்டு கலா, பறக்கும் ஜமக்காளத்தை விரித்து அதில் உட்கார்ந்து ஜிவ்வென்று சிறைச்சாலையை நோக்கிப் பறந்து சென்றாள்.

சிறைச்சாலையின் பலமான பெரிய பாதுகாப்புச் சுவர்களைப் பறக்கும் ஜமக்காளத்தின் உதவியினால் கொஞ்சமும் சிரமப்படாமல் கடந்து சென்று சிறைச்சாலையின் உள்ளே இறங்கினாள் கலா. உயரத்தில் பறந்து சென்றபடியினால் கலாவைச் சிறைக் காவலாளர் யாரும் கவனிக்கவில்லை. சிறைச்சாலையின் உள் முற்றத்தில் இறங்கியதும் காவலாளர்கள் அவளைப் பார்த்தார்கள்.

"நீ யார்? எப்படி இங்கே வந்தாய்? கட்டுக் காவல்களைக் கடந்து சிறைச்சாலை உள்முற்றத்துக்கு உன்னால் எப்படி வர முடிந்தது? ஆகாயத்திலிருந்து வந்து குதித்தாயா?" என்று அதிசயத்துடன் கேட்டான் சிறைக் காவலரின் தலைவன்.

கலா அவனைக் கண்டதும் பயந்து விட்டாள். "நீங்கள் சொன்னது சரிதான். என்னிடமுள்ள பறக்கும் ஜமக்காளத்தின் உதவியினால் ஆகாயத்தில் பறந்து உள்ளே வந்தேன்" என்றாள்.

சிறைக் காவலன் இதைக் கேட்டு அயர்ந்து போய்விட்டான்.

"நானே இவளை அரசரிடம் கொண்டு போக வேண்டும். இவள் ஒரு பெரிய சதிக் கூட்டத்தைச் சேர்ந்தவளாகத் தோன்றுகிறாள். இவளை உடனே சிறையில் அடையுங்கள்!" என்று காவலரின் தலைவன் உத்தரவிட்டான்.

கலாவின் மறுமொழியைக் கேட்க அங்கு யாரும் தயாராயில்லை. அவளை உடனே தள்ளிக் கொண்டு போய்ச் சிறையில் அடைத்து விட்டார்கள். இரவு முழுவதும் கலா சிறைச்சாலையில் கண் கலங்கிய வண்ணம் இருந்தாள்.

*   *   *

மறுநாள் காலை பொழுது புலர்ந்ததும் அரண்மனைச் சேவகர்கள் வந்து கலாவை அரண்மனைக்கு அழைத்துச் சென்றார்கள்.

சபா மண்டபத்தில் அரசனும் ராணியும் சிங்காசனத்தில் வீற்றிருந்தார்கள். இருபுறமும் மந்திரிமார்களும் சேனாபதியும்





*ராமு :— நான் விளக்கெண்ணெய் சாப்பிடும் போதெல்லாம் என் அம்மா என் உண்டியலில் காசு போடுவாள்.........*

*கிட்டு :— அந்தப் பணத்தை யெல்லாம் கடைசியில் என்ன செய்வாள் ?*

*ராமு :— அந்தப் பணத்துக்கு மறுபடியும் விளக்கெண்ணெய் வாங்கி விடுவாள் !......*

---

மற்றும் பல உயர்தரத்து அதிகாரிகளும் அமர்ந்திருந்தனர்.

அரசனுக்கு முன்னல் கலாவைக் கொண்டு போய்க் குற்றவாளிகளை விசாரிக்கும் கூண்டில் நிறுத்தினார்கள். பாவம், கலா என்ன செய்வாள் ? அண்ணனைப் பிரிந்த துக்கம் அவளை வாட்டியது.

அவளைப் பார்த்ததும் அரசனுக்கு அவளிடம் ஒரு அனுதாபம் தோன்றியது. 'இத்தனை அழகான பெண் என்ன குற்றம் செய்தாளோ?' என்று வருந்தினன்.

அரசனது சார்பில் முதல் மந்திரி கலாவை விசாரிக்க ஆரம்பித்தார்.

"நான் சிறைச்சாலைக்குள் புகுந்தது தவறுதான். இந்த ஊர் மத்திய சிறையின் கௌரவப் பார்வையாளரைப் பார்த்து உத்தரவு கேட்டேன். அவர் தம்மால் அது இயலாது என்றார். நெடுநாட்களாக என் அண்ணனைப் பிரிந்து ஊர்ஊராக அலைந்து திரியும் எனக்கு ஒரு வேளை அவன் சிறைச்சாலையில் இருப்பானே என்று ஒரு சந்தேகம். இந்த ஊர்ச் சிறைச்சாலையைத் தவிர மற்ற இடங்களிலெல்லாம் அவனைத் தேடி விட்டேன். கௌரவச் சிறைப் பார்வையாளரைக் கேட்டதில், என் அண்ணன் சிறையில்தான் இருக்கிறன் என்பது தெரிய வந்தது. சிறைச்சாலையைப் பார்வையிட அரசரிடம் உத்தரவு பெறும்படி அவர் சொன்னர். நான் அரண்மனை வாசலுக்கு வந்து அரசரைப் பார்க்க முயன்றேன். காவலாளர்கள் அநுமதிக்க வில்லை. என் அண்ணனைப் பார்க்க வேண்டும் என்னும் ஆசையினுல் வேறு வழியில்லாமல் எனது பறக்கும் ஜமக்காளத்தின் உதவியினுல் சிறையில் புகுந்தேன் !"

இவ்விதம் கூறியதும் கலாவுக்குத் துக்கம் தாங்காமல் கண்ணீர் மள மள வென்று பெருகி வழிந்தது.

"கலா! உன்னைப் பார்த்தால் குற்றமற்றவளாகத் தெரிகிறது. இருந்தாலும் நீ உத்தரவில்லாமல் சிறைச்சாலையில் நுழைந்தபடியினுல் அரண்மனை அந்தப்புரத்தில் உன்னைப் பாதுகாப்பில் வைக்கும்படி உத்தரவிடுகிறேன். உன் அண்ணன் மால்கோஷைத் தேடிக் கண்டுபிடிக்க ஏற்பாடு செய்கிறேன்" என்று சொல்லி விட்டு அரசன் எழுந்து சென்றான். கலா உடனே அரண்மனை அந்தப்புரத்துக்கு அழைத்துச் செல்லப்பட்டாள்.

அரண்மனை அந்தப்புரத்தை யடுத்த நந்தவனத்தில் கலா அன்று உலாவிக் கொண்டிருந்தபோது அவளிடம் ஒரு ராஜகுமாரன் திடீரென்று வந்து நின்று, "கலா! என்னை உனக்கு நினைவில்லையா?" என்று கேட்டான்.

முதலில் கலா திகைத்தாள். சிறிது நேரத்துக் கெல்லாம் அவளுக்கு நினைவு வந்து விட்டது.

"நீங்கள் முன்பு மகாராணி நகரத்தில் மந்திரவாதி ஜிக்கின் வீட்டில் பூனையாக இருந்து ராஜகுமாரனுக மாறினீர்கள் இல்லையா? உங்கள் பெயர் ஜிலேந்திரன் தானே?" என்று மிகுந்த மகிழ்ச்சியுடன் கேட்டாள் கலா.

"ஆமாம், கலா! எனக்குப் பழைய உருவம் கொடுத்த உன்னையும் உன் அண்ணு மால்கோஷையும் நான் மறக்கவே மாட்டேன். நான் வேட்டைக்குப் போய் இன்றுதான் திரும்பினேன். நீ இங்கு வந்திருக்கும் விவரம் தெரிய வந்தது. சரி, நீ என்னுடன் வா. என் தகப்பனரிடம் உன்னைப் பற்றிச் சொல்கிறேன் !" என்று கூறி ஜிலேந்திரன் அவளை அரண்மனைக்கு அழைத்துச் சென்று அரசனைச் சந்தித்தான். அரசனிடமும் ராணியிடமும் மகாராணி நகரத்தில் நடந்ததை யெல்லாம் விவரமாகச் சொன்னன்.

அரசனும் ராணியும் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவேயில்லை. உடனே அரசன் கலாவுக்கு விதித்திருந்த பாதுகாப்பு விதிகளை அகற்றி விட்டான். பிறகு கலாவின் யோசனைப்படி மால்கோஷைக் கண்டுபிடிக்க ஒரு சங்கீத மகாநாடு கூடுவதற்கு ஏற்பாடு செய்ய உத்தரவிட்டான். (தொடரும்)

# தரத்திற்கும்
# உறுதிக்கும்
# நிகரற்றது

# ஹத்திபாயின்




## ஸ்டெயின்லெஸ் ஸ்டீல்
## பாத்திரங்கள்

எப்பொழுதும் பிரகாசத்துடன் நீடித்து உழைப்பவை

* *

## ஹத்திபாய் துளஸிதாஸ் & ஸன்ஸ்

122, கன்ஸரா சால், பம்பாய் 2.



# கான்ஸ்டபிள் கந்தசாமி

ஏ.கே.பட்டுசாமி

மூன்றும் அத்தியாயம்

## முதல் வழக்கு!

சின்னம்மாளிடம் பணத்தைப் பெற்றுக் கொண்ட முத்துப் புலவர், நேராக இந்திரா டாக்கீஸை நோக்கி நடந்தார். கொட்டகையருகில் வந்த போது அங்கு அதிக ஜனங்கள் இல்லை. பத்துப் பதினைந்து பேர்ர டிக்கட் வாங்குமிடத்தில் ஒழுங்காக வரிசையில் நின்று கொண்டிருந்தனர். அவரும் அவர்களுக்குப் பின்னால்போய் நின்றுகொண்டார்.

அப்போது டிக்கட் 'கவுண்டர்' திறக்கப் படவில்லை. கண்ணம்மாள் கொடுத்த இரண்டு ரூபாயையும் தமது கிழிசல் பர்ஸில் போட்டுச் சட்டைப் பையில் வைத்திருந்தார். கூட்டம் தான் அதிகமாக இல்லையே, ஜன்னலுக்கு அருகில் போய்ச் சேர்ந்தவுடன் சாவதானமாகப் பணத்தை எடுத்து டிக்கட் வாங்கிக் கொள்ளலாம் என்று நினைத்தார்.

தியேட்டர் வாசலில் காணப்பட்ட பெரிய விளம்பரம் அவரது கவனத்தைக் கவர்ந்தது. 'லுங்கி' உடுத்திய வசீகரத் தோற்றமுள்ள ஒரு பர்மா அழகி ஒய்யாரக் குடையொன்றைப் பிடித்துக் கொண்டு ஒயிலாக நிற்பது போல் தீட்டப்பட்டிருந்த வர்ணச் சித்திரம் ஒரு ஆள் உயரத்துக்கு நிறுத்தப் பட்டிருந்தது. அதனருகில் 'பர்மா ராணி' என்று பெரிய பெரிய எழுத்துக்களில் எழுதப்பட்டிருப்பதைக் கண்டதும் அவரது உள்ளம் மகிழ்ச்சியினால் நிரம்பியது. என்றும் மறக்க முடியாத அவரது பர்மா வாழ்க்கை நினைவுக்கு வந்தது. எங்கு திரும்பினாலும் பச்சைப் பசேலென்று காட்சியளிக்கும் செழுமையான நாடு; அவர் வேலை பார்த்த தமிழ்ப் பள்ளிக்கூடம்; நாட்டுக் கோட்டைச் செட்டிமார்கள்; அவரது புலமைக்குக் கிடைத்த பாராட்டுக்கள் ஆகியவை ஒன்றன்மேலொன்றாக மனக்கண்முன்தோன்றின. பழனியப்பச் செட்டியார் என்ற தனிகர் மீது சிலேடையாக அவர் இயற்றிய கவிதையொன்றைச் சிரமப்பட்டு நினைவுக்குக் கொண்டுவர

சாமா

முயன்றார். என்ன முயன்றும் 'உலகும் உன் தலையும்' என்ற இரண்டே இரண்டு வார்த்தைகளுக்கு மேல் ஞாபகத்துக்கு வரவில்லை. முதலிரண்டு சொற்களையும் திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டேயிருந்தால் மற்ற வரிகள் தாமாக நினைவுக்கு வந்து விடும் என்ற எண்ணத்துடன், விடாமல் ''உலகும் உன் தலையும், உலகும் உன் தலையும்'' என்று முணுமுணுத்துக் கொண்டே யிருந்தார். தமக்குப் பின்னால் எண்ணிறந்த ஜனங்கள் 'க்யூ' வரிசையில் வந்து நின்று விட்டதையோ, மற்றவர்கள் அவரை ஒரு தினுசாகப் பார்ப்பதையோ அவர் கவனிக்கவேயில்லை.

திடீரென்று டிக்கட் ஜன்னல் திறக்கப்பட்டதும் அது வரையில் ஒழுங்காக நின்று கொண்டிருந்தவர்கள் அத்தனைபேரும் தாறுமாறாகக் கலைந்து, தாங்கள் மனிதர்கள் என்பதையே மறந்து ஒரேயடியாக முன்னுக்குத் தாவினர். கூட்டம் அவரை இடித்து முன்னால் தள்ளுவதற்கும் மறந்து போன கவிதையின் முதல் வரி முழுமையும் அவரது நினைவுக்கு வருவதற்கும் சரியாக இருந்தது.

''உலகும் உன் தலையும் உருண்டை வடிவமையா!...'' என்று வாய்விட்டுக் கூறியவர் 'லபக்' கென்று முன்னால் உந்தப்பட்டதும் கற்பனை உலகை விட்டு இப்பூவுலகுக்கு வந்தார். நெரிசலில் அவரது மூச்சுத் திணறியது. இனிமேல் பணத்தைக் கையில் எடுத்துக் கொண்டு விடவேண்டியது தான் என்று சட்டைப் பையில் கையைவிட்டார். பை காலியாக இருந்தது! பர்ஸ் பறிபோய் விட்டது என்று தெரிந்ததும் அவரது ரத்தம் உறைந்து விடும்போலாகி விட்டது. என்ன செய்கிறோமென்று தெரியாமல் குழந்தையைப் போல் 'கா கூ' என்று விசித்திரமான குரலொலிகளைக்கிளப்பி அரற்றத் தொடங்கினார். ''என்ன, என்ன?'' என்று மற்றவர்கள் கேட்ட பிறகு தான், ''பர்ஸ் போய்விட்டது!'' என்று கூற முடிந்தது.



* * *

சுந்தசாமி உத்தியோகத்தில் சேர்ந்து சுமார் ஒரு மாத காலமாகியது. முதல் நாளே அவன் மந்தாரப்பேட்டை பாங்கிக் கொள்ளை விஷயமாக விசாரித்துத் தெரிந்து கொண்டான். ஆயுதம் தாங்கிய ஒரு கொள்ளைக் கூட்டத்தினர் நள்ளிரவில் திடீரென்று மோட்டார் காரில் வந்தனர்; காவல்காரர்களைக் கட்டிப் போட்டுக் கதவை எப்படியோ திறந்து கொள்ளையடித்துக் கொண்டு வந்த சுவடு தெரியாமல் ஓடி விட்டனர் என்பதை யறிந்ததும் அவனுக்கு அளவற்ற ஆச்சரியமாக இருந்தது.

அவன் சாலையூரிலிருந்து வந்த அன்றைக்குத் தான் ஜட்கா வண்டிக்காரனிடம் எங்கேயோ பாங்கிக் கொள்ளை நடந்ததாகவும், தன்னந் தனியாக அவன் கொள்ளைக்காரர்களைக் கைது செய்து விட்டதாயும் பொய்ப் பெருமை அடித்துக் கொண்டான். சென்னையில் கால் வைத்ததும் வைக்காததுமாக உண்மையிலேயே ஒரு பாங்கிக் கொள்ளை அவனது பேட்டையிலேயே, அவனை வரவேற்கத் தயாராய்க் காத்துக் கொண்டிருந்தது!

இன்ஸ்பெக்டர் அளகிரிசாமி நாயுடு ஒருமாத காலமாக மண்டையை உடைத்துக் கொண்டு என்னென்னவோ செய்து பார்க்கிறார். ஆனால் உருப்படியாக அவரால் ஒன்றுமே செய்ய முடியவில்லை. அவனது கற்பனை மட்டும் உண்மையாக மாறினால்!.... இன்ஸ்பெக்டர் அவனுக்குத் தகுந்த வாய்ப்பளித்து, அந்தக் கொள்ளைக் கூட்டம் அவன் கையில் வகையாகச் சிக்கிக் கொண்டால்!....

அவனது கற்பனை மேலும் மேலும் உயரத் தாவியது. அவனைப் போலீஸில் சேர்த்து விட்டவர் எழும்



பூர் ஹெட் கான்ஸ்டபின் ராமசாமி தான். ராமசாமி அண்ணன் பழம் பெருச்சாளி. அவர் கந்தசாமிக்கு எவ்வளவோ சொல்லியிருக்கிறார்.

''கந்தசாமி! நீ மட்டும் ஒழுங்காக நடந்துகொண்டு சில முக்கியமான சந்தர்ப்பங்களில் உனது சாமர்த்தியத்தைக் காண்பித்து விட்டாயானால் உத்தியோகத்திலே மளமள வென்று உயர்வு ஏற்பட்டு விடும். வெறும் கான்ஸ்டபிளாக இருந்தவன் ஹெட்கான்ஸ்டபின்! பிறகு இன்ஸ்பெக்டர் வேலைக்குக்கூட உயர்வதற்கு வழி இருக்கிறது'' என்று அவர் கூறிய வார்த்தைகள் அவனது நினைவுக்கு வந்தன.

அன்று மாலை 'இந்திரா டாக்கீஸ்' பக்கம் அவனுக்கும் கான்ஸ்டபின் முருகேசனுக்கும் 'டியூடி' போடப்பட்டிருந்தது. தியேட்டரில் டிக்கட்டு வாங்கும் ஜனங்களைக் கண்காணித்துக் கொள்ள வேண்டியது அவனது பொறுப்பு. சுமார் ஐந்து மணிக்கெல்லாம் கந்தசாமி சினிமாக் கொட்டகைக் கெதிரே 'லத்தி' யுடன் ரோட்டில் குறுக்கும்நெடுக்குமாக உலாவிக் கொண்டிருந்தான். அடிக்கொரு முறை தன் 'பாக்கெட்' கடிகாரத்தைத் தொட்டுத் தொட்டுப் பார்த்துக் கொண்டு ஒய்யாரமாக நடந்தான்.

அது மிக அழகான கடிகாரம். முத்தம்மாவின் புருஷனுக்கு ஒரு துரை பரிசாகக் கொடுத்த அக் கடிகாரத்தை அவன் தன் உயிரைப் போல் மதித்துக் காப்பாற்றி வந்தான். தினந்தோறும் அதற்குச் சாவி கொடுப்பதும் அவன்தான். கந்தசாமி அதைத் தொட்டால் அவனுக்கு மூக்குக்குமேல் கோபம் வந்துவிடும். ஆனால் அவன் போலீஸ் உத்தியோகஸ்தனாக மாறிவிட்ட பிறகு அதை அவனுக்குக் கொடுப்பதில் அவனுக்கு யாதொரு ஆட்சேபணையும் இருக்கவில்லை.

சங்கிலி இல்லாமையால் அதைஒரு



நூல் கயிற்றில் கட்டிப் பார்வையாக வெளிப்புறத்து ஜேபியில் விட்டு வைத்திருந்தான். அவன் கடியாரம் வைத்திருந்ததைக் கண்டு ஸ்டேஷனிலிருந்த அத்தனை கான்ஸ்டபிள்களுக்கும் வயிற்றெரிச்சல்தான். ஏட்டு (ஹெட்கான்ஸ்டபிள்) கோவிந்தப் பிள்ளை கூடப் பொறாமைக்கண்ணோடு அவனைப் பார்த்ததாகத் தோன்றியது அவனுக்கு.

அவனது கடிகாரத்தில் மணி ஐந்தரையானபோது டிக்கட் வாங்கும் இடத்தில் ஜனக் கூட்டம் நெருக்கி அடித்துக் கொண்டிருந்தது.

என்ன ஜனங்கள்! காட்டுமிராண்டிகளைப் போலக் கத்துவதும் 'க்யூ'வில் கூட நிற்கத் தெரியாமல் ஒருவரையொருவர் இடிப்பதும்; அந்தச் சமயத்தில் அத்தனை ஜனங்களும் அவனது பாதுகாப்பில் அல்லவா இருந்தார்கள்! அவன் விரும்பியிருந்தால் அவர்கள் மீது இலேசாக ஒரு 'லத்தி சார்ஜ்' கூடப் பண்ணிவிட முடியும்!

'லத்தி சார்ஜ்' என்று நினைத்ததும் கூடவே அவனுக்குத் தங்கவேலுவைப் பற்றிய நினைவு வந்தது. அந்த அயோக்கியன் மட்டும் இதைப் போன்ற சமயத்தில் அகப்பட்டுக்கொண்டானென்றால் கட்டுக் கடங்காத கூட்டத்தின் மீது 'லத்தி சார்ஜ்' செய்கிற சாக்கில் அவனைச் செம்மையாகப் புடைத்து விடலாம். மிஞ்சி ஏதாவது தகராறு பண்ணினானென்றால் அவனது கிராப்பு மயிரைக் கையினால் அப்படியே பிடித்து ஸ்டேஷனுக்குக் கரகரவென்று இழுத்துக் கொண்டு போய்......

இதுபோல அவன் மனத்தில் நினைத்துத் தங்கவேலுவின் சிகையைக் கையில் பிடித்து இழுத்துக் கொண்டு போவது போல் இடது கையை உயர்த்தி முஷ்டி பிடித்து அபிநயம் நடத்திக் கொண்டிருக்கையில் டிக்கட் கொடுக்குமிடத்தில் பரபரப்பு ஏற்பட்டது.

"ஐயையோ! பர்ஸ் போச்சு! பர்ஸ் போச்சு! அடிச்சுட்டான்; பணப்பை போச்சு!" என்று ஒருவர் கூக்குரலிடவும் அதைத் தொடர்ந்து "பிக்பாக்கெட்! பிக்பாக்கெட்!" என்ற பல குரல்கள் எழுந்து ஒரே அல்லோலகல்லோலமாகப் போய் விட்டது.

கந்தசாமி வீராவேசமாகக் கூட்டத்தில் பாய்ந்தான். கூட்டம் அவனை நெருக்கியடித்தது. எவன் திருடினாலென்ன, யாருடைய பணம் போனாலென்ன என்று தன்னலத்திலேயே குறியாக இருந்த ஜனங்கள் அவன் மீது விழுந்து அலைமோதுவது போல் டிக்கட் 'கவுண்டரை' நோக்கித் தாவினர்.



கந்தசாமிக்கு எரிச்சலாக இருந்தது. போலீஸ்காரன் என்று துளிக்கூடப் பயமில்லாமல் சர்வசாதாரணமாக நினைத்து அவனைக்கூட அல்லவா நசுக்குகிறார்கள்! அவனுக்கு வந்த கோபத்தில் கைத்தடியால் அவர்களது தலைகளைப் பதம் பார்த்து விடலாமா என்று கூடத் தோன்றியது. ஆனால் திருடனைப் பிடிக்க வேண்டுமே! முதல் முதலாகக் கிடைக்கப் போகும் வழக்கை ஆத்திரத்தினால் கெடுத்துக்கொண்டு விடலாமா?

அவன் தீரத்துடன் முழங்கைகளால் இடித்துத் தள்ளிக் கொண்டு அந்த ஜன சமுத்திரத்தின் நடுவே புகுந்தான். டிக்கட் கொடுக்கும் ஜன்னலருகே திரு திருவென்று விழித்துக் கொண்டு நின்றிருந்த ஒரு ஆசாமியின் மீது அவனது பார்வை விழுந்தது. 'லபக்' கென்று அவனைப் பிடித்து இழுத்துக் கொண்டு சிங்கம்போல் வெற்றியோடு வெளியே வந்தான் கந்தசாமி.

முன்புறம் வழுக்கையோடிய தலையும் கிழிசல் சட்டையுமாகக் காட்சியளித்த அம்மனிதன் கந்தசாமியின் இரும்புப் பிடியில் சிக்கித் திணறினான்.

பிளாட்பாரத்தின் ஓரமாக அவனை இழுத்துக் கொண்டு போனதும் அவர்களைச் சுற்றிக் கூட்டம் கூடி விட்டது. இத்தனை ஜனங்களுக்கு முன்னால் திருடனைப் பிடித்த விட்டோமென்ற மகிழ்ச்சியில் கந்தசாமி அம்முதியவனைப் பிடித்து ஒரு உலுக்கு உலுக்கி அவனது சட்டைப் பையைத் துழாவினான். ஒரே ஒரு துண்டு சுருட்டைத் தவிர அதில் ஒன்றுமே இல்லாததைக்கண்டு அவனுக்குக் கட்டுக் கடங்காமல் ஆத்திரம் வந்தது.

"ஏ கிழவா!" என்று அதட்டல் போடவும் கிழவன் பயத்தால் நடுங்கிப் போய், "ஊ! ஊ!" என்று அர்த்தமில்லாமல் ஊளையிடத் தொடங்கினன்.

"ஏய்! சும்மா பாசாங்கு பண்ணினல் விட்டு விடுவாங்கன்னு நினைச்சியா! ஹூம், உன்னைப் போல எத்தனை திருடர்களை இந்தக் கையாலே பிடிச்சிருக்கேன்!" என்று உற்சாகத்தோடு கர்ஜித்தான் அவன்.

"என் பணப் பையைத்தான் யாரோ அடிச்சுட்டாங்கையா!" என்று குழறிக் கொண்டே கூறினன் கிழவன்.

சுற்றிலும் இருந்தவர்கள் கலீரென்று நகைத்தனர். சில சோம்பேறிகள் சீழ்க்கை யடித்தனர். எவனே ஒருவன் "சரியான சூரனையா! இப்படியல்ல திருடனைப் பிடிக்க வேணும்!" என்று கூறிக்கொண்டே நகர்ந்தான்.

கந்தசாமிக்கு அவமானமும் ஆத்திரமும் போட்டி போட்டுக் கொண்டு பொங்கின. அந்த விவேக மற்றஜனங்களை அப்படியே



நொறுக்கிவிட வேண்டும் போலிருந்தது. "போங்கையா! இங்கே என்ன கூட்டம் போடுகிறீங்க! போ அப்பாலே!" என்று அவன் அதட்டவும் அவர்கள் மூலைக்கு ஒருவராகப் பிய்த்துக் கொண்டு ஓடி விட்டனர்.

இப்போது அவனது கோபம், இத்தனைக்கும் காரணமாக இருந்த அந்தக் கிழவன் மீது பாய்ந்தது.

"ஏய் கிழட்டுப் பயலே! நிசத்தைச் சொல்லு! உன்னுடைய பர்ஸா திருட்டுப் போச்சு?"

"ஆமாமய்யா!..."

"யார் திருடினது?"

"அதுதானே தெரியவில்லை!"

"என்னய்யா அதிசயமாக இருக்குது! உன் சட்டைப் பையிலே கையைவிட்டு 'அபேஸ்' பண்ணுகிற வரைக்கும் சும்மா ஆடு கணக்கா இருந்து விட்டு இப்ப வந்து போலீஸ்காரன் கழுத்தை அறுக்கிறயே! இதோ பார், இந்தத் தடவை உன்னை மன்னிச்சேன்! இனிமேல் இது மாதிரி அஜாக்கிரதையாக இருந்தே, அப்புறம் அவ்வளவுதான்! தொலைஞ்சு போ!" என்றுன் கந்தசாமி.

ஆனல் அந்தப் பிரகிருதி நகரவில்லை. தயங்கிக் கொண்டே, "என் பணப் பை....." என்று இழுத்தான்.

கந்தசாமிக்கு அவனது அதிகப் பிரசங்கித்தனத்தைக் கண்டு ரோஷம் பொத்துக் கொண்டு வந்தது. அவனது கழுத்தில் கையைக் கொடுத்துத் தள்ளிக் கொண்டே, "வா ஸ்டேஷனுக்கு! நீ பர்ஸைத் தொலைக்கவில்லை! என்கிட்ட அளக்காதே! உன் முகத்தைப் பார்த்தாலே தெரியுது நீ பக்காத்திருடனென்று......" என்று உறுமினன்.

கிழவன் பரிதாபமாக அலறினன். ஜனங்கள் தூரத்திலிருந்து இன்னும் வேடிக்கை பார்த்துக் கொண்டு நின்றனர். தவிரவும் தூரத்தில் கான்ஸ்டபின் முருகேசன் வேறு அவனை நோக்கி வந்துகொண்டிருந்தான். ஆகவே விஷயம் விரசமாவதற்குள் சட்டைப் பையிலிருந்து தனது குறிப்புப் புத்தகத்தையும் பென்ஸிலையும் கையில் எடுத்துக் கொண்டான்.

"ஏய்! உன்னுடைய பெயரென்ன?"

"முத்துப் பிள்ளை."

"விலாசம்?"

"14, காளிங்கராயன் தெருவு."

"சரி, இப்போதே ஓடிப் போ! இனிமேல் இந்தப் பக்கம் திரும்பிப் பார்க்காதே!" என்றுன் அதட்டலாக.

முத்துப் புலவர் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு பித்தம் பிடித்தவர் போல் திரும்பி நடந்தார்.

அதற்குள் அங்கு வந்து சேர்ந்த முருகேசன், "என்ன கந்தசாமி, என்ன கூட்டம்?" என்றுன்.

"சும்மா இந்த பிக்பாக்கெட் களுதைங்க 'கலாட்டா' பண்ணிச்சு! பிடிச்சு ரெண்டு குடுத்து 'வார்னிங்' பண்ணி அனுப்பினேன்!" என்று சிரித்துக் கொண்டே சாமர்த்தியமாகப் பதிலளித்தான் கந்தசாமி.

"போகட்டும், கந்தசாமி! உன் கடிகாரத்திலே மணி என்ன ஆச்சு?"

கந்தசாமி கடிகாரத்தை எடுக்க நூல் கயிற்றை இழுத்தான். கயிறு மாத்திரம் வந்தது. கடிகாரம் வரவில்லை. சட்டைப்

பையைத் தடவிப்பார்த்தான். அவனுக்குப் பகீரென்றது.

சுமார் பத்து நிமிஷங்களுக்கு முன்னால் அந்தப்புரத்து ராணியைப் போல் சட்டைப்பையில் அலங்காரமாக வீற்றிருந்த அருமைக் கடிகாரம் அங்கே இல்லை......! போலீஸ்காரனிடத்தில் பிக்பாக்கெட்டா!

முருகேசன் விஷயத்தைப் புரிந்து கொண்டவன் போல் சிரித்தான்.

கந்தசாமியின் முகம் கறுத்து விட்டது.



புலவர் மெதுவாகச் சாலையோரமாக நடந்தார். அந்தப் போலீஸ்காரன் அவரது கழுத்தில் கையை வைத்து மரியாதைக் குறைவாகப் பேசி இம்சித்த துக்கத்தைக் கூட அவர் பொருட்படுத்தவில்லை. ஆனால் கண்ணம்மாளுக்கு என்ன பதில் சொல்லுவது? நடந்த விஷயத்தைக் கூறினால் நம்புவாளா அவள்?.. அவரை உயிரோடு வதைத்து விடமாட்டாளா!....

யாராவது இரண்டு ரூபாய் கடன் கொடுத்தார்களானால் விஷயத்தை வெளியே சொல்லாமல் ஓடிப்போய் டிக்கட்டை வாங்கிவிடலாம். ஆனால் அவரை நம்பி இரண்டணாக் காசு கொடுப்பவர்கள் கூட இல்லை என்றால் இரண்டு ரூபாய்க்கு எங்கே போவது? நினைத்த போது அவருக்குப் பணம் கிடைக்க இது என்ன பர்மா நாடா?....

பர்மா என்ற ஞாபகம் வந்ததும் கூடவே அவரது புலமையின் நினைவும் அதைத் தொடர்ந்து அவர் வெளியிட்ட புலமை மிக்க புத்தகங்களின் நினைவும் வந்தன. அவருக்குப் பளிச் சென்று ஒரு மார்க்கம் தோன்றியது.

எத்தனையோ புத்தகக் கடைகளில் அவரது கவிதைப்புத்தகங்களைப் போட்டு வைத்திருந்தார் அவர். நூற்றுக் கணக்கான பிரதிகள் வருடக் கணக்காக அக் கடைகளில் தூங்கிக் கொண்டிருந்தன. ஆனால் ஒருவராவது இதுவரையில் அவருக்கு ஒரு செல்லாக் காசுகூடக் கொடுத்ததில்லை. இத்தகைய ஒரு இக்கட்டான சந்தர்ப்பத்தில் அவர்களில் யாராவது ஒருவரை உதவி கேட்டால்?..

அடுத்த வீதியிலிருந்த 'பரதேசி நூலகம்' அவரது மனக்கண் முன் தோன்றியது. விடுவிடென்று நடந்தார்.

அந்தச் சிறிய புத்தகக் கடையின் சொந்தக்காரர் பரோபகாரம் பிள்ளை ஒரு சிறிய முக்காலியின் மீது உட்கார்ந்து, யாராவது புத்தகம் வாங்க வருகிறார்களா என்று தெருவில் போகிறவர்களையெல்லாம் ஆவலோடு பார்த்துக் கொண்டிருந்தார். புலவருக்கு நம்பிக்கை பிறந்தது. முன்புறத்திலிருந்த கண்ணாடி அலமாரியில் 'அல்லி அரசாணிமாலை' 'தேசிங்கு ராஜன்' 'மதனகாம ராஜன்'— இந்தப் புத்தகங்களுக்கு நடுவே தமது சொந்த சிருஷ்டிகளான 'பஞ்சத்து ஆண்டியும்' 'பர்மாப் பரதேசி'யும் கம்பீரமாக வீற்றிருந்ததைக் கண்டு பெருமிதமடைந்தார் முத்துப் புலவர்.

கடையை நோக்கி யாரோ வருவதைக் கண்டதும், ஏதோ 'கிராக்கி'தான் வருகிறது என்று மகிழ்ச்சியோடு பற்களைக் காட்டி 'வாங்க வாங்க' என்று வரவேற்ற பரோபகாரம் பிள்ளை முத்துப் புலவரைப் பார்த்ததும் நீண்ட பெருமூச்சு விட்டார்.

புலவர் இங்கிதம் தெரிந்தவர். மனிதனைப் பார்த்ததுமே வெட்டு ஒன்று துண்டு இரண்டாகப் 'பணத்தை எடு!' என்பது தமிழ்ப் பண்புக்கே முரணானது என்று அவர் அறிவார். ஆகவே முதலில் ஒரு கூழைக் கும்பிடு போட்டு விட்டு முகத்தில் சிரமப்பட்டுப் புன்னகையை வரவழைத்துக் கொண்டு, "என்ன பரோபகாரம் பிள்ளைவாள், நலம் தானே?...." என்று அவரிடம் மெதுவாகக் குசலம் விசாரித்தார்.

சில மாதங்களாகத் தம் கடைப் பக்கமே தலை காட்டாமலிருந்த புலவர் திடீரென்று அன்று தோன்றியதும் பரோபகாரம் பிள்ளைக்கு ஓரளவு ஆச்சரியமாகக் கூட இருந்தது. "அட, இருக்கீங்....களா....! நான் வேறு மாதிரி நினைச்சுட்டேன்" என்றார்.

அதன் உட்பொருளை உணர்ந்து கொள்ள மாட்டாத முத்துப் பிள்ளை, "பின்னே, நான் மீண்டும் பர்மாவுக்குப் போய் விட்டதாக நினைத்தீர்களா?" என்று கேட்டார். அவர் முகத்தில் ஏதோ விவரம் தெரியாத சந்தேகப் பார்வை தோன்றியது. (தொடரும்)



# தேக ஆரோக்யத்திற்கு இன்றியமையாதது!

ஔஷத குணம் நிறைந்த சால்மூக்ரா தைலம் கலந்து தயாரிக்கப்படும் **காவேரி** சூபர் சோப் ஒரு உன்னத ஸ்குண சோப். கையடக்கமான ஸைஸ். எப்பொழுதும் நீங்கள் கேட்டு வாங்கவேண்டிய சோப் **காவேரி** சூபர் சோப்.

## காவேரி
## சூபர் சோப்




தயாரிப்பு:

மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன் லிட்.
மேட்டூர் அணை — சேலம் ஜில்லா

மானேஜிங் ஏஜெண்ட்ஸ்: சேஷசாயி பிரதர்ஸ் பிரைவேட் லிட்.

MC-389

## உங்கள் வீட்டைச் சுற்றிப் பாருங்கள்

தரை சுத்தமாக இருக்கிறதா? சில மணி நேரங்களுக்கு முன்புதான் அது சுத்தம் செய்யப்பட்டது. திரைச் சீலைகள் அழுக்கடைந்திருக்கின்றனவா? நேற்றுதான் அவை சலவையாகி வந்தன. பூக்கள் புதியனவா? ஆம் ஆனால் அவை இருக்கும் அந்தத் தாமிரப் பூத் தொட்டி—அது எப்பொழுது பிராஸோவினால் பாலிஷ் செய்யப்பட்டது? உங்கள் வீட்டில் வைப்பதற்குத் தகுந்த தாமிர, பித்தளை சாமான்கள் எவையேனும் இருந்தால் அவை பிராஸோவினால் பாலிஷ் செய்யப்பட்டு பளபளப்பாகவும் சுத்தமாகவும் இருப்பது அவசியம். எப்பொழுதேனும் ஒருதடவை செய்யப்பட்டல்ல— முறை தவறாமல்.

## பிராஸோ
### மெட்டல் பாலிஷ்

உங்கள் வீட்டிற்குப் பிரகாசத்தைக் கொண்டு வருகிறது



அட்லான்டிக் (ஈஸ்ட்) லிமிடெட் (இங்கிலாந்தில் இணைக்கப்பெற்றது)

# படித்துப் பாருங்கள்

## குடும்ப வைத்தியம்

நோய் வந்தால் டாக்டரைத் தேடிக் கொண்டுபோவது என்பது இப்பொழுதெல்லாம் சர்வ சாதாரணமாகி விட்டது.

அன்னிய ஆட்சியினால் நமக்கு ஏற்பட்ட இன்னல்கள் எத்தனை எத்தனையோ. அவற்றுள், நம் நாட்டில் தொன்றுதொட்டுக் குடும்பங்களில் கைப்பழக்கமாக வந்து கொண்டிருந்த வைத்திய முறைகளை நாம் அடியோடு புறக்கணிக்கத் தொடங்கியது நமக்கு ஏற்பட்ட பெரிய துர்ப்பாக்கியமாகும். சாதாரணமாக ஏற்படும் தலைவலி, ஜலதோஷம், இருமல், சொறி, சிரங்கு முதலிய சிறிய நோய்களுக்குக் கூட நாம் டாக்டரை எதிர்பார்க்கிறோம்.

இந்த நூலில், வைத்திய நிபுணரான "குச்சா மாமா" அவர்கள் எண்ணற்ற நோய்களுக்குச் சுலபமான சிகிச்சைகளைக் கூறியிருக்கிறார். கதைப் புத்தகம் மாதிரி ஒரு முறை படித்து விட்டு அபிப்பிராயம் சொல்லக் கூடிய நூலாயிருந்தால் சுலபமாக எழுதி விடலாம். இந்நூல் ஒவ்வொரு குடும்பத்திலும், குறிப்பாக, ஒவ்வொரு தாயாரிடமும் இருக்க வேண்டிய இன்றியமையாத நூல். எல்லோரும் வீட்டிலேயே சுலபமாகத் தயார் செய்து கொள்ளக் கூடிய மருந்து முறைகளாகக் குறிப்பிட்டிருப்பது மிகவும் பாராட்டுக்குரியது.

வியாதிக்குத் தகுந்த சிகிச்சைகளும், ஆரோக்கியத்தைக் காப்பாற்றிக் கொள்ளும் வழிகளும், நோய் வராமல் தடுத்துக் கொள்ளும் வழிகளும் தெளிவாக இந்நூலில் கூறப்பட்டிருக்கின்றன.

எழுதியவர்: "குச்சா மாமா;" பிரசுரம்: "சுதேசமித்திரன்" புத்தகசாலை, மௌண்ட் ரோடு, சென்னை—2; விலை: ரூ. 3-50.

## முருகவேள் பன்னிருதிருமுறை (தொகுதி 6)

திணிகைமணி வ. சு. செங்கல்வராயப் பிள்ளையவர்கள் நீண்ட காலமாகத் திருப்புகழை ஆராய்ந்து உரை எழுதிவருகிறார். இது வரையில் திருப்புகழ் 5 தொகுதிகள் பிள்ளையவர்கள் விரிவுரையுடன் சிறப்பாக வெளி வந்து விட்டன. இப்பொழுது ஆறாந் தொகுதி வெளி வந்திருக்கிறது.

அருணகிரிநாதர் அருளிச் செய்த கந்தரலங்காரம், கந்தரனுபூதி, கந்தரந்தாதி, திருவகுப்பு, மயில் விருத்தம், வேல் விருத்தம் ஆகிய அருமையான நூல்களுக்கு ஆராய்ச்சி பூர்வமான உரைகள் அடங்கியிருக்கின்றன.

பன்னூற் புலமை வாய்ந்த பெரியாராகிய திருவாளர் பிள்ளையவர்கள் மேற்படி பக்தியும் ஞானமும் கொண்ட அரும் பெரும் நூல்களுக்குத் தமிழ் வளம் ததும்பும் உரைகளை வழங்கியிருக்கிறார்.

எல்லா உரை நூல்களிலும் இல்லாத ஒரு விசேஷப் பகுதி இந்நூலில் குறிப்பிடத் தகுந்த முறையில் சேர்க்கப்பட்டிருக்கிறது. சுருக்க உரை, பொழிப்புரை, குறிப்புரை, செய்யுள் ஆராய்ச்சி ஆகியவைகளுடன் மிகவும் உபயோகப்படக் கூடிய சொல்லகராதி ஒன்று சேர்க்கப்பட்டிருப்பதையே குறிப்பிடுகிறோம்.

நல்ல தாளில், நல்ல முறையில் தயாரித்து வெளியிடப்பட்டிருக்கும் இந்நூல் எல்லா நூல் நிலையங்களையும் அணி செய்யும் தகைமை வாய்ந்தது.

பதிப்பாளர்: மீனாக்ஷி கல்யாண சுந்தரம், நெ. 2. இரண்டாவது தெரு, வடக்கு கோபாலபுரம், சென்னை-6. விலை: ரூ. 10-50.

## பேச்சுக் கலை

ஆயகலைகள் அறுபத்து நான்கு என்று முன்னோர் வரையறுத்திருக்கின்றனர். அவற்றுள் பேச்சுக் கலை என்பது ஒரு உபகலைதான். ஆயினும், மிக மிகச் சக்தி வாய்ந்தது. மேடையில் பேசுவதற்கு அனேகமாக யாருக்குமே இதய அடித்தளத்தில் ஒரு ஆசை குடிகொண்டிருக்கும். ஆனால் துணிந்து மேடையேறினால் அந்த ஆர்வம் துளிகூட உதவி செய்யாது.

பேச்சுக் கலையில் உள்ள சிரமங்களை யெல்லாம் இந்நூல் விரிவாகக் கூறுவதோடு, அவற்றை எப்படி வென்று அக்கலையில் முன்னேறுவது என்பதையும் தெளிவாகப் பல உதாரணங்களுடன் விளக்குகிறது. மேடைப் பேச்சில் ஆர்வமுள்ளவர்கள் இந்நூலினால் பெரிதும் பயனடைவார்கள்.

திருவாளர்கள் கே.வி. வீரராகவன், அன்புப் பழம் நீ இருவரும் இப்புத்தகத்தை நல்ல முறையில் ஆக்கித் தந்திருக்கிறார்கள்.

கிடைக்குமிடம்: தமிழ்ப் புத்தகாலயம், திருவல்லிக்கேணி, சென்னை - 5.

## மெசபட்டோமியா

பண்டைய கால இலக்கிய அல்லது சரித்திர ஆராய்ச்சியில் யாராவது மும்முரமாக இறங்கினால், அந்த ஆராய்ச்சி அத்தகையோரை அதிசயமான ஒரு புது உலகத்துக்கு இட்டுச் சென்று விடுகிறது. அதன்மூலம், யாரும் கனவிலும் நினைக்காத பல உண்மைகள் வெளியாகின்றன. எழுத்து உலகில் பிரசித்தி பெற்றவரும் வெளிநாடுகளில் பிரயாணம் செய்தவருமான கிருஷ்ண சைதன்யர் எழுதிய "மெசபட்டோமியா" என்ற நூல் அவ்வகையைச் சேர்ந்ததுதான். மேற்படி நூலை மு. வீரபாகு தமிழில் மொழி பெயர்த்துத் தந்துள்ளார். இந்த நூலில் மெசபட்டோமியாவின் இலக்கிய வரலாறு அடங்கியிருக்கிறது. இது மேற்கு ஆசியாவைச் சேர்ந்த சுமேரிய, பாபிலோனிய, அசீரிய நாகரிகங்கள் பற்றியது. உலகத்தில் உள்ள பல்வேறு நாகரிகங்களையும் பற்றிய இலக்கிய வரலாறுகளை விவரிக்கும் நூல்களை இந்திய மொழிகளில் தொடர்ச்சியாக வெளியிட இந்நூலின் ஆசிரியர் தீர்மானித்துள்ளார். அந்த வரிசைத் தொடரில் "மெசபட்டோமியா" முதலாவது புத்தகமாகும்.

கிடைக்குமிடம்: அருணா பப்ளிகேஷன்ஸ், தியாகராயநகரம், சென்னை-17 விலை: ரூ. 2.

# தெற்கத்தி வண்டி

சூாலடிச் சத்தம் கேட்டுத் திரும்பினேன்; பக்கத்துக் கூடாரத்திலிருந்து என் நண்பர் ஜமேதார் அனவரதம் பிள்ளை வந்திருந்தார்.

''இன்றைக்குச் சாயங்காலம் 'பரேட்' இருக்கிறது; உங்களுக்குத் தெரியுமல்லவா?'' என்றார் அவர்.

''தெரியும். அறிவிப்புப் பலகையில் பார்த்தேன். என்ன, இடையோதெல்லாம் அதிகக் கெடுபிடியா யிருக்கிறதே!'' என்றேன்.

உத்தரவு பெற்றுக் கொண்டு, 'காம்'பை விட்டு அப்போதுதான் வெளியே நகருக்குள் போய்த் திரும்பியிருந்தேன். ராணுவ உடைகளையே எப்போதும் அணிந்து பழக்கப்பட்டிருந்த நான், அந்தச் சாதாரண உடையை—சாதாரண ஒரு நாலு முழம் வேஷ்டியையும், —ஷர்ட்டையும்—அவசியத்தின் போது அணிந்து கொண்டால் அவைகளை இலேசில் கழற்ற மாட்டேன். அன்றைக்கும் அப்படித் தான் கண்ணாடியின் முன்னால் நின்று கொண்டு சாதாரண உடையில் விளங்கிக் கொண்டிருந்த என்னையே பார்த்துத் திருப்திப்பட்டுக் கொண்டிருந்தேன்.

அனவரதம் பிள்ளை மௌனமாக என்னைக் கொஞ்ச நேரம் பார்த்துக் கொண்டிருந்து விட்டு, ''கெடுபிடி தான். ஏதோ யுத்த பீதி குறைந்து சமாதான அறிகுறி ஏற்பட்டு விட்டாற்போல் நினைத்துக் கொண்டு நீங்கள் மன்னார்குடி வேஷ்டியும், லாங்க்ளாத் ஷர்ட்டும் போட்டுக் கொண்டு, ஜலந்தரில் எங்கே இட்டிலி — காப்பி கிடைக்கிறது என்று தேட்டை போடப் போய் விடுகிறீர்கள். ஆனால், ஹிட்லருக்குத் தூக்கம் வருகிறதா? எங்கே தலைவலியை உண்டு பண்ணலாம் என்று பார்க்கிறான். தலைமைக் காரியாலயத்திலிருந்து நமக்கு முன்னெச்சரிக்கைகள் வந்துகொண்டே யிருக்கின்றன. அதன் வரிசைக் கிரமமான அம்சம்தான் இந்த அதிகப்படி 'பரே'டெல்லாம்!'' என்றார். யுத்தப் பிரசாரகர் போல நீண்டதொரு பிரசங்கமே பண்ணி விட்டார்.

அவர்தான் இந்த ராணுவ அணிவகுப்பை யெல்லாம் நடத்தி வைப்பவர். ''இதோ உங்கள் ஒரு கடிதம்; இதைப் பெற்றுக் கொண்டதற்குச் சாயங்காலம் 'பரே'டுக்கு வரும்போது ரிஜிஸ்தரில் கையெழுத்துப் போட்டு விட்டுப் போங்கள்!'' என்று ஒரு கடிதத்தையும் கொடுத்துவிட்டு அவர் போய் விட்டார்.

சாவி கொடுத்த குழந்தைகள் மோட்டார் மாதிரி என் உடலெல்லாம் விறுவிறுப்பு ஏறியது. மனம் கடிதத்தையே விழுங்கி விடுவதற்குத் துடித்தது. அதை வாங்கிப் படித்தேன்.

அது ஒரு மிக நீண்ட கடிதம். பகிரங்கமாய் எழுதக் கூடிய என் உள்ளத்தை உலுக்க அமைந்த வரிகளை மட்டும் எழுதுகிறேன்.

''......என்னை நீங்கள் ஏமாற்றிவிட்டு ராணுவத்தில் சேர்ந்து விட்டீர்களா, அல்லது வேறு வழியின்றி அப்படிச் செய்திருக்கிறீர்களா என்பதை என்னால் கண்டு பிடிக்க முடியவில்லை. ஆனால், கல்யாணமாகி ஆறே மாதங்களுக்குள் ஒருவர் தம் மனைவியை [illegible] சொல்ல முடியாத காலத்துக்குப் பிரிந்திருக்கத் துணிந்து ராணுவத்தில் சேர்ந்திருக்கிறீர் என்று

வை. சுப்பிரமணியன்

யாரிடமுமே எனக்குச் சொல்லத் தோன்றவில்லை. ஏனெனில், யாரும் இதை நம்ப மாட்டார்கள். நம்புகிறவர்கள் என்னை ஏதோ ஒரு விபரீதக் கண் கொண்டு பார்ப்பார்கள். நீங்கள் திரும்பி வருவதற்கு இடையில் உள்ள நாட்களை, நம் வீட்டில் புஷ்பிக்கும் ரோஜாக்களில் தினம் ஒன்று வீதம் எடுத்துக் காமாட்சி அம்மனுக்கு நேரே கொண்டு சாத்தி வருவதன் மூலம் எண்ணி வருகிறேன். இந்தச் செடியின் ஆயுட்காலத்துக்குள் காமாட்சி அம்மன் உங்களை என்னிடம் கொண்டு வந்து சேர்த்து விடுவாள் என்று நம்புகிறேன்.........

தங்கள்,

கமலி.''

★

கமலி என் மனக் கண்முன் தெரிந்தாள். இந்தக் கடிதத்தை எழுதியபோது அவள் எப்படியிருப்பாளோ, தெரியாது. அவள் ஒரு புகைப்படம் கூட எடுத்து அனுப்பவில்லை. ஆனால், மணக்கோலத்தில் நான் கண்ட கமலி—அதற்குப் பிறகு ஆறு மாதங்களில் நாலைந்து மாதங்கள் சந்தித்திருக்கிற கமலிதான்—என் மனக் கண்முன்னால் வந்தாள்: பசுவைப் போன்ற சாதுத்தன்மை; கபடமில்லாத வெள்ளை உள்ளத்தை எதிரொலித்த அழகிய திருமுகம்.

அவள் கடிதத்தில் கேட்டிருப்பதெல்லாம் நியாயமானதுதான். ஆனால், அவள் சந்தேகப்படுவது அவளை ஏமாற்றியோ வஞ்சித்தோ நான் ராணுவத்தில் சேரவில்லை. பார்க்கப்போனால் நான்தான் ஏமாந்துவிட்டேன் என்று சொல்லலாம். எனக்குக் கல்யாணமான சமயம் நான் பார்த்து வந்த உத்தியோகம் ஏதோ தாற்காலிகமாகத்தான் இருந்தது. கல்யாணமான சில மாதங்களுக்கெல்லாம் எனக்கு வேலை போய்விட்டது. வேலை போய்விட்டால் இந்த உலகத்தில் எனக்கு எல்லாமே—ஆம்; எனக்குக் கிடைத்திருந்த இளம் மனைவி கமலிகூட—என்னை விட்டுப் போய்விட்ட மாதிரி இருந்தது. வேலையில்லாத வெட்டி ஆளான நான் எப்படி என் மனைவியின் முகத்திலும் வேட்டகத்தினர் முகங்களிலும் விழிக்க முடியும் என்று பயந்து போய் விட்டேன்.

அந்தச் சமயத்தில்தான் ராணுவ உத்தியோகங்கள் எல்லாரையும் விருந்து வைத்து அழைத்தன. 'ஸெமி மிலிடரி' என்று எதையோ பற்றிக் கேள்விப்பட்டு, எங்கோ போய்ப் பெயரைப் பதிவு செய்து கொண்டு சேர்ந்து விட்டேன். சென்னை, திருச்சி போன்ற இடங்களை விட்டு வடதேசம் எங்கும் என்னை மாற்ற மாட்டார்கள் என்று நினைத்திருந்தேன். ஆனால், நான் ஒப்பந்தம் செய்து கொண்டு கையெழுத்திட்டு மேற்கொண்டிருந்தது முழுவதும் ராணுவ உத்தியோகம் தான், அரைகுறை ராணுவமெல்லாம் அல்ல என்று பிறகுதான் தெரிந்தது.

பொன்மலையில் மூன்று மாதம் பயிற்சியளித்த பிறகு நேரே என்னை ஜலந்தருக்கு அனுப்பி விட்டார்கள்: முதலில் கொஞ்ச நாட்கள் ராணுவ உத்தியோகம் 'குஷி'யாகத்தான் இருந்தது. நெய்யில் பொரித்த சப்பாத்திகளும், உருளைக் கிழங்கும் ருசியாகத்தான் இருந்தன. விடுமுறை நாட்களில் 'ஸிவில்' உடை அணிந்து ஜலந்தர் நகருக்குள் சென்று உல்லாசமாகச் சுற்றிப் பொழுதைப் போக்குவேன் — குறைந்தது பத்துப் பேராவது சேராமல் எங்கும் போக மாட்டோம்.

ஜலந்தர் நகரத்துப் பெண்கள் வீதிகளை அலங்கரித்தாற்போல் செல்லும் காட்சி கொள்ளை கொள்வதாயிருக்கும்: தெரு ஓரங்களில் பல வண்ணங்களில் கூடை கூடையாய்க் குப்பல் குப்பலாகக் கொட்டிக் கிடக்கும் பலவகைப் பழங்கள், பல வண்ண மலர்கள், தெருவிலே போட்டு ஏலம் விடப்படும் வர்ண மயமான பகட்டுப் பட்டுத் துணிகள் இவற்றின் பின்னணியில் அந்த ஸ்திரீகளின் தோற்றம் ரம்மியமாகத்தான் இருந்தது. அவர்களைப் பார்க்கும்போதெல்லாம் எனக்கு என் கமலியின் ஞாபகம் வரும். அவளும் கொள்ளை அழகாய்த்தான் இருந்தாள். திருவாரூர் அம்மனின் அருளையும் அவளது திருநாமத்தையும் பெற்று அந்த ஊரிலேயே ஒரு தெருவில் அவள் இருந்தாள். இப்போதும் அவள் அங்கே தான் இருக்கிறாள்.

எனக்குக் கமலியைப் பார்க்க வேண்டும் என்ற எண்ணம் ஏற்பட்டு விட்டது. என்னை எங்கள் ஊர்ப் பைத்தியம் பிடித்துக் கொண்டு விட்டது. விடுமுறை வாங்கிக் கொண்டு ஊருக்குப் போய் விட்டு வரலாம் எனில் எனக்கு விடுமுறை கிடைக்காது. முன்பு கிடைத்ததைப் பயன்படுத்திக் கொண்டு உடம்பு சரியில்லாமல் படுக்கையில் படுத்து விட்டேன். இனிமேல் அடுத்த வருஷம்தான் லீவு கிடைக்கும்.

கொஞ்ச காலமாகவே எனக்கு ராணுவ வாழ்க்கை கசந்து போயிருந்தது. துப்பாக்கி பிடித்தும், பீரங்கி வெடித்தும் யுத்த களத்திலேயே போய் நின்று தொழில் புரிய வேண்டிய அவசியம் எனக்கு இல்லை. ஆனால், நான் பார்த்து வந்ததும் ராணுவத்தின் ஒரு அம்சமான வேலைதான். 'காம்ப்' இறங்குகிற இடங்களில் மலைப் பகுதிகளிலும் காடுகளிலும் 'ஸர்வே' எடுக்கிற வேலையைச் செய்து வந்தேன் நான். 'ராயல் இஞ்ஜினீயரிங்' என்ற தொகுதியில் ஜமேதாருக்குச் சரியான



அந்தஸ்து எனக்கு அளிக்கப்பட்டிருந்தது: முந்நூறு ரூபாய் சம்பளம். இருநூறு ரூபாயை எனது கம்பெனிக் காரியாலயமே என் பெற்றோருக்கு மாதாமாதம் அனுப்பி விடும்படி நான் பத்திரம் எழுதிக் கொடுத்திருந்தேன். கமலிக்கு மாதம் இருபது முப்பது ரூபாய் அனுப்பி வருவேன்.

பணமில்லாத் தொல்லையும், உத்தியோகமில்லாத குறையும் தீர்ந்தன. ஆனால், மனத்தில் ஒரு புதிய சுமை ஏறி நிற்கிறதே. என்ன செய்வது? கமலியின் கடிதத்தைக் கண்டதும் என் சிந்தனை புதிய பாதைகளில் செல்ல இடம் தேடியது.

'காம்'பின் பல பகுதிகளிலிருந்து அடிக்கடி முழங்கும் அந்த ஊதுகுழலின் விகாரமான ஒலி காதில் விழுந்தது. இரவுச் சாப்பாட்டுக்காக ஏற்பாடாகிக் கொண்டிருந்ததை வெகு சமீபத்தில் இருந்த சமையல் அறை அறிவித்தது. முள்ளங்கி, வெங்காயம், முட்டைக்கோசு இவை மூன்றும் வெந்து ஒன்றுடன் ஒன்று உறவாடும் மணம் என்றும் நிரந்தரமான மணம். சமையலில்அவை ஒன்று கூடச் சேராத அன்றும்கூட இந்த மணம் மூக்கை விட்டுப் போகாது. இது எனக்கு முதலில் பிடித்தமணம்; இப்போது அலுக்கும் நாற்றம்!

எழுந்து கண்ணாடியில் பார்த்துக் கொண்டேன். வேஷ்டியிலும் சட்டையிலும் என் தோற்றம் எனக்குத் திருப்தியை அளித்தது. கொடியில் அடுக்காக, கனத்துத் தொங்கிய காக்கி உடைகள் ராணுவத்தின் சின்னங்களாக நின்று கசப்பை ஞாபகமூட்டின. பள்ளிக்கூடத்துக்குப் போவதற்கு 'மக்கர்' செய்யும் பையனுக்குத் தன் பள்ளிக்கூட உடுப்புகளையெல்லாம் கண்டால் எப்படியிருக்கும்?

கமலியின் கடிதத்தைச் சட்டைப் பையில் வைத்துக் கொண்டு வெளியில் கிளம்பினேன். அன்று மாலை நடக்க வேண்டிய 'பரேட்' நேரம் வரை வெளியில் செல்ல உத்தரவு பெற்றிருந்தேன். நகருக்குள் சென்று சீக்கிரமே திரும்பி விட்டேனாதலால், இப்போது மறுபடியும் கிளம்பினேன். அந்தக் கடிதம் என்னை எதுவும் குறிப்பு இல்லாமல் வேலைகளைச் செய்யத் தூண்டியது. ஆனால், சிந்தையில் கமலியையே முக்கிய லட்சியமாக அந்தக் கடிதம் தான் செய்திருக்கிறது.

ஜலந்தர் நகரில் தமிழர்கள் வசிக்கும் பகுதி என்று எதுவும் அப்போது ஏற்படவில்லை. தமிழர்களைப் பார்க்க வேண்டுமானால் ரயில்வே நிலையத்துக்குச் சென்றால் போதும். வருகிற ரயில்களிலும் போகிற ரயில்களிலும் கட்டாயமாகச் சிலரையாவது சந்திக்கலாம். ஸ்டேஷனுக்கு வெளியிலிருந்த ஹோட்டலில் தேநீர் அருந்தி விட்டு, ஒரு பிளாட்பாரம் டிக்கட் பெற்றுக் கொண்டு பிளாட்பாரத்தினுள் நுழைந்தேன்.

தெற்கே போகிற ரயில் ஒன்றில் இரண்டாவது வகுப்பில் ஜன்னலருகில் ஒரு தம்பதிகள் உட்கார்ந்திருந்தனர். அவர்கள் தமிழ்நாட்



டுத் தம்பதிகள்! அந்த யுவன் என்னைப் போல் ராணுவக் கட்டுப்பாட்டுடன் 'காம்'பைச் சுற்றிக் கொண்டு அலைய வேண்டியவன் அல்ல. நான் கமலியைக் கண்காணாத் தூரத்தில் விட்டுவிட்டு இன்னும் சற்று நேரத்தில் 'ரைட்! லெப்ட்!' என்ற சொற்களுக்கு உடலை ஆட்டி அசைக்கப் போகிறேனே, அப்படிச் செய்ய வேண்டியவன் அல்ல. மான் போல், பசுங்கிளி போல், தோகை விரித்த மயில் போல் தனக்குக் கிடைத்திருக்கிற தன் இளம் மனைவியின் பக்கலில் அவன் உட்கார்ந்திருக்கிறான். அவன் எங்கே போகிறானோ, எங்கிருந்து வருகிறானோ... எப்படி யிருந்தால் என்ன? அவள் பக்கத்தில் இருக்கும்போது இமய மலைக்கும் செல்லலாம்; கன்னிக் குமரியைக் காணவும் போகலாம்.

எனக்கு என் கிராமத்தின் ஞாபகம் வந்தது: கமலி இன்னும் அந்தக் கிராமத்தில் காலடி எடுத்து வைக்கக்கூட இல்லை. அந்த ஊரின் அழகு...மாபெரும் தலங்களில் உள்ள வான் முட்டும் கோபுரங்களைப் போல இல்லா விட்டாலும், சின்னதாய், அழகாய், வண்ணக் கலசங்கள் மின்ன அந்தக் கோபுரம் கம்பீரமாகத் தான் இருக்கிறது. சாயங்கால பூஜையை அறிவிக்கும் கண்டா மணி ஒலிக்கிறது. நந்தவனத்திலிருந்து வரும் வாசனை...அது என்ன மயக்கம் தரும் வாசனையோ!

"அம்பி! என்ன யோசனை? இந்தா குங்குமப் பிரசாதம், கல்யாணம் ஆகி மனைவியை அழைத்துக் கொண்டு வந்து இங்கே அம்பாள் தரிசனம்கூடப் பண்ணி வைக்கவில்லை நீ! நாங்கள் எல்லாம் அவளைப் பார்க்கப் படாது, திருஷ்டி பட்டுவிடும் என்று நினைப்பு போலிருக்கிறது. இந்தக் குங்குமப் பிரசாதத்தையாவது 'அவ'ளுக்கு அனுப்பு. சகல சௌபாக்கியங்களும் உண்டாகும்!" என்கிறார் குருக்கள் சோமசுந்தரம்.

வயல்களில் இடை கட்டியிருந்த மாடுகளின் கழுத்திலிருந்த மணியோசை...... வயல்களிடையே பாயும் மடைகளின் சலசலப்பு... அந்தச் சின்னக் கோபுரத்தின் நடுக் கலசத்தில் நேர் உயரத்தில் வட்டமாய்த் தோன்றிய முழு நிலவு... நிலா வெளியில் தென்னந் தோப்பில் சிலம்பம் ஆடிப் பயிலும் வாலிபர்கள்...வீதிகள்தோறும் நிலாச் சாப்பாடு சாப்பிடும் சிறுவர்களும் பெரியவர்களும......

'காம்'பிலிருந்த ராணுவச் சின்னம் முழங்கியது. குளிர் நடுக்கி எடுத்தது. திடீரென்று நான் கனவிலிருந்து விழித்து எழுந்தேன். என் எதிரில் இருந்த 'தெற்கத்தி ரயில்' போயிருந்தது. அந்தத் தமிழ்நாட்டுத் தம்பதிகளும் போய் விட்டார்கள்.

எனக்குத் திடீரென்று ரயிலைத் தவற விட்டு விட்ட ஒரு ஏமாற்ற உணர்ச்சி உண்டாயிற்று. 'ஐயோ, இனிமேல் நாளை இந்த நேரத்துக்குத் தானே ரயில்!... நாளைக்கும் தொடர்ந்து ரயில் இருக்கத்தான் இருக்கிறது. நான் ஏறிப் போக முடியுமா?

கமலியின் கடிதத்தை எடுத்து இன்னொரு தடவை படிக்க முயன்றேன். ராணுவச் சட்டம் இருட்டடிக்க ரயில்வே ஸ்டேஷனில் தன் ஆட்சியை மௌனமாக அநுஷ்டித்துக் கொண்டிருந்தது. ஒரு விளக்குக் கம்பத்தின் அடியில் கடிதத்தைப் பிரித்துக் கண்ணுக்கு அருகில் பிடித்துக் கொண்டு பார்த்தேன். "என்னைவிட்டுச் சொல்ல முடியாத காலத்துக்குப் பிரிந்திருக்க..." கமலியின் கருத்தை வளைத்துப் பிடித்துக் கொணர்ந்திருக்கிற அந்த வார்த்தைகளுக்கு இருக்கிற சக்தி இத்தனை திடகாத்திரனாயிருக்கிற எனக்குக் கூட இல்லையே...

★

உடல் முழுதும் வலி எடுத்துப் படுத்துக் கொண்டிருந்தேன். ராணுவப் 'பரேடு'க்கு மட்டும் என் உடல் வாகு இணைகிறதில்லை. அந்த அம்சத்தைக் கண்டாலே எனக்கு வெறுப்பு. தண்டனைக் களத்துக்குப் போய்த் திரும்புகிற மாதிரி தான். ஸர்வே எடுத்துப் பிளான் தயாரிக்கிற எனக்கு டிரில் என்ன வேண்டியிருக்கிறது! அதுதான் ராணுவத்தின் மகத்துவம்! கமலியைப் பிரிந்திருக்கிறதற்குத் தண்டனை கூடத்தானோ என்னவோ?..

ஜமேதார் அனவரதம் பிள்ளை உள்ளே நுழைந்தார். உடல் வலியைப் பற்றிச் சொன்னேன். எனக்கு அவர் உற்ற நண்பர்கூட.

"நமக்கு வேண்டியவராயிருந்தும் இப்படி என் உயிரை எடுக்கிறீரே, பிள்ளைவாள்! இது தருமமா?" என்றேன் அவரைப் பார்த்து.

## கதை, கட்டுரை, கவிதை அனுப்புவோருக்கு

1. நமது பத்திரிகைக்கு அனுப்பப்படும் கதைகள் எழுதியவரின் சொந்தக் கற்பனையாக இருக்க வேண்டும்.

2. நல்ல காகிதத்தில் இடைவீடுகள் விட்டு ஒரே பக்கத்தில் எழுத வேண்டும். காகிதத்தின் மறுபக்கத்தில் எழுதக் கூடாது.

3. தேர்ந்தெடுக்கப்படாத கதை, கட்டுரை, கவிதைகளைத் திரும்பப்பெற விரும்புவோர் அவற்றுடனேயே போதிய தபால் பில்லைகள் வைத்து அனுப்ப வேண்டும். தபால் பில்லைகள் வைத்து அனுப்பாதவற்றைத் திருப்பியனுப்புவதற்கில்லை.

4. கதை, கட்டுரை, கவிதை சம்பந்தமாக எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்வதற்கில்லை.

ஆசிரியர், கல்கி.

அவருடைய பதில், எதற்குமே ஒரே ஒரு புன்னகைதான்.

''உம்மை ஒரு காரியமாக நாளைக்கு டவுனுக்கு அனுப்பலாம் என்றிருக்கிறேன். நீர் கட்டிலில் காலை நீட்டிக் கிடக்கிறீரே!''

''என்ன, சொல்லுங்கள். இன்றிரவு சரியாகப் போய் விடாதா, பார்க்கலாம்.'' எனக்குச் சிறு குழந்தைக்கு வருவதுபோல் சந்தோஷமே ஏற்பட்டது. காக்கிச் சட்டைக்குப் பதில் வெள்ளைச் சட்டை போட்டு ஆனந்தமாக டவுனைச் சுற்றி வரலாம். நல்ல சூழ்நிலையில் கமலியைப் பற்றிக் கற்பனைகள் பண்ணலாம். தெற்கே போகும் வண்டியை நாளைக்கும் பார்க்கலாம்......

அந்தக் கணத்தில் எனக்கு ஒரு எண்ணம் பளிச்சிட்டது. அது நல்ல எண்ணமா ?

''சாமான்கள் வாங்க வேண்டும்; நமக்கு வழக்கமாகப் பொருள்கள் வாங்குகிற குமாஸ்தா இன்றைக்கு அஸ்ஸாமுக்குப் போகிற முன்னணிப் படையில் போகிறார்...''

நான் துள்ளி எழுந்தேன். ''நமது காம்ப் கூட அஸ்ஸாமுக்குப் போக நேருமா?'' என்று கேட்டேன்.

''இல்லா விட்டால் முன்னணிப் படை எதற்காகப் போகிறதாம்? அடுத்த வாரம் நாம் கிளம்ப நேரிடலாம்.''

''சரி; சாமான்கள் பட்டியல் கொண்டு வாருங்கள். இரண்டுநாள் அவகாசம் கொடுப்பீர்கள் அல்லவா ?''



''இரண்டு நாள் என்ன! ஜலந்தர் நகரை நாலு நாட்கள் சுற்றிப் பாரும், ஐயா! அந்த உத்தரவு என்னுடைய அதிகாரத்தில்தான் இருக்கிறது.''

மறுநாள் காலை ஒரு லாரியுடன் கிளம்பினேன். ஒரு ஹோட்டலில் ஒரு அறையை வாடகைக்கு எடுத்துக் கொண்டு லாரி டிரைவரை இரண்டு நாட்கள் ஊரைச் சுற்றிவிட்டு வரச் சொன்னேன்.

நான் தெற்கத்தி வண்டியில் ஊருக்குப் புறப்பட்டுவிடத் தீர்மானித்து விட்டேன்! என்னைச் சாமான்களுடன் இன்னும் நாலு நாட்கள் கழித்துத்தானே எதிர்பார்க்கப் போகிறார்கள்? அதற்குள் நான் கமலியைச் சந்தித்து விடுவேன். என்னை எந்தக் கணமும் எதிர்பார்ப்பவள் அவள்.

நான் ஊருக்குப் போனால் திரும்பிவர முடியாது. திரும்பி வந்தால் எனக்குச் சிறைதான் இருப்பிடமாக அமையும். அவர்கள் என்னைத் தேடிக் கண்டு பிடிக்கும்போது பார்த்துக் கொள்ளலாம்......

சென்னை சென்டிரல் ஸ்டேஷனுக்கு ஒரு டிக்கட் வாங்கிக்கொண்டு பிளாட்பாரத்துக்குள் நுழைந்தேன். தெற்கே போகிற வண்டி இன்னும் வரவில்லை. வண்டி வருவதற்கு அரைமணி நேரம் இருந்தது.

திடீரென்று ஒரு செய்தி ஸ்டேஷனில் பரவியது.

''எதிரிகள் ஜப்பானில் குண்டு வீசி நாசம் செய்த இருபத்து நாலாவது மணி நேரத்தில் இந்தியாவை இலக்காகக் கொண்டு தாக்க முற்படலாம்!''

''சென்னையில்தான் முதன் முதலில் குண்டு போடுவான்.''

''இல்லை; இலங்கையின் பக்கமிருந்து தான் வருவான்!''

''கல்கத்தாவைப் பிடிப்பான், ஐயா!''

ஹிந்தியிலும் ஆங்கிலத்திலும் சம்பாஷணை பிளந்தது.

'கமலி!' என்று என் இதயம் பதறியது; கமலி குண்டுக்கு இரையாகி விடுவாளோ...... ஏன் இந்த ரயில் இன்னும் வரவில்லை......?

என்னுள் திடீரென்று இன்னொரு உணர்வு பிறந்தது.

'நான் ராணுவத்தினன். எதிரிகளை அடக்கி வெற்றியை நிலைநாட்ட ஆயிரக்கணக்கானவர்களில் ஒருவனாகப் பிரமாணம் செய்து கொடுத்துவிட்டு வந்தவன். கடமையை மீறி-சத்தியத்தை மீறி-தப்பி ஓடினால் நான் கமலியைக் காப்பாற்றியவன் ஆகமாட்டேன். அவளை உண்மையில் காப்பாற்ற வேண்டுமானால் - என் அன்பை ஆதர்சத்தோடு காண வேண்டுமானால் - நான் திரும்பிப் போக வேண்டும்.. கமலியைப் போல் ஆயிரமாயிரம் உயிர்களைக் காக்கப் பிரதிக்ஞை எடுத்துக் கொண்டு கடமை புரியக் காத்திருந்த ஆயிரக்கணக்கான ராணுவத்தினருடன் நானும் வீறு கொண்டு இணைய வேண்டும்!''

என் அந்தராத்மா பேசிய பின் நான் என் கையில் இருந்த சென்னை டிக்கட்டைக் கிழித்துப் போட்டு விட்டு ஸ்டேஷனிலிருந்து வெளியேறி நடந்தேன்.

# நாட்டு வைத்தியம்

ஸ்ரீ ஹரி

## 42. ரத்தவாதம்—சீத ஸ்நிக்தம்

ரத்தவாதம் - ஆம வாதம் இரண்டுக்கும் உள்ள வித்தியாசங்களைத் தெளிவு படுத்தியாயிற்று.

ரத்தவாதத்தில் வீக்கமுள்ள ஸந்திகள் நிருநிருவென்று சிவப்பு நிறத்துடன் இருக்கும்; வீக்கமும் அதிகமாயிருக்கும். தொட்டால் தொட முடியாத சூடும் எரிச்சலும் தெறிப்பும் சகிக்க முடியாமலும் இருக்கும். அதிகமான ஜ்வரம்... இந்த ஜ்வரம் இருந்திருந்து அதிகரிப்பதும், அப்படி அதிகரிக்கும் போதெல்லாம் புதுப் புது ஸந்திகளில் வீக்கம் ஏற்படுவதும் - அல்லது வீக்கமுள்ள இடத்தில் அவ்வீக்கம் அதிகரிப்பதுமாயிருக்கும். இப்படி ஓடி ஓடி, தாவித்தாவிப் பரவும் இயல்புபெற்றிருப்பதால் இதைப் பறக்கும் கீல்வாயு (Flying Rheumatism) என்று அழைப்பது வழக்கமாயிற்று.

இனிப்புச் சுவையுள்ள திரவியங்கள் முக்கியமாகவும் கசப்புச் சுவையுள்ளவை அடுத்தபடியாகவும் துவர்ப்புச் சுவையுள்ளவை சிறிதளவும் இந்நோயில் உள்ளுக்குச் சாப்பிடத் தக்கவையாகும். தண்மை-சீதம்-என்னும் வீர்யம் பெற்றவைதான் இந்நோயைக் குணப்படுத்தக் கூடியவை.

ஒற்றை மருந்தா - (ஏகமூலிகாப் பிரயோகமா)கக் கொடுக்கக்கூடிய மிகவும் சிறந்த பொருள் சீந்தில் கொடி.

மிகவும் முற்றிப் போனதும் உதவாது-மிகவும் இளசானதும் பயனளிக்காது. நடுத்தரமான சீந்தில் கொடியை - முறுக்கினால் - மேலேயுள்ள மெல்லிய தோல் பிரியும். இதைக் களைந்துவிட்டு எஞ்சியதைச் சிறு துண்டுகளாக நறுக்கி-கல்லுரலில் இட்டு மர உலக்கைபால் இடித்து நசுக்கிக் கொள்ள வேண்டும். தேவையானால் சிறிது ஜலம் தெளித்து மேலும் இடித்துப் பிழிந்தெடுக்கலாம். அந்த ரஸத்தில் ½ - 1 அவுன்ஸ் வீதம் தினம் 2 - 3 வேளை உள்ளுக்குக் கொடுக்க ஜ்வரமும் தணியும்; பறந்து பறந்து பரவுவதும் குறையும். சீந்தில் கொடியை மேற்சொன்ன விதம் இடித்த பிறகு ஜலம் விட்டுக் கஷாயமாகக் காய்ச்சி ஆறின பிறகு மருந்தைக் கசக்கிப்பிழிந்து களைந்து, கஷாயத்தை வடிகட்டி 1 - 2 அவுன்ஸ் வீதம் தினம் 2 - 3 வேளை கொடுக்கவும் செய்யலாம்.

2. சீந்தில் கொடி, செம்மரம், வேம்பன் [தோல்நீக்கிய] ஈருகு, தனியா, செஞ்சந்தனம் இவற்றின் கஷாயத்தையும் உள்ளுக்குக் கொடுக்கலாம்.

மருந்துகளைச் சம எடையில் எடுத்துப் பெருந்தூளாக இடித்த சூரணத்தில் 4 தோலா எடுத்துக் கொள்ளவும். இதில் 32 அவுன்ஸ் ஜலம் விட்டு 4 அவுன்ஸ் வீதம் தினம் 2-4 வேளை கொடுக்கவும்.

3. மலபந்தம் இந்நோயில் இருக்காது. இருந்தாலும் இல்லாவிட்டாலும் ஒன்றிரண்டு தரமாவது நன்றாக வெளிக்குப் போக வசதி செய்வது அவசியம்.

இதற்கு திராக்ஷாதி கஷாயம் மிகவும் சிறந்தது. பொறுக்கி எடுத்த ஸாரத்து நிலாவாரையின் இலை 1 பங்கு. ஆய்ந்தெடுத்த ரோஜா மொக்கின் தளம் 4 பங்கு...கழுவிச் சுத்தமாக்கி, உலர்த்திக் காம்பு களைந்த திராக்ஷை 8 பங்கு. இவற்றை நன்றாய்க் கசக்கிப் பிசைந்து டப்பியில் எடுத்து வைத்துக்கொள்ளவும்.

இதில் 1 பலம் மருந்தை ஒரு சட்டியில் இட்டு, கொதிக்கும் ஜலம் 1 தம்ளர் [8-10 அவுன்ஸ்] விட்டு ஓரிரவு மூடி வைக்கவும். மறுநாள் காலையில் புகை இல்லாத சிறு தீயில் கொதிக்க வைத்து 6-8 அவுன்ஸாகச் சுண்டியதும் இறக்கி ஆறின பிறகு மருந்துகளை நன்றாய்க் கசக்கிப் பிழிந்து களைந்து விட்டுக் கஷாயத்தை வடிகட்டி ஒரே வேளையாகக் குடிக்கவும். இதனால் சிரமமின்றி 1-2 தரம்வெளிக்குப் போகும். முதல் நாளைய அனுபவத்தையொட்டி மறுநாள் முதல் மருந்தைக் கூட்டியோ குறைத்தோ கஷாயம் வைத்துக் கொள்ளவும். ஒன்று அல்லது இரண்டு முறைக்குமேல் வெளிக்குப் போக வேண்டியதில்லை.

ஆரோக்கியமுள்ளவரும் இதைச் சாப்பிடலாம். சிறுவர் பெரியவர் எல்லோரும் இதைச் சாப்பிடலாம். அதிகமாகப் பேதியாகி வீண் களைப்பைக் கொண்டுவருமோ என்ற பயம் வேண்டியதில்லை. ஒருகால் பேதியே ஆகாவிட்டாலோ? அப்படி ஆகா விட்டாலும் தோஷமில்லை. ஒன்றிரண்டு முறை அதிகப்படியாகச் சிறு நீர் கழியும். மறுநாள் மருந்தைக் கொஞ்சம் அதிகம் கூட்டிக் கொண்டால் போதுமே.

இப்படி ஒரு நல்ல முறையானதால், இதைப் பற்றி அடிக்கடி சொல்ல நேரிடும். ஆகவே இந்தத் திராக்ஷாதி கஷாயத்தை வாசகர்கள் கவனத்தில் வைத்திருத்தல் அவசியம்.

4. 'பிண்டதைலம்' என்னும் மருந்தை வீக்கமுள்ள இடங்களின் மேல் தடவி ஊற விடுவது மிகவும் நல்லது. அல்லது ஒரு சிறு சீலையை இத்தைலத்தில் நனைத்துச் சொட்டச் சொட்டத் தைலமிருக்கும்போது அச்சீலையை [பிசுவாக] வீக்கமுள்ள இடத்தின் மேலே இட்டு வைக்கவும்.

குறிப்பு:—பிசு விட்ட சிறிது நேரத்துக்கெல்லாம் வீக்கத்தின் மேலேயுள்ள சூடு இச்சீலையில் ஏறும். பிசு விட்டவுடனே மிகவும் சுகமெனத் தோன்றும். ஆனால் அவ்விடமுள்ள சூடு இப்பிசுச் சீலைக்கு ஏறியதும் பழைய குருடி என எரிச்சல், வலி, தெறிப்பு ஆகியவை ஏற்படும். ஆகவே இப்பிசுச் சீலையை அடிக்கடி மாற்றி, மறுபடியும் மறுபடியும் மேற்படி தைலத்தில் நனைந்து வீக்கமுள்ள இடத்தில் இடவும். அல்லது இப்பிண்ட தைலத்தினால் வீக்கமுள்ள இடத்தில் தாரை விடலாம்.

தாரை என்பதாவது:—ஒரு தட்டு அல்லது வாயகன்ற கிண்ணத்தில் பிண்ட தைலத்தை எடுத்துக் கொள்வது. சிறிது பஞ்சை அந்த எண்ணெயில் முக்கி எடுத்தோ அல்லது தைலத்தை ஒரு ஸ்பூனில் எடுத்தோ வீக்கமுள்ள இடத்தின் மேல் வார்க்கவும். வார்த்துக் கொண்டே இருக்கவும். வீக்கமுள்ள ஸந்தியின் மேலெல்லாம் தைலம் பரவி முழுக்காட்டித்தானகவே கீழே ஒழுகும். அவ்வாறு ஒழுகும் தைலத்தை மேற்சொன்ன தட்டு அல்லது கிண்ணத்தில் ஏந்திக்கொண்டே ஸ்பூனல் எண்ணெயை மொண்டு மொண்டு ஊற்றிக்கொண்டே இருக்க வேண்டும். இவ்வாறு செய்வதற்குத்தான் [தாரையாக எண்ணெயைக் குறிப்பிட்ட பிரதேசத்தில் மட்டும் விடுவதால்] ப்ராதேசிகதாரா என்று பெயர். இதனல் வீக்கமுள்ள இடத்திலுள்ள சூடு உடனே தணிந்து விடும். வீக்கமுற்ற இடத்தை முழுக்காட்டிய பிறகு ஒழுகும் எண்ணெயைத் தொட்டுப் பார்த்தால் சூடு பிடித்திருப்பதை அறியலாம். சூடு குறையவே எரிச்சலும் தெறிப்பு வலியும் குறையும். அவசியமானல் இதை ஒரு தினத்தில் 3 - 4 தரமும் செய்யலாம்.

தண்மையும் நெய்மையுமுள்ள மருந்துகளை உபயோகிக்கிறோமென்பதை நன்கு நினைவில் வைத்துக் கொள்ளவேண்டும்.

5. வீக்கம் முதலியவற்றைப் போக்க அவ்விடங்களில் சில மேற்பூச்சு [லேபம்] களையும் உபயோகிக்கலாம். இவற்றுள் கைகண்ட பலனையளிப்பது தத்தூராதி லேபம் என்பதாகும்.

தத்தூராதிலேபம் :- ஊமத்தங்காயை - இரண்டாய் நறுக்கி, உள்ளே இருக்கும் வித்துகளைக் களையவும். வித்துக்கள் இருந்த இடங்களில் சிறியதொரு குழி ஏற்படுமல்லவா ?

இரண்டாக நறுக்கிய, ஊமத்தங்காயின் இரு பாகங்களும் இரண்டு சிறு கிண்ணங்களைப் போல் இருக்கும்.

இக் கிண்ணங்களில்—சத குப்பை, முருங்கைப் பூ, எள், சந்தனத்தின் தூள் இவற்றை நிரப்பி, காயின் நறுக்கிய பாகங்களை ஒன்றாய்ப் பொருத்தி அதைச் சீந்தில் இலையினல் பொதிந்து—அருகம் புல்லை நூல் போல் சுற்றி எடுக்கவும்.

இவ்விதம் தயாரித்த சில காய்களை ஒரு சட்டியில் கொஞ்சம் கழிநீர் விட்டுக் கொதிக்க வைக்கவும். சுமார் 10 - 15 நிமிஷம் கொதித்த பிறகு இறக்கிவைத்து வெந்த மருந்துகள் சூடு ஆறியதும் அவற்றை [ஊமத்தங் காய், அதனுள் வைத்த மருந்துகள், பொதிந்த சீந்தில் இலை - அதைக் கட்டிய அருகம்புல் யாவற்றையும் சேர்த்து] வெண்ணெய் போல் அம்மியில் அரைத்து எடுத்துக் கொள்ளவும்.

பிறகு, இத்துடன் இதில் பாதியளவு வெண்ணெயும் கூட்டி ஒரு தட்டில் இட்டு அமர்த்தித் தேய்க்கவும். தேய்க்கத் தேய்க்க இதிலுள்ள ஜலாம்சமெல்லாம் வற்றிப்போக வேணும். அப்போது இந்த அரைப்பு மருந்தில் ஒரு சிறு நூல்திரியை நனைத்துக் கொளுத்தினல் சடசடக்காமல் எரியும். இந்நிலை வரும் வரையில் இதைத் தேய்த்து எடுத்து வைத்துக் கொள்ளவும்.

இதுதான் தத்தூராதிலேபம் எனப்படுவது. இதை வீக்கமுள்ள இடத்தில் அங்குல கனம் நிற்குமாறு பற்றாக இட வேண்டும். முழுவதும் உலர்ந்து பூச்சு ஒட்டிப் பிடிக்க விடாமல்— சிறிது முன்னுடியே பற்றைக் களைந்து விட்டு, பிண்ட தைலத்தால் தாரை செய்யவும்.

இவ்விதம் செய்தால் காலக்கிரமத்தில் ரத்தவாத நோய் சமனமாகும்.

எப்படியானலும் வைத்தியன் உதவியே இல்லாமல் ரத்தவாதத்துக்குச் சிகிச்சை செய்து குணமாக்குவது இயலாததுதான். ஆயினும் மேற்சொன்ன சிகிச்சைகளால் அவன் பொறுப்பு கணிசமாகக் குறைக்கப்பட்டிருப்பதைக் கண்டு சந்தோஷப்படுவான். (தொடரும்)

# நரஸு காபி

அருந்தி அதன்
பிரத்யேகமான
ருசியை
அனுபவியுங்கள்

நரஸுஸ்
மான்யுபாக்சரிங்
கோ. பிரைவேட் லிட்
சேலம் & சென்னை




---




# சிறு குழந்தைகள் ஆசையுடன் விரும்பும் பார்லி—ப்யூரிடி, ஏன்?

ஏனெனில் ப்யூரிடி பார்லி

1. சுத்தமான பசும்பாலுடன் சேர்க்கப்பட்டால், அது உங்களுடைய குழந்தையின் மென்மையான வயிற்றில் வெகு சுலபமாக ஜீரணம் ஆகும்படி செய்கிறது.
2. சுத்தமாக அரைக்கப்பட்டு, நவீன விஞ்ஞான முறைப்படி தயார்செய்யப்படுகிறது. அதனால், அசல் உயர்ந்த ரக தானியத்தின், புஷ்டிதரும் சிறந்த சத்தைக் காப்பாற்றுகிறது.
3. காற்று உள்ளே புகாவண்ணம், சுகாதார முறைப்படி, டின்களில் அடைக்கப்படுவதால், சுத்தமாகவும் புதியதாகவும் பத்திரமாகவும் இருக்கிறது.

# ப்யூரிடி

இந்தியாவில், மிக அதிக
அளவில் விற்பனையாகும் பார்லி.



PY1-3

PTY 374

---

**இலவசம்**

'ஒவ்வொரு தாய்மார்களுக்கும் தெரிய வேண்டியது' என்ற புத்தகத்தை இலவசமாகப் பெற
அட்லாண்டிஸ் (ஈஸ்ட்) லிமிடெட் (இங்கிலாந்தில் ஸ்தாபிக்கப்பட்டது)
இலாகா F. B. P 3. தபால் பெட்டி நெ. 9007 கல்கத்தா-16
என்ற விலாசத்திற்கு எழுதவும்.



அவனை மக்கள் இன்னை தூங்கித் தடிராமன் என்பதற்குப் பதி லாக 'ஆளோடி அரசன்' என்று அழைத்து வந்தார்கள். அதை விட அவனுக்கு உகந்த பெயரைத் தேடிப் பிடிப் பது மிகக் கடினமான காரியம். அவனுக்குத் தனது என்று சொல்லிக்கொள்ள வீடு வாச லும் இல்லை; தன்னவர்கள் என்று சொல் லிக் கொள்ளத் தாய் தந்தையரும் இல்லை. அவன் ஆளோடி கண்ட இடம் தூங்கி வந் தான். அதனால் 'ஆளோடி அரசன்' என்ற அடை மொழியே அவனை அறிமுகம் செய்யப் போதுமானதாக இருந்தது.

குளிர், கோடை, மழை எந்தக் காலத்தி லும் அவன் கடைத் தெருவிலே உள்ள கட்டடங்களின் 'ஆளோடி' களிலே தூங்கி வந்தான். அவனைப் போலவே ஆளோடி களையே புகலிடமாகக் கொண்ட 'அரசர்' களுக்குத் தலைமை தாங்கி வந்தான். அல்ஜீரி யாவில் உள்ள 'ஸந்த் பார்டினெட்' என்னும் கிராமத்திலே பத்து வயதே நிரம்பிய அந்தப் பாலகனுக்குத் தனிப் பெருமை இருந்தது; தனியொரு செல்வாக்கு இருந்தது.

என்ன இருந்தாலும் அரசன் அரசன்தானே? எனவே, இரவு நேரத்திலே அதிக நேரம் கண் விழித்திருக்க அவனுக்குப் பிடிப்பதில்லை. அத னால், இரவின் இருள் சூழ்ந்து கடை சாத்தி யதும், தனது சாம்ராஜ்யத்தின் நிலப் பரப்பிலே ஏதாவது ஒரு ஆளோடியைத் தேடிப் பிடித்துத் தூசியைத் துண்டினால் தட்டிவிட்டுப் படுத்துத் தூங்கிவிடுவான்.

பாதசாரிகளின் பாதஸ்பரிசம் பலமுறை அவனுடைய பொன்னுடலுக்கு ஏற்பட்டிருக் கிறது. ஆனால் அந்தச் சின்னஞ் சிறு விஷயங் களையெல்லாம் பெரிதுபடுத்தித் தன் பெரு மையைக் காட்டிக் கொள்ள முயன்றதில்லை; அரசனுக்குரிய தாராள மனத்தைத் திறந்து காட்டி மன்னித்தே வந்திருக்கிறான்.

'ஆளோடி அரசன்' பள்ளிக்கூடத்தின் தலை வாசலை மிதித்ததாகக் கனவு கூடக் கண்ட தில்லை. ஆயினும் மோஞ்சியா புர்தே பள்ளி யில் உள்ள எந்த மாணவனைக் காட்டிலும் நன்றாகப் பிரஞ்சு மொழி பேசும் ஆற்றல் பெற்றிருந்தான்.

முதன் முதலாக ராஜா செருப்புக்குப் பாலிஷ் போடும் பணியைப் பயின்றான். கொஞ்ச நாட்கள் அதைத் திறமையாகச் செய்யவும் செய்தான். ஆனால் அதனால் அவன் மனத்துக்கு ஒரு திருப்தி உண்டாக வில்லை. அப்படி ஒன்றும் அள்ள முடியாத வருவாயும் ஏற்பட்டு விடவில்லை. அதோடு ஒவ்வொருவர் காலையும் பார்ப்பதென்றால்... ராஜாவுக்கு மிகுந்த ஏமாற்றம் ஏற்பட்டு விட்டது. எனவே, பூட் பாலிஷுக்குள்ள எல்லாப் பொருள்களையும் இன்னொரு பைய னுக்கு இனாமாக வழங்கிவிட்டான். அரசன் என்றால் வள்ளலாகவும் இருக்க வேண்டும் அல்லவா? அப்புறம் மூட்டை சுமக்கும் கூலிப் பிழைப்பைத் தனக்கென்று தேர்ந்தெடுத்துக் கொண்டான். கிராமத்தில் உள்ளவர்கள் அநேகமாக எல்லோரும் அவனுக்குத் தெரிந்த வர்கள். ஆதலால் சீக்கிரமே ஒரு கூடையும் சாக்கும் பெற்றுக் கொண்டு தன் புதுத் தொழிலை ஆரம்பித்து விட்டான்.

அவன் தினமும் மார்க்கெட்டின் தலை வாச லில் போய் நின்று கொண்டு நாற்புறமும் தன் கூரிய பார்வையை ஓட்டுவான். எங்கே யாவது தன் உடலையே தூக்கி நடக்க முடியாத பருத்த பெண்மணி கண்களில் பட்டுவிட்டால், ஒரே ஓட்டமாக ஓடி அவர்கள் எதிரே போய் நிற்பான். அவனுக்குத் தெரியும், இத் தகைய பெண்களினால் சுமை மிகுந்த பொருள் களைத் தூக்க முடியாதென்று. சிற்சில சமயம் அவர்களது அந்தப் பருமனுக்குக் காரணம் கண்டு பிடிக்க அவன் சிந்தனை ஓடும். கடைசி யில் 'அவர்கள் அனைவரும் நாள் முழுவதும் நல்ல நல்ல ஆகாரமாகச் சாப்பிடுவார்கள்; அதனால்தான் இப்படிப் பருத்திருக்கிறார்கள்' என்ற முடிவுக்கு வருவான். ஆனால் அவர்க ளது அந்தப் பருமனுக்காக வேண்டி அவன் ஆண்டவனுக்கு நன்றி செலுத்துவான். நன்றி செலுத்தக் காரணமும் இல்லாமல் இல்லை; அவர்கள் அப்படிப் பருமனாக ஆகாவிட்டால் அவனுக்கு வேலை எப்படிக் கிடைக்கும்?

சில நாட்களுக்கெல்லாம் அவனுக்கு இந்தத் தொழிலும் அலுத்து விட்டது. கனமான சுமைகளைத் தூக்கித் தூக்கி அவனுக்கு இடுப்பு வலி கண்டு விட்டது. அதோடு எத்தனையோ கூடைக்காரர்கள் அவனுக்குப் போட்டியாக உண்டாகி விட்டார்கள்; அதனால் அவன் அந்தத் தொழிலையும் துறந்து விட்டான். அதற்குப் பிறகு அவன் கொஞ்ச நாட்கள் பிச்சை வாங்கும் பிழைப்பை ஏற்றான். ஆனால் அதுவும் அவன் பிடித்தத் துக்கு ஏற்ற வேலையாக அமையவில்லை.

வெகு நேர யோசனைக்குப் பிறகு அவன் ஒரு முடிவுக்கு வந்தான்.

என்ன பிழைப்பு! என்ன பிழைப்பு! கழு தைப் பிழைப்பு! மூட்டை தூக்கிப் பிழைப்பு! உடல் ஓடாகப் போகிறது! வரும்படியும் பூஜ்யம். சீ! இதுவும் ஒரு பிழைப்பா?

அன்று ராஜாக்களின் கோஷ்டி கூடி யிருந்தது. கடைத் தெருவிலேயே, ஒரு நடை பாதையில். அவர்களுக்கு நடுவிலேயே திருடிச்





சேகரிக்கப் பட்ட விறகுகள் கனே யடுப்பாக எரிந்து கொண்டிருந்தன. எல்லோரும் மிகுந்த அன்பு உணர்ச்சியுடன் தங்கள் தங்கள் பழைய நினைவுகளைக் கூறிக் கொண்டிருந்தார்கள். இந்தச் சம்பாஷணையின் ' லம் ஒரு விஷயம் புலனாயி' . அவர்களில் அநேக ராஜாக்களுக்குத் த ங்களுடைய பெற்றோர்கள் இன்னார் என்பது தெரியாது என்பதுதான்.

இதைப் பற்றிய பேச்சு துவங்கியதும் அந்தக் கோஷ்டியிலே அகாதியான விசனக் குறி படர்ந்து விட்டது. பலம் விட்டுக் கலகல வென்று சிரித்துப் பேசிக் கொண்டிருந்த அவர்களது சிரிப்பும் எங்கோ மாயமாய் மறைந்து விட்டது. அப்பொழுதுதான் அனோடி அரசன் அவர்களுக்குள்ளே ஒரு புத்துணர்வை உண்டு பண்ணினன்.

"நண்பர்களே! தாய் தந்தையர் இருந்து என்ன? இல்லாமல் என்ன? நாம் எல்லோரும் ஆண்டவனின் அன்புக்கன்பான அரும் செல்வங்கள் தானே? உலகம் முழுவதும் எவரை வணங்கி வழிபடுகிறதோ, அவரே நமக்குத் தாயும் தந்தையும் ஆவார். இதைக் காட்டிலும் நமக்கு வேறு என்ன வேண்டும், சொல்லுங்கள்!"

ஆனால் செப்டம்பர் மாதம் முடிந்ததும் ஆண்டவனின் அருட் செல்வங்களிடையே ஒரு குழப்பமே உண்டாகி விட்டது. அனோடிகளிலே குளிர் இரவைக் கழிப்பதில் அவர்களுக்கு மிகவும் கசந்த அநுபவம் ஏற்படத் தொடங்கியது. மற்றக் காலங்களில் அதிக உணவு தேவையிராது; உடையும் தேவையிராது. ஆனால் குளிர் காலத்தில் முழு உடைகள் தேவைப்படும். உடைகள் கிடைக்காவிட்டால், உணவாவது வகையாகக் கிடைக்க வேண்டும். ஏனென்றால் பசிக்கும் குளிருக்கும் மிக நெருங்கிய தொடர்பு உண்டு. குளிர் ஆளைப் போட்டு ஆட்டி எடுத்து விடும். அதனால் எல்லோருமே மிகக் கவலை கொண்டிருந்தார்கள்.

திடீரென்று ராஜாவுக்கு ஒரு உபாயம் தோன்றியது. அவன் தன் தோழர்களைப் பார்த்து, "நண்பர்களே! எனக்கு ஒரு வழி தோன்றி விட்டது. நமக்குத் தினம் நல்ல உணவு கிடைக்கும். காலணுகூடச் செலவழிக்கத் !தேவையிராது. இன்னுமா புரியவில்லை?" என்றான்.

பிறகு தான் சொல்ல வந்ததைத் தெளிவாக்கினான்: "மோஞ்சியா பூர்தே பள்ளியில் ஒரு கான்டீன் இருக்கிறது. நாம் அங்கே பெயர் எழுதிக் கொண்டு விடுவோம்!" என்று கூறினன்.

அவன் பேச்சைக் கேட்ட மற்ற ராஜாக்கள் துணுக்குற்றனர். கடகடவென்று நகைத்து, "பள்ளியா? நாம் போவோமா? உன் மூளை சரியாகத்தானே இருக்கிறது? கோளாறு ஒன்றும் இல்லையே? அது பணக்காரக் குழந்தைகளுக்காக உள்ள பள்ளிக்கூடம் அல்லவா?" என்றனர்.

"முட்டாள்களே!" ராஜா அதட்டினான். "நாமெல்லோரும் ஆண்டவனின் குழந்தைகள். ஏன் அங்கே போகக் கூடாது? கட்டாயம் போயே தீருவோம்!"

ராஜா விஷயத்தை விவரமாக விளக்கியதும் மற்ற அரசர்களும் திட்டத்தை அமுலாக்கத் தயாராயினர். வயது கொஞ்சம் அதிகமான ராஜாக்கள் மட்டும் சற்று விலகிக் கொண்டனர். வயல்களிலோ தொழிற்சாலைகளிலோ வேலை பெறும் நோக்கத்துடன் அல்ஜியர்ஸ்

போக நிச்சயித்தனர். மற்ற ராஜாக்கள் பள்ளிக்கூடம் போவதென்று தீர்மானமாயிற்று.

ஆனால் மோஞ்சியா புர்தேயில் இந்தனை அழுக்குத் துணியைப் பார்த்தால் சேர்த்துக் கொள்வார்களா? ஆமாம். மாட்டார்கள் தான். ஆனால் இந்தத் துணிகளைத் துவைப்பது எப்படி? ராஜாக்கள் எல்லோரையும் கவலை வாட்டியது. ஆனால் இந்தத் தடவையும் ராஜாவின் நுண்ணறிவு பிரச்னையைச் சுலபமாகத் தீர்த்து விட்டது.

"இரவு நன்றாக இருட்டிய பிறகு கடைத் தெருவுக்கு அருகில் இருக்கும் ஓடையில் நாம் நமது துணிகளைத் துவைத்துக் கொள்வோம்."

எல்லோருக்கும் ராஜாவின் இந்தக் கச்சிதமான யோசனை பிடித்து விட்டது.

திட்டமிட்டபடி பள்ளிக்கூடம் போகும் நாள் வந்தது. எல்லா மன்னர்களும் குளித்து முழுகி விட்டு, சுத்தமான உடை தோற்றத்துடன் பள்ளிக்கூடத்தை நோக்கிப் புறப்பட்டார்கள். வழியில் ராஜா அவர்களுக்குச் சொன்னான்:

"இதோ பாருங்கள்! பள்ளிக்கூடத்தில் ஒரே பெயரில் ஒன்றும் நடக்காது. அதனால் ஒவ்வொருவரும் அவரவருக்கு இஷ்டமான பெயரைப் பொறுக்கிக் கொள்ளுங்கள்!"

புதுப் பெயர்களைத் தேர்ந்தெடுப்பது என்பது மிகவும் கஷ்டமாக இருந்தது. ஆனால் வேறு வழியின்றிப் போகவே மன்னர்கள் அனைவரும் காமாசோமா வென்று அவரவர்களுக்கு ஒரு பெயரைத் தேர்ந்தெடுத்துக் கொண்டனர்.

பள்ளியில் பெரியதனக்காரப் பெண்மணிகள் தங்கள் குழந்தைகளின் பெயரை எழுதுவதற்காக வந்திருந்தார்கள். அவர்கள் வரிசை நீண்டிருந்தது. ஆண்டவனின் செல்வங்களும் சுவரோடு சுவராக ஒட்டியவாறு அவர்களுக்குப் பின்னால் நின்றனர். தங்கள் முறை வருவதற்காக எதிர்பார்க்கத் தொடங்கினர்.

ஏறக்குறைய இரண்டு மணி நேரம் கால் கடுக்க நின்ற பிறகு, ராஜா மோஞ்சியா புர்தே அலுவலகத்தில், தன் முழு நம்பிக்கையுடன் நுழைந்தான். மற்ற மன்னர்கள் பரபரப்புடன் அவன் திரும்பி வருவதை எதிர் பார்த்தவாறு நின்றனர். அவனது வெற்றி-தோல்வியை அனுசரித்துத்தானே அவர்களது பாக்கியம் நிர்ணயிக்கப்பட இருந்தது.

திடீரென்று அவர்கள் நம்பிக்கைக்கு மாறாக ராஜா இரைக்க இரைக்கப் பெருமூச்சு விட்ட வண்ணம் உரக்கக்கூச்சலிட்டவாறே வெளியே வந்தான். "நீங்கள் முட்டாள்கள். ஸத்பர்டினெண்டில் உங்களைக் காட்டிலும் பெரிய முட்டாள்கள் கிடைக்கவே மாட்டார்கள்... நீங்கள்......"

மற்ற ராஜாக்களும் ஒன்றும் புரிந்து கொள்ளாமல் வசவும் திட்டும் பொழிந்தவாறே அவனைப் பின்தொடர்ந்தனர்.

மோஞ்சியா புர்தே கோபாவேசமடைந்து அவர்களைப் பிடிப்பதற்காகத் தம் அறையிலிருந்து வெளியே வந்தார். அதற்குள் ஆண்டவனின் செல்வங்கள் அவர் பிடியை விட்டு எவ்வளவோ தூரம் முன்னேறிச் சென்று விட்டனர்.

ஆண்டவனின் செல்வங்கள் கடைத் தெருவை அடைந்து ஒரு கட்டடத்தின் ஆளோடியின் மேல் அமர்ந்தனர். அப்புறம் தான் அவர்கள் கோபம் கொஞ்சம் அடங்கியது. ராஜா விஷயத்தை விளக்கினான்: "அவன் என்ன சொன்னான், தெரியுமா? 'உன்னை மட்டும் வேண்டுமானால் சேர்த்துக் கொள்கிறேன்' என்றான்."

"அப்புறம்?" எல்லா மன்னர்களும் காதைக் கூராக்கிக் கொண்டு கேட்டனர்.

"நானா ஒப்புக் கொள்வேன்? 'முடியாது. எல்லோரையுமே சேர்த்துக் கொள்ள வேண்டும். ஆண்டவனின் செல்வங்கள் அனைவருமே படிப்போம்' என்றேன். இதைக் கேட்டு ஆண்டவனின் அந்த அடிமை என்ன சொன்னான், தெரியுமா? 'அசுத்தமே உருவான காட்டு மிராண்டி



களைச் சேர்த்துக் கொண்டு என் பள்ளியின் பரிசுத்தமான பாரம்பரையை அசுத்தமாக்கிக் கொள்வேனா?' என்றான்.'",

ஆண்டவனின் செல்வங்கள் வாய் அடைத்துப் போய்விட்ட

# இப்பொழுது நரம்புத் தளர்ச்சியால் தடுமாற்றம் கிடையாது!




நீங்கள் வீட்டிலோ ஆபீஸிலோ வேலை செய்யும் போது சில சமயங்களில், வேலையில் தாறுமாறுகள் ஏற்படுவதுண்டு. இத்தகைய கோளாறுகளை நிவர்த்திக்க உறுதியான நரம்புகள் தேவை. 'ஓவல்டினை' சாப்பாட்டுடன் அல்லது படுக்கப் போகுமுன் அருந்தினால் நரம்புகள் வலுவடைந்து சக்தியும் எடையும் ஏறுகிறது. நேர்த்தியான இயற்கை உணவுப் பொருள்களிலிருந்து தயாரிக்கப்படும் இந்த ருசியான பானத்தில் பி & டி விடமின்கள் அடங்கியிருக்கின்றன. அது இலகுவில் ஜீரணமாகி இதர உணவுகளும் ஜீரணமாக உதவுகிறது. 'ஓவல்டின்' வேண்டுமென்று கேளுங்கள்.

ஒவ்வொரு டப்பியிலும் ஆரோக்கியம்

# ஓ வ ல் டி ன்

விநியோகஸ்தர்கள்:

கிரஹாம்ஸ் டிரேடிங் கோ. (இந்தியா) பிரைவேட் லிட்.



IV. 496



னர். மோஞ்சியா பூர்தே தங்களைத் திட்டிவிட்டாரே என்ற கவலை அவர்களை வருத்தவில்லை. இந்தக் குளிரையும் பசியையும் தாங்கி வாழ்க்கையை ஓட்டியாக வேண்டுமே என்ற கவலைதான் அவர்களை வாட்டிப் பிழிந்தது. அதை விட்டால் அவர்களுக்கு வேறுவழி? ஆனால்யோசிக்க யோசிக்க அவர்களது ஆன்ம பலம் அதிகரித்தது. 'குளிரட்டுமே? குளிர்ந்தால் என்ன? இந்தக் குளிர் காலம் இப்படியே நிலைத்து நின்றுவிடப் போவதில்லையே! எப்படியாவது கழிந்துவிடத்தானே போகிறது!' என்று தைரியத்தையும் ஊட்டியது.

ஆனால் உண்மையைக் கேட்கப் போனால் மோஞ்சியா பூர்தே அவ்வளவு ஈவிரக்கம் அற்றவர் அல்ல. பிரஞ்சுக் குடும்பங்களின் அதிகாரத்துக்கு அடங்கியிருந்ததனால் தான் அவர் ராஜாவைப் பள்ளியில் சேர்த்துக் கொள்வதற்கில்லை என்று மறுத்து விட்டார். ஆனால் பிறகு அவர் உள்ளத்திலே கழிவிரக்கம் தோன்றியது. அந்த அநாதைக் குழந்தைகளில் ஒருவரையாவது சேர்த்துக் கொள்ளாமல் விட்டுவிட்டோமே என்று வருந்தினார்.

இது சம்பந்தமாக அவர் தம் மனைவியைக் கலந்து ஆலோசனை செய்தார்.

''ராஜா கெட்டிக்காரன். நல்ல மேதாவி. பார்ப்பதற்கும் 'குறுகுறு' வென்றிருக்கிறான். யார் கண்டார்கள், அவன் வாழ்நாட்களும் திரும்பி நல்லபடியாக ஆகக் கூடாதா?'' என்று கூறினார்.

ஸ்ரீமதி பூர்தே சந்தான பாக்கியம் அற்றவர். அவருக்குத் தம் கணவர் கூறியது சரியாகவே தோன்றியது. ராஜாவைத் தம்முடன் வைத்துக் கொள்ள அநுமதி அளித்து விட்டார். அப்புறம் அப்பீல் ஏது? ராஜாவைப் பூர்தே தம்பதிகள் தங்களோடு வைத்துக்கொண்டு விட்டார்கள்.

ராஜா எதிர்பார்த்ததைக் காட்டிலும் அதிக அறிவாளியாக விளங்கினான். இரண்டே மாதங்களில் அவன் நன்றாக எழுதப் படிக்கக் கற்றுக்கொண்டு விட்டான். பூர்தே தம்பதிகள் அதைக் கண்ணுற்றுப் பூரித்து விட்டனர். ஆனால் ஒரே ஒரு பிரச்னை இன்னும் அவர்களை விட்டு அகன்றபாடில்லை. 'ராஜா'வின் பழைய நண்பர்கள் அவனைப் பார்த்துப் போக அடிக்கடி வந்து கொண்டிருந்தனர். இந்தக் காரியம் ஸ்ரீமதி பூர்தேக்குப் பிடிக்கவில்லை. இதைத் தமக்கு ஒரு மரியாதைக் குறைவாகவே அவர் எண்ணினார்.

ராஜாவின் கடந்த கால இழிகுணங்களையும் செயல்களையும் நீக்க வேண்டும் என்றால் அவனுடைய தோழர்களை அவனுடன் பழகவிடாமல் இருக்க வேண்டியது மிக மிக அவசியம் என்பதை அவர் உணர்ந்தார். அதற்கான முயற்சியில் அவர் இறங்கினார்; அதில் ஓரளவு வெற்றியும் பெற்றார்.

ராஜா வெகு வேகமாக முன்னேறிக் கொண்டிருந்தான். அவனது பழக்க வழக்கங்களிலும் பண்புகளிலும் கூடப் பல சீர்திருத்தங்கள் தோன்றின. இப்பொழுது அவன் மேஜையில் முழங் கைகளை ஊன்றிக் கன்னத்தில் கைவைத்துக் கொண்டு படிப்பதில்லை. வாய் கிழிய உரக்கப் பேசுவதில்லை; தனது ரத்தத்தோடு ஊறிப்போன 'சீ கழுதை! நாயே!' போன்ற சொற்களை உபயோகிப்பதையும் குறைத்துக் கொண்டு விட்டான். ஆனால் ஒரு விஷயம். அவனுக்குத் தான் வாழும் சமூகத்தின் நிலைதான் பிடிபடவில்லை. எவ்வளவோ முயன்றும் அவனிடம் உயர் நிலையில் உள்ளோரின் உணர்ச்சிகளெல்லாம் படியவில்லை.

அதை உண்டுபண்ணுவதற்காக ஸ்ரீமதி பூர்தே அடிக்கடி அவனுக்கு உபதேசிப்பார் :

''சமூகம் என்பது ஒரு ஏணியைப் போன்றது. உழைப்பினாலும் திறமையினாலும்தான் ஒருவன் அதில் ஏற முடியும். அதற்கு முதலில் நீ உன் நிலையை உணர வேண்டும். பிறருக்குச் சமதையாக உட்காரும் தகுதியைப் பெற முயற்சி செய்யவேண்டும். ஏணியின் உயர்ந்த படியில் ஏறும் பொறுப்பு உன்னைச் சேர்ந்தது. 'முயற்சி திருவினையாக்கும்.' 'முயற்சி உடையார் இகழ்ச்சி அடையார்' என்ற முதுமொழிகள் இதை உணர்த்தவே ஏற்பட்டுள்ளன...... சமூகத்தில் வாழும் நமக்கு அவர் அவர்களுக்கென்று ஒரு வரன் முறை, ஒரு மரியாதை என்று இருக்கின்றன. மேயர் ஆவது ஏணியின் உச்சாணிப்படி யென்றால், 'ஆண்டவனின் குழந்தை'களாவது எல்லாவற்றுக்கும் கீழான படி. நாம் அனைவரும் ஒரே ஏணியில் உள்ளவர்களாயிருந்த பொழுதிலும் அவர் அவருக்கென்று ஒரு மரியாதையும் சட்டதிட்டமும் இருக்கின்றன! அதை நாம் நிர்வகித்தால்தான் சமூக ஏணி திறம்பட இயங்க முடியும்.''

அன்றும் உணவருந்தும் பொழுது ஸ்ரீமதி பூர்தே ராஜாவுக்கு இதே விஷயங்களைத்தான் உபதேசித்துக் கொண்டிருந்தார். ஆனால் அன்று ஏனோ தெரியவில்லை, ராஜா கொதித்தெழுந்து விட்டான். உணவருந்தும் பாத்

திரைகளைப் போட்டு உடைத்து விட்டு ஏதோ முணு முணுத்தவாறே வீட்டை விட்டு வெகு வேகமாக வெளியேறி விட்டான்.

இது நடந்து சில நாட்களுக்குப் பிறகு, ஒருநாள் மாலை நான் ராஜாவைச் சந்தித்தேன். அவன் ஒட்டி உலர்ந்து ஒல்லியாகக் காட்சி அளித்தான். அவன் எலும்புகள் மறுபடியும் எண்ணக் கூடிய நிலைமையை அடைந்திருந்தன.

நான் இயல்பான பரிவுடன், "நீ ஏன் அங்கிருந்து வந்து விட்டாய்?" என்று அவனைப் பார்த்துக் கேட்டேன்.

"எனக்கு அந்த ஏமாற்று மோசடி வித்தைகளெல்லாம் பிடிக்கவில்லை. ஸ்ரீமதி புர்தே அவர்களது ஏணியின் உச்சாணிப்படியில் எப்பொழுதும் மேயர் உட்காருகிறான். எல்லாவற்றுக்கும் கீழ்ப்படியில் ஆண்டவனின் குழந்தைகள் அமருகிறார்கள். இப்படி நடப்பானேன்?...ஆண்டவனது அருள் ஆட்சியிலே சிறியவன் என்ன? பெரியவன் என்ன? எல்லோருமே ஆண்டவனின் அருட் செல்வங்கள் தாமே? அப்படி யிருக்கும்பொழுது இந்தப் பாகுபாடு ஏன்? நான் இதை ஒப்புக்கொள்ள முடியாது. செத்தாலும் ஒப்புக்கொள்ள முடியாது. நான் எதையும் பொறுக்கத் தயார். ஆனால் இந்த ஏமாற்று வித்தைக்கு இடம் கொடுக்கத் தயாராயில்லை. எனக்கு எனது ஆண்டவனின் பாரபட்சமற்ற ஆட்சியிலே பரிபூரண நம்பிக்கை இருக்கிறது. நான் அவரது பட்சபாதமற்ற பெரும் சக்திக்குக் களங்கம் விளைய விடமாட்டேன்!"

அவன் இதைக் கூறும்பொழுது சிங்கமாகவே கர்ஜித்தான். அவனது தன்மான உணர்ச்சியைக் கண்ணுற்ற எனக்கு மெய் சிலிர்த்தது. உலகத்தில் உள்ள ஜீவராசி அனைத்துக்குமே ஒரு உணர்ச்சியை ஆண்டவன் படைத்திருக்கிறான். ஈ, எறும்பு, புழு பூச்சி ஆகியவை கூட இதற்கு விதிவிலக்கில்லை; உள்ளம் நோக, உடல் நோக யாராவது ஏதாவது செய்து விட்டால் அவையும் சகிப்பதில்லை.

இதை நினைத்துப் பார்த்த நான் 'சபாஷ்!' என்று அவனைத் தட்டிக் கொடுத்தேன்.

"ஊஹூம். இந்தப் புகழ்ச்சிக்கு முற்றிலும் நான் அருகதையற்றவன். நான் உண்மை - பொய் இந்த இரண்டுக்குமிடையே ஒன்றைத் தேர்ந்தெடுத்துக் கொண்டிருந்தேன். அவ்வளவுதான். நல்லது செய்தேனா. தீயது செய்தேனா? இது எனக்குத் தெரியாது!" என்று கூறிக்கொண்டே வந்தவன் சற்று நிறுத்தினான். "அப்பொழுது என் வயிறு நிறைந்திருந்தது. தோன்றியதைச் செய்து விட்டேன். ஆனால் இப்பொழுது ஆண்டவனது ஆட்சியிலே மீண்டும் பசி போர் தொடுத்து விட்டது!" என்று முடித்தான்.

"அப்படியானால் எதற்காகப் பசியாக இருக்கிறாய்? அங்கே திரும்பிப் போய் விடேன்!" என்றேன் நான்.

"முடியாது. இனி காலம் கடந்துவிட்டது!"

"காலம் கடந்துவிட்டதா? நீயாகப் போகக் கூச்சப்படுகிறாய் என்று சொல். எனக்கு அவர் நண்பர்தான். உன் சார்பில் நான் வேண்டுமானால் அவரிடம் போய்ச் சொல்லட்டுமா?" என்று கேட்டேன்.

ராஜா ஒரு வினாடி பேசாமல் இருந்தான். ஒருவேளை ஏதோ யோசனை செய்தானோ, என்னவோ? அவன் மௌனத்தைக் கலைத்துக் கொண்டு கூறினான்:

"ஆம். அவரிடம் போய் என் சார்பில் சொல்லுங்கள்: நான் என் ஆத்மாவைப் பொய் நம்பிக்கைகளால் கட்டிப் போட்டு இழிவாக்கிக் கொள்வதற்காக அங்கே வந்து தங்க முடியாது. நான் என் நாதன் உள்ளிருக்கையில், அவனது ஆண்மை எனக்குக் கவசமாக விளங்கிக் கொண்டிருக்கையில், அவர் அளிக்கும் நெய் தோய்ந்த இன்சுவை ரொட்டியைச் சாத்தான் அளிக்கும் துர்ப்போஜனமாகவே மதிக்கிறேன். நீங்களே சொல்லுங்கள், பசியைப் போக்கிக் கொள்வதற்காக அவரை அண்டிப் பிழைக்கும் வழி நல்லதுதானா?"

அவன் முகம் உணர்ச்சிப் பொறியிலே ஒரேயடியாகச் சிவந்து விட்டது. ஆனால் அடுத்த நிமிஷமே அவனது முக பாவங்கள் மாறி விட்டன. அவன் என் கைகளைப் பற்றிக் கொண்டு சொன்னான்:

"இங்கே இப்படிக் கொடுங்கள் அந்தச் சுமையை. நான் எடுத்து வருகிறேன். ரொம்பப் பசிக்கிறது. இன்றைய ஆகாரம் தாங்கள் தரும் கூலிக் காசினால் நடக்கட்டும்!"

நான் சிரித்துக் கொண்டேன். இருவரும் கையோடு கை கோத்துக் கொண்டு ஹோட்டலை நோக்கி நடந்தோம்.

['நவநீத'தில் வெளியான மௌலோத் மெமரி எழுதிய பிரஞ்சுக் கதை.]

# எத்தகைய சிறந்ததோர் மோட்டார் எண்ணெய் இது பெட்ரோல் செலவை 15% வரை குறைக்கிறது

காலடெக்ஸ்

RPM

## ஆர்பிஎம் 20-40 ஸ்பெஷல் கீழே குறிப்பிட்டவாறு வேலை செய்கிறது

### நீங்கள் காரை ஸ்டார்ட் செய்யும்பொழுது

அது இயங்க 20-எண்ணெய் அவசியம். நீங்கள் காரை ஸ்டார்ட் செய்யும்பொழுதெல்லாம் அதற்கு இலேசானதும், எளிதில் லூப்ரிகேட் செய்யக்கூடியதுமான 20-எண்ணெய் அவசியம். அப்பொழுதுதான் தேயும் உறுப்புகளுக்குப் பாதுகாப்பு ஏற்படுகிறது. கனத்த எண்ணெயினால் உறுப்புகள் உராய்வது தவிர்க்கப்படுவதால் பெட்ரோல் வீணாவதில்லை. மற்றும் அதிகமாக பாட்டரி சக்தி விரயமாவதில்லை.

### பத்து நிமிஷங்களுக்குப் பிறகு

உங்கள் காருக்கு 30-எண்ணெய் அவசியம். உங்கள் கார் எஞ்சினில் சூடேறும்பொழுது, அதற்கு எஸ்ஏஇ 30-எண்ணெய் அவசியம். வழிந்து ஓடாமல் "இறுகி" நிற்கும் இந்த எண்ணெய் எஞ்சின் சூட்டை மிதப்படுத்துகிறது. இந்த நிலையில், இலேசான எண்ணெயான 20, அதற்கு பூரண பாதுகாப்போ அல்லது அதிகப்படியான உழைப்போ அளிக்கமுடியாது. எஸ்ஏஇ 40 மிகவும் கனத்த எண்ணெயாதலால் இந்நிலையை சமாளிக்க ஏற்றதல்ல.

### இருபது நிமிஷங்களுக்குப் பிறகு

உங்கள் காருக்கு 40-எண்ணெய் அவசியம். எஸ்ஏஇ 40 எண்ணெயின் வழியாத 'இறுக்கத்தன்மை' பாதுகாப்புடன் வெட்ட வெளி ரஸ்தாக்களில் உங்கள் கார் அதிகத் திறனுடன் இயங்கும்.

ஆர்பிஎம் 20-40 ஸ்பெஷல், எஞ்சின் இயங்கும் எல்லா நிலைகளிலும் அதன் தேவைகளைப் பூர்த்தி செய்கிறது. முழு விசையில் இயங்கும்பொழுது அதிகப்படியான பாதுகாப்பு அளித்து, எஞ்சினைக் குளிரச் செய்து சுகமாக ஓட வைக்கிறது.

**ஆர்பிஎம் 20–40 ஸ்பெஷல் அளிக்கும் அனுகூலங்களைக் கவனியுங்கள் :**

1. பிரதி காலனுக்கு 15 சத விகிதம் வரை அதிக மைல் ஓட்டம்.
2. 33 சத விகிதம் வரை எண்ணெய்ச் செலவு குறைவு.
3. சூடேறுகையில், எஞ்சினின், துரிதமான சுகமான இயக்கம்.
4. பாட்டரிச் செலவு குறைவு.
5. தேய்மானத்தைக் குறைக்கிறது.
6. பிரயாணிகள் கார், மற்றும் டிரக் உற்பத்தியாளர்களின் நியமங்களைப் பூர்த்தி செய்கிறது.
7. எல்லா பருவ காலங்களிலும் சீதோஷ்ண நிலைகளிலும் ஓட்டும் நிலைகளிலும் உபயோகிக்கலாம்.







காலடெக்ஸ்

ஆர்பிஎம் 20-40 ஸ்பெஷல் உபயோகித்து



## தரத்திலும் உபயோகத்திலும்
# இன்னும்
# முன்னணியிலுள்ள









**10.ல் 9 நபர்**




# பிரபாத்

- ஸ்டவ்ஸ்
- லாண்டர்ன்ஸ்
- மேண்டல்ஸ்
- ப்ளோ லாம்ப்ஸ்

உபயோகிக்கின்றனர்

பிரபாத் (ஸ்டவ் அண்ட் லாம்ப்) பிராடக்ட்ஸ் கம்பெனி
பிரைவேட் லிமிடெட்

தோபின் சேம்பர்ஸ், பார்ஸி பஜார் வீதி, போர்ட், பம்பாய்-1



# எங்கே தேடுவேன்?

'' அன்புள்ள ஐயா!

நெருப்பு ஒன்றுதான். கஞ்சி காய்ச்சவும் உபயோகப்படுகிறது. வீட்டைக் கொளுத்தவும் உபயோகப்படுகிறது.

அப்படித்தான் கன்னிப் பெண்கள் வேலைக்குப் போவதும். வீட்டின் வறுமையைப் போக்கவும் செய்யும்; வீட்டின் பெருமையைக் குலைக்கவும் செய்யும். வறுமை ஆபத்தை நீக்கக் கன்னிப்பெண் வேலைக்குப் போகும்போது கற்புக்கும் ஆபத்து ஏற்படாமல் போவதில்லை. ஒளிவு மறைவில்லை. மேலும் அதிகமாக விளக்கத் தேவையில்லை.

இன்றுமுதல் ராஜிநாமா செய்து விட்டேன்.

தங்கள்

அபர்ணா.''

ராஜிநாமாவைப் படித்ததும் தூக்கிவாரிப் போட்டது எனக்கு.

ஒரு வாரத்துக்கு முன்பு.

'' எங்கள் குடும்பம் அடுத்த வேளை உயிருடன் இருப்பது உங்கள் கையில்தான் இருக்கிறது. நீங்கள் கொடுக்கும் சம்பளம் எவ்வளவு குறைவானாலும் வாங்கிக் கொள்ளுகிறேன். முழுப் பட்டினியை விட அரைப் பட்டினி தேவலை இல்லையா ?'' என்று என்னைக் கெஞ்சிக் கேட்டுக் கொண்டாள் அபர்ணா.

இன்று வேலையை உதறி விட்டாள்.

அவள் ஏன் வேலையை உதறிவிட வேண்டும்?

கன்னிப் பெண் வேலைக்குப் போவதில் உள்ள ஆபத்தைப் பற்றி ஏன் குறிப்பிட்டாள்?

காரியாலயத்தில் யாராவது முறை தவறி நடந்து விட்டார்களா ? அப்படி ஏதாவது நடந்திருந்தால் என்னிடம் அல்லவா வந்து அவள் சொல்லியிருக்க வேண்டும்?

ஏன் சொல்லவில்லை ?

மணியை அடித்தேன். ஆபீஸ் பையன் ஓடி வந்தான். '' மானேஜரைக் கூப்பிடு.''

அவர் வந்தார்.

''புதிதாக வந்த பெண் குமாஸ்தா அபர்ணாவிடம் யாராவது முறை தவறி நடந்தார்களா? அவள் ஏதாவது புகார் சொன்னாளா?''

'' சொல்லவில்லையே. நேற்றுக்கூட நீங்கள் அவளிடம் 'இந்த மாதம் முதல் சம்பளத்தை இரட்டிப்பாக்கி இருக்கிறேன்' என்று சொல்லச் சொன்னீர்கள். சொல்லி விட்டேன்.''

'' அதற்கு அவள் உங்களிடம் ஏதாவது பதில் சொன்னாளா?''

'' அவள் சொல்லவில்லை. ஆனால்...''

''ஆனால் என்ன ?''

'' அவளுடன் வேலை செய்யும் சஞ்சலா அம்மாள்...''

'' என்ன சொல்லியது அந்தக் கிழம்?''

''அபர்ணா, நீ அதிர்ஷ்டசாலி. வந்து ஒரே வாரத்தில் இரட்டிப்புச் சம்பளம். சம்பளத்தில் ஒரு ஐந்து ரூபாய் சேர்த்துக் கொடுங்கள் என்று இரண்டு வருடங்களாகக் கேட்கிறேன். கிடைக்கவில்லை: கன்னிப் பெண் நீ. இளமை அழியாமல் வைத்துக் கொள் '' என்று சொன்னாள்.

'' அட கிழட்டுப் பிணமே! நீ செய்த கலகமா இது!''

'' இன்றுகூட அபர்ணா இன்னும் வேலைக்கு வரவில்லை.''

'' அவள் இனி ஏன் வருகிறாள்? ராஜிநாமா செய்து விட்டாள்.''

'' ராஜினாமாவா? இரண்டு தினங்களுக்கு முன்பு கூட என்னிடம் 'எவ்வளவு வேலை வேண்டுமானாலும் செய்கிறேன், ஸார்! வேலையை விட்டு மட்டும் போகச் சொல்லி விடாதீர்கள்; குடும்பம் தத்தளிக்கிறது' என்று சொன்னாளே! அவள் விலாசம்கூட எனக்குத் தெரியாதே!''

'' ஆமாம். இந்தப் பரந்த பட்டணத்தில் அவளை எங்கே தேடுவது? நேரிட வேலைக்கு வந்தாள். மனுப் போட்டிருந்தாளானால் அதில் விலாசம் இருந்திருக்கும். இந்த ராஜினாமாவில் விலாசமோ ஊரோ காணோம்;''



"எதற்கும் நான் அவளைப் பற்றி விசாரித்துப் பார்க்கிறேன்."

மானேஜர் போய் விட்டார்.

நான் ஒரு முட்டாள். அவளை நேற்றே நேரில் பார்த்துப் பேசியிருக்க வேண்டும். அதை விட்டு மானேஜரிடம் அவள் சம்பளத்தை இரட்டித்திருப்பதாகச் சொல்லச் சொன்னதும் அவள் என்னைப் பற்றித் தவறுதலாக எண்ணி விட்டாள். அவள் எண்ணியதில் தவறில்லை. ஆனால் நான்தான் அவசரப் பட்டு விட்டேன்.

ஆனால் என்னுடைய தற்கால அந்தஸ்து அவளிடம் நான் யார் என்று சொல்லிக் கொள்வதைத் தடை செய்து வருகிறது. அவளிடம் மனம் விட்டுச் சொல்லியிருக்கலாம். ஆனால் வறட்டுக் கௌரவம் தடை செய்து விட்டது. நான் யார் என்று அவள் அறியாமலேயே அவளுக்கு எல்லா உதவிகளையும் செய்யத் திட்டமிட்டேன். ஆனால் அவள் அதை விபரீதமாக எண்ணும்படியாகி விட்டது. யாருமே இப்படித்தான் எண்ணுவார்கள். ஏன்? காரியாலயத்தில்கூட இதைப் பற்றிப் பேச மாட்டார்களா?

எனக்கு ஏன் இது தோன்றவில்லை? நான் நினைத்தது ஒன்று. அவள் நினைத்தது வேறு.

இரண்டு நாட்களுக்கு முன்பு அறையில் உட்கார்ந்து கொண்டிருந்தேன்.

அடுத்த அறையில்தான் அபர்ணாவும் அந்தக் கிழட்டுச் சஞ்சலாவும் தங்கள் வேலையைச் செய்து கொண்டிருந்தார்கள்.

சஞ்சலா வேலையிலிருந்து ஓய்வுபெற்ற சர்க்கார் குமாஸ்தா. ஓய்வு பெற்ற பிறகு மறுபடியும் வெளியில் வேலை தேடினாள். என் காரியாலயத்தில் அவளை வேலைக்கு எடுத்துக் கொண்டேன். ஐந்து வருடங்களாக வேலை பார்த்து வருகிறாள்.

அன்று அவள், அபர்ணா இருவரும் பேசிக் கொண்டிருந்தார்கள்.

அடுத்த அறைதான் என்றாலும் அவர்கள் பேச்சு தெளிவாகக் காதில் விழுந்தது.

"இன்று நான் வரும்போது எங்கள் தெருக் கோடியில் ஒரே ரகளை"—இது சஞ்சலாவின் பேச்சு.

"என்ன விஷயம்? ஏதாவது பெரிய விபத்தா?" இது அபர்ணா.

"இல்லை. யாரோ ஒரு சின்னப் பெண். ஆறு வயசு இருக்கும். பள்ளிக்கூடத்துக்குப் போய்க் கொண்டிருந்தது. யாரோ ஒரு திருடன், குழந்தையின் கழுத்துச் சங்கிலியை அறுத்து விட்டான். நல்ல வேளை! கையும் மெய்யுமாய்ப் பிடிபட்டுவிட்டான். திருடனைத் தலைக்குத் தலை அடித்துப் போட்டார்கள்."

"ஐயோ, பாவம்! அதற்காக அவனை அடிப்பானேன்?"

"நன்றாக இருக்கிறதே, உன் பரிதாபம்! உன் குழந்தையாக இருந்தால் தெரியும்."

"என் குழந்தை என்ன, நானே ஒரு தடவை ஒரு திருடனைத் தப்பி ஓட வைத்திருக்கிறேன்."

"நீயா? ஏன் அப்படி?"

"அப்பொழுது எனக்கு எட்டு வயது.

## மலேயாவில் தமிழ் வளர்க்கும் வள்ளல்

மலாய் நாட்டைச் சேர்ந்த கோலாலம்பூரிலும் திருவாரூரை அடுத்துள்ள விஜயபுரத்திலும் ஸ்தாபிக்கப்பட்டுப் பல ஆண்டுகளாக நடந்து வரும் மனோன்மணி விலாச புத்தக சாலையின் அதிபர் ஸ்ரீ மு. இராமசாமி முதலியார்; இரண்டாவது உலக மகா யுத்தத்தின்போது மலேயாவில் நேத்தாஜி சுபாஷ் சந்திரபோஸினால் நிறுவப்பட்ட இந்திய தேசிய ராணுவத்தில் காப்டன் பதவி வகித்து, மலேயாவிலும் பர்மா போர் முனையிலும் மிகவும் தொண்டு புரிந்தவர். மலாயா இந்தியர் காங்கிரஸ், விவேகானந்தா ஆசிரமம், தெய்விக வாழ்க்கை சங்கம், அப்பர் உயர்நிலைப் பள்ளி, தமிழர் பிரதிநிதித்துவ சபை, தமிழ் மொழிச் சம்பள உதவிச் சங்கம் முதலியவை போன்ற மலேயாவில் உள்ள பல பொது ஸ்தாபனங்களிலும் பொறுப்பான பதவிகள் வகித்து வந்துள்ளார். மலேயா பல்கலைக் கழகத்தில் தமிழ் படிக்கும் மாணவர்களுக்கு உபகாரச் சம்பளம் கொடுப்பதற்காக ரூபாய் பத்தாயிரமும், கோலாலம்பூர் விவேகானந்தா தமிழ்ப் பள்ளிக் கட்டட நிதி, சுத்த சமாஜம் பள்ளிக் கட்டட நிதி, அருள் நெறி பதிப்பகம் முதலியவற்றுக்காக ரூபாய் ஒன்பதினாயிரத்துக்கு மேலும் நன்கொடை வழங்கிய வள்ளல் இவர். சில மாதங்களுக்குமுன் இந்தியா விஜயம் செய்துள்ள திரு இராமசாமி முதலியார் மறுபடியும் மலேயா செல்லும்போது மலேயா பல்கலைக் கழகத் தமிழ் நூல் நிலையத்துக்கு ஏராளமான நூல்களை நன்கொடையாக அளிக்கவும் திட்டமிட்டுள்ளார்.





ஒரு திருடன் நான் பள்ளிக்கூடத்துக்குப் போகும்போது என் சங்கிலியைத் திருடி விட்டான்; வழக்குகூடப் போட்டார்கள். ஆனால் நான் அவன் திருட வில்லை என்று கோர்ட்டில் சொன்னேன். உடனே அவனுக்கு விடுதலையாகி விட்டது.''

'' நீயா ? என்னால் நம்ப முடியவில்லையே !''

''என் வீட்டுக்கு ஒரு நாள் வாருங்கள். என் அம்மாவை வேண்டுமானால் சொல்லச் சொல்லுகிறேன்.''

'' ஏன் அப்படிச் செய்தாய் ?''

''அவனைப் பார்த்தால் பரிதாபமாக இருந்தது. அது தவிர எங்கள் பள்ளிக்கூடத்திலே ஒரு நாடகம் போட்டோம். அந்த நாடகம் ஜீன்வால்ஜீன் நாடகம். அதிலே ஒரு திருடன் சாமியார் வீட்டிலே திருடுகிறான். அவனைப் போலீஸார் பிடித்தபோது சாமியார் அவனுக்கு அந்தப் பொருள்களை இனாமாகக் கொடுத்ததாகச் சொன்னார். நான்தான் அந்தச் சாமியாராக நடித்தேன். அதிலே வாத்தியாரம்மா சொல்லிக் கொடுத்தது ஆழமாகப் பதிந்து விட்டது. அது நடந்த ஒரு மாதம் கழித்துத்தான் என் சங்கிலியைத் திருடினான். நாடகத்திலே நடித்த மாதிரியே நேரிலேயும் நடந்து விட்டேன். அப்பப்பா! அன்று அப்பாவும் அம்மாவும் என்னைத் திட்டியதும் அடித்ததும் இப்பொழுது நினைத்தால் கூட வலிக்கிறது.''

'' தேவலையே! எந்த ஊரிலே படிச்சே ?''

''கோவிலூரிலே, தஞ்சாவூர் ஜில்லாவிலே. என் தகப்பனார் கிராமக் கணக்குப்பிள்ளை !''

அதன் பிறகு அவர்கள் பேசியது எதுவும் என் காதில் விழவே இல்லை. என் மனம் பன்னிரண்டு வருடங்களுக்கு முன் சென்றது.

படித்துப் பாஸ் செய்தவன்தான் நான். ஆனால் எங்கும் வேலை கிடைக்கவில்லை. ஹோட்டல்களில் கூடப் போய்க் கேட்டேன். வேலை கிடைக்கவில்லை. வறுமைப் பேய் தாண்டவமாடியது. ஒரு தடவை தற்கொலை செய்து கொள்ளத் தீர்மானித்து விட்டேன். ஒருவர் முத்துப்பேட்டை தேங்காய் டெப்போ ஒன்றில் வேலை கிடைக்கும் என்று சொன்னார். அங்கே போய்க் கேட்டேன்.

'' உன்னை எங்களுக்குத் தெரியாது. தேங்காய்களை ஸ்டேஷனுக்குக் கொண்டு போய் கூட்ஸ் வண்டியில் ஏற்றவும் வசூல் செய்யவும்

ஒரு படித்த பையன் தேவை. நூறு ரூபாய் டிபாஸிட் கட்டுவாயா?" என்று ஒரு தேங்காய் வியாபாரி கேட்டார்.

நூறு காலணாக்கூட இல்லாதவன். நூறு ரூபாய்க்கு எங்கே போவேன்?

யாரோ ஒருவர் சொன்னார்: "தம்பி, ஒரு மைலில் கோவிலூர் இருக்கிறது. அங்கே ஒரு தனவந்தர் இருக்கிறார். அவரிடம் போய்க் கேள். அவர் நூறு ரூபாய் கடன் கொடுப்பார். மாதம் பத்து ரூபாயாக அடைத்து விடலாம்" என்றார்.

கோவிலூர் போய்ப் பார்த்தேன். என் துரதிர்ஷ்டம் அவர் ஊரில் இல்லை. அவர் வர ஒரு மாதம் ஆகும் என்றார்கள். என் விதியை நொந்து கொண்டேன்.

மறுநாள் காலை எட்டு மணி இருக்கும்.

கோவிலூரை விட்டு முத்துப்பேட்டைக்குப் பயணமானேன். அப்போது ஒரு சந்து வழியாக ஒரு எட்டு வயதுச் சிறுமி பள்ளிக்குச் சென்று கொண்டிருந்தாள். அவள் கழுத்தில் ஒரு சங்கிலி யிருந்தது.

என் புத்தி பேதலித்தது. கிடைக்கும் வேலை கூட நூறு ரூபாய் இல்லாவிடில் போய்விடும். அப்புறம் என் கதி!

துணிந்து விட்டேன். சுற்றுமுற்றும் பார்த்தேன். யாரும் காணோம்.

அவ்வளவுதான்; சங்கிலியை அறுத்துக் கொண்டு ஓடிவிட்டேன். அந்தப் பெண் 'திருடன் திருடன்' என்று கத்தினாள்.

ஆனால் அந்தச் சமயம் யாருமே வராததால் நான் தப்பி விட்டேன்.

முத்துப்பேட்டை கடைத்தெருவில் சங்கிலியை விற்றும் விட்டேன். நூறு ரூபாய் கிடைத்தது. கொண்டு போய்க் கொடுத்தேன். வேலை கிடைத்து விட்டது.

ஆனால் ஒரு குழந்தையின் கழுத்திலிருந்து பறித்தது மனத்தை ரொம்பவும் வேதனை செய்தது. மூன்றாவது நாள். நகைக் கடைக்காரரும் போலீஸாரும் வந்தார்கள்.

அது என் நகை என்று வாதாடியும் என்னைக் கைது செய்து விட்டார்கள். கோர்ட்டில் வழக்கு நடந்தது. முதலாவதாகப் பெண்ணின் அப்பா சாட்சி சொன்னார். அதன் பிறகு அந்தப் பெண்ணை விசாரித்தார்கள்.

அவள் "என் நகையைத் திருடியது இவன் அல்ல. என் நகையைத் திருடியவன் மொட்டைத் தலை. ரொம்பக் குள்ளம்" என்றாள்.

என் தலையிலே, அடர்த்தியான கிராப்பு. ஏணி மாதிரி ஒரே உயரம்.

நகை என்னுடையது என்று நான் வாதாடினேன். அவர்கள் நகை என்று சொல்ல விசேஷ அடையாளமில்லாததாலும் பெண்ணே 'திருடன் இவனல்ல' என்று சொல்லி விட்டதாலும் கோர்ட்டார், சந்தேகத்தின் அநுகூலத்தை எனக்குக் கொடுத்து விடுதலை செய்தார்கள்.

அன்று கோர்ட்டை விட்டு வெளியே வந்தபொழுது அவள் தகப்பனாரும் தாயாரும், "முழு மண்டு. எட்டு வயசாச்சே பொழிய மூளை கிடையாது. வழக்கைக் கெடுத்து விட்டது" என்று திட்டினார்கள்.

நான் மிகுந்த நன்றியுணர்ச்சியுடன் அந்தக் குழந்தையைப் பார்த்தேன்.

அப்புறம் தேங்காய் டெப்போவில் வேலைக்கு வைத்துக் கொள்ளுவார்களா? அட்வான்ஸ் பணம் ரூபாய் நூறையும் திருப்பிக் கொடுத்து விட்டு, "நீ போய்ச் சேர், அப்பனே! புண்ணியம் உண்டு!" என்று சொல்லிவிட்டார்கள்.

அந்தப் பெண் குழந்தையை ஒரு தடவை பார்த்து விட்டுப் போக ஆசைப்பட்டேன்.

மறுநாள் கோவிலூர் போனேன். அந்தச் சந்தில் காத்திருந்தேன். அந்தப் பெண்ணும் வந்தது. "பாப்பா, இங்கே வா" என்றேன்.

"எங்கிட்டே வேறே சங்கிலி இல்லையே!" என்றாள் அந்தப் பெண்.

என் மனம் என்னைச் சுட்டது.

"பாப்பா, நான்தான் திருடன். உன் பெயர், உங்க அப்பா பெயர் என்ன சொல். கூடிய சீக்கிரம் உனக்கு மறுபடியும் சங்கிலி வாங்கி அனுப்பி விடுகிறேன்" என்றேன்.

அவள் தன் பெயர், தகப்பனார் பெயரைச் சொன்னாள்.

"என்னை அடையாளம் தெரியாமல்தானே நான் திருடனில்லை என்று சொன்னாய்?"

"நீதான் திருடன் என்று எனக்குத் தெரியும்!"

"பின் ஏன் கோர்ட்டிலே நான் திருடனில்லை என்று சொன்னாய்?"

"'ஜீன்வால் ஜீன்' கதை தெரியுமா?"

"தெரியும்."

"அந்தக் கதையில் வரும் சாமியாராக நான் பள்ளிக்கூட நாடகத்திலே நடித்தேன். அதேமாதிரி நடந்து பார்க்கணும்னு ஆசையாக இருந்தது. சொன்னேன்" என்றாள்.

"கண்ணே! நீ எங்கிருந்தாலும் ஆயுசோடே இருக்கணும்!" என்றேன்.

மூன்று வருடகாலம் எங்கெங்கேயோ அலைந்தேன். கடைசியில் வடக்கே போனேன். யாரோ ஒரு பெரியவர் ஆதரித்தார். என் அதிர்ஷ்டச் சக்கரம் சுற்றி வந்து, பெரியவர் எனக்குச் சொத்தை எழுதி வைத்தார்.

ஐந்து வருடங்களுக்கு முன்பு சென்னைக்கு வந்து சேர்ந்து, ஒரு பெரிய வியாபாரத்தையும் ஆரம்பித்தேன். வியாபாரம் கொள்ளை லாபத்தைக் கொண்டு வந்தது.

இப்போது என் காரியாலயத்தில் ஒரு மானேஜர், ஆறு குமாஸ்தாக்கள்.

ஆனால் பழைய சம்பவங்களை நான் அனேகமாக மறந்துவிட்ட சமயத்தில்தான் அபர்ணா சஞ்சலாவிடம் திருடனைப் பற்றிச் சொன்னது என் காதில் விழுந்தது.

விஷயம் விளங்கிவிட்டது. அபர்ணாதான் அந்தப் பெண்.

அவளிடம் போய் நான் யார் என்று சொல்வதற்குத் துடித்தேன். ஆனால் அவள் வேறு யாரிடமாவது சொல்லி விட்டால் என் அந்தஸ்தும், கௌரவமும் என்ன ஆவது?

முடிவு செய்து விட்டேன். என்னை யார் என்று அவள் அறியக் கூடாது. அதே சமயம் அவளுக்கு என்னால் முடிந்த உதவிகளையும் அளிக்க வேண்டும்.

உடனே மானேஜரிடம் சொல்லி அவள் சம்பளத்தை இரட்டித்தேன்.

நான் நினைத்துச் செய்தது ஒன்று. அவள் நினைத்து, வெளியேறியது வேறு. யாரை நோவது? எங்கே தேடுவேன் அவளை? ஏங்கித் தவிக்கிறேன் நான்.

Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10
for the Proprietors Messrs Bharathan Publications Private Limited
Managing Editor: T. Sadasivam



வலியை அகற்ற
நான்கு
மருந்துகள்
கலந்துள்ள
# அனாஸின்
நான்
உபயோகிக்கிறேன்

- க்வினைன் ஸல்பேட்
- பினாஸிடின்
- காபின்
- அஸிடில்ஸாலிஸிலிக் ஆஸிட்

தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி, அல்லது தசைவலி இவைகளின் முதல் அறிகுறிகள் தென்பட்டவுடனேயே நான் 2 'அனாஸின்' வில்லைகளை உட்கொள்ளுகிறேன். அனாஸினைக்காட்டிலும் வேறு ஒன்றும் விரைவில் வலியை நிறுத்துவதில்லையென்றும், வேறு எதைக்காட்டிலும் 'அனாஸின்' அபாயமற்றதென்றும் கண்கூடாகப் பார்த்துள்ளேன். எவ்வித வலியையும், துரிதமாயும், அபாயமின்றியும், நிச்சயமாயும் அகற்ற, ஒரு டாக்டரின் குறிப்பு போல், நான்கு மருந்துகள் விஞ்ஞான முறையில் அனாஸினில் சேர்க்கப்பட்டுள்ளன. நீங்களும் உங்கள் வீட்டில் எப்பொழுதும் 'அனாஸின்' வைத்திருங்கள்.



**அனாஸின்**
நான்கு
மருந்துகளின்
கலவை

WILL NOT UPSET THE STOMACH



DOES NOT HARM THE HEART

**ANACIN**
TRADE MARK REGISTERED
TABLETS

FOR HEADACHE, COLDS, FEVER, TOOTHACHE & MUSCULAR PAIN

Made in India by
GEOFFREY MANNERS & COMPANY PRIVATE LIMITED
MAGNET HOUSE, DOUGALL ROAD, BOMBAY
*Trademark Proprietors*
WHITEHALL PHARMACAL COMPANY, NEW YORK, U.S.A.

Registered User:
GEOFFREY MANNERS & COMPANY PRIVATE LTD.

ஒரு பாக்கட் விலை 12 நயாபைசா

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

